தமிழ் - ஆந்திர மாநிலங்களில்

# வைணவம்



முனைவர். சாந்தாடி சதாசிவன்

# தமிழ் - ஆந்திர மாநிலங்களில் வைணவம்




முனைவர். சா. சதாசிவன்

# நூல் விளக்கம்


நூலின் பெயர் : தமிழ் – ஆந்திர மாநிலங்களில் வைணவம்

ஆசிரியர் பெயர் : முனைவர். சாந்தாடி சதாசிவன்

மொழி : தமிழ்

நூல்வகை : ஆய்வுக்கட்டுரை

உரிமை : ஆசிரியருக்கு

பொருள் : தமிழ் – ஆந்திர மாநிலங்களில் வைணவம்

பதிப்பு : முதற்பதிப்பு, ஜூன் 2002

படிகள் : 1000

நூல் அளவு : 18.5 X 12.5 செ. மீ.

எழுத்து : 12 புள்ளிகள்

தாள் : 13.7 கி. கி., வெள்ளைத்தாள்

பக்கம் : 220

கட்டமைப்பு : கார்டு போர்டு

விலை : ரூ. 60.00

நூல் வெளியீடு : வேணி பதிப்பகம்
6, நவோதயா காலனி,
இராயன்பாளையம்,
காரைக்கால் – 609 609

ஒளியச்சு : ஸ்ரீஅம்மன்கம்ப்யூட்டர்ஸ்& கிராஃபிக்ஸ்
149/1, மாதா கோவில் வீதி,
காரைக்கால் – 609 602.

அச்சிட்டோர் : குமரன் ஆப்செட் பிரஸ்,
124/3, காமராஜர் சாலை,
காரைக்கால் – 609 602.

# படையல்

என்றும் என் நெஞ்சில் நீங்காது வாழும்
எம்மூர் அம்மன் திருவடிகளுக்கு
இச்சிறு நூல் என் அன்புப் படையலாகும்.



ஏகாம்பரகுப்பம்
## ஸ்ரீ அருள்மிகு தொப்பையம்மன்

## வாழ்த்துரை

**T. D. செல்வம்** M. A., B. Ed.,
ஆசிரியர்,
ஜில்லா பரிசத் உயர்நிலைப்பள்ளி,
கொல்லபள்ளி, சித்தூர் மாவட்டம்
ஆந்திர மாநிலம்

முனைவர் சாந்தாடி சதாசிவன் அவர்களைச் சிறு வயது முதல் நன்கு அறிவேன். அவர் விடா முயற்சியால் படித்து உயர்ந்தவர். அவர் தமிழில் புலமை பெற்றிருப்பதோடு தெலுங்கு மொழியையும் நன்கு அறிந்தவர். தெலுங்கில் ஐயங்கள் ஏற்படும்போது அவர் என்னிடம் கேட்டு விளக்கம் பெறுவார். இப்பொழுது அவரின் 'தமிழ் – ஆந்திர மாநிலங்களில் வைணவம்' என்னும் நூல் வெளிவருதைக் கண்டு பெரிதும் மகிழ்ச்சியடைந்தேன். ஆழ்வார்களின் செல்வாக்கு தெலுங்கு இலக்கியங்களில் உள்ளதை அவர் விளக்கியுள்ளமுறை பாராட்டுதற்குரியதாகும். அவர் மேலும் இத்தகைய சிறந்த நூல்கள் பல இயற்றித் தமிழுக்கு நற்பணி புரிய வாழ்த்துகிறேன்.

அன்புடன்,
**T. D. செல்வம்**

# நால் முகம்

சமயம் மனிதனால் உருவாக்கப்பட்டது என்று கூறினாலும், ஒரு பண்பட்ட மனிதனை உருவாக்குவது சமயம்தான். மனிதன் தன்னையும் விஞ்சிய ஓர் ஆற்றல் உண்டு என்று நம்புகிறான். அவ்வாற்றல் தன்னையும் தான் வாழும் உலகத்தையும் இயக்குவதாகவும், காப்பதாகவும் எண்ணி அதற்குக் கட்டுப்பட்டு நடக்கிறான். அதனால் அவன் பண்பட்ட மனிதனாகவும் பிற உயிர்கள்மீது அன்பு காட்டும் மாமனிதனாகவும் உருவாகுகிறான்.

எனவே சமயம் மனிதனை ஒரு பண்பட்ட மனிதனாகவே ஆக்க முயற்சிக்கிறது. ஆனால், தன்னலவாதிகள் சிலர் சமயத்தைத் தங்கள் கேடயமாகப் பயனபடுத்திக் கொண்டு தங்களின் தவறான கருத்துக்கு ஏற்றாற்போல் அதைப் பயன்படுத்தி மக்களிடையே சமயப் பூசல்களையும் வன்முறைகளையும் உருவாக்குகின்றனர்.

நம் வரலாற்றை நோக்கும்பொழுதும் இத்தகைய பூசல்களும் வன்முறைகளும் பழங்காலத்திலிருந்தே காணப்படுகின்றன. அவற்றைத் தெய்வங்கள் உருவாக்கவில்லை, மனிதர்கள் தாம் உருவாக்கினர்.

மனிதன் ஒன்றை மட்டும் புரிந்துகொள்ள வேண்டும். மண் ஒன்றுதான் அது குயவனின் சிந்தனைக்கேற்றாற்போல் பல்வேறு வடிவங்களைப் பெறுகின்றது. மதமும் அதுபோலத்தான் பல்வேறுபட்ட சிந்தனைகளால் மதம் பல மதங்களாகத் தோன்றியது. ஆனால் அவை யாவும் கடலை நோக்கிச் செல்லும் ஆறுகள்போலத் தெய்வத்தை நாடிச் செல்பவையே.

இன்று உலகில் உள்ள மதங்களுள் மிகவும் பழமையானது இந்து மதம். இதில் ஆறு உட்பிரிவுகள்

உள்ளன. சைவம், வைணவம், கௌமாரம், காணாபத்யம், சௌரம், சாக்தம் என்பன அவை. இவற்றுள் சைவமும், வைணவமும் இந்து மதத்தின் இரு கண்களாக விளங்குகின்றன. பழங்காலத்தில் இவ்விரு சமயங்களிடையே போட்டி மனப்பான்மையும், பூசல்களும் இருந்தன. ஆனால் இன்றைய அறிவியல் உலகில் இவை எந்தவேற்றுமை மனப்பான்மையும் தோற்றுவிப்பதில்லை. வைணவர்கள் சைவத் திருத்தலங்களுக்கும் சைவர்கள் வைணவத் திருப்பதிகளுக்கும் சென்று வழிபடுகின்றனர்.

இன்று வைணவமும், சைவமும் நம் இந்தியாவில் மக்களின் அன்றாட வாழ்விலிருந்து பிரிக்க முடியாதவையாகப் பின்னிப்பிணைந்துள்ளன. குறிப்பாகத் தமிழ் ஆந்திர மாநிலங்களில் அவை ஏற்படுத்திய மாற்றங்கள் பலவாகும்.

இந்நூலில் பாகவத மதமாக வளர்ந்த வைணவம் வடநாட்டிலிருந்து தென்னாட்டிற்குப் பரவித் தமிழ்நாட்டில் நிலவிய திருமால் வழிபாட்டுடன் இணைந்து வளர்ந்த பாங்கும் அதன் செல்வாக்கு ஆந்திர நாட்டில் பரவிய முறையும் வரலாற்றின் அடிப்படையில் விளக்கப்பெற்றுள்ளன. இரு மாநில அரசர்கள் வைணவத்தின் வளர்ச்சிக்காகச் செய்த தொண்டுகளும் அவ்வரசர்களின் ஆட்சியில் தோன்றிய வைணவ நூல்களும் இந்நூலில் தரப்பட்டுள்ளன.

ஆழ்வார்களும் ஆச்சாரியர்களும் போற்றிய ஸ்ரீ வைஷ்ணவத்தின் செல்வாக்கு ஆந்திர நாட்டில் பரவிய பிறகு தெலுங்கு இலக்கியங்களிலும் தெலுங்கர்களின் வாழ்விலும் ஏற்பட்ட மாற்றங்களும் இந்நூலில் விளக்கமாகத் தரப்பட்டுள்ளன.

என் ஆய்வுக்கு உந்துதலாகவும் முனைப்பாகவும் விளங்கிய என் பேராசிரியர்களான முனைவர். பொன். சௌரிராசன், முனைவர் என். தர்மா ரெட்டி முனைவர்

மனுவேல் ஆகியோருக்குநான் என்றும் கடமைப்பட்டவனாவேன்.

இந்நூலை வெளியிடுவதற்கு முழுமுதற்காரணமாய் அமைந்து நிதியுதவி செய்த திருமலை-திருப்பதி தேவஸ்தானத்திற்கு முதற்கண் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். அதற்கு பேருதவி புரிந்த திரு. என். எஸ். ராமமூர்த்தி அவர்களுக்கும், திரு. சொக்கலிங்கம் அவர்களுக்கும் என் அன்பு கலந்த நன்றி.

தெலுங்கில் எழுந்த ஐயங்களுக்கு ஆர்வமுடன் விளக்கம் தந்து என் ஆய்வு செம்மையடைய பேருதவி செய்த அண்ணன் திரு. கே. டி. செல்வம் அவர்களுக்கு என் பாராட்டும் நன்றியும் என்றும் உரியன. இந்நூலை வெளியிட தேவையான உதவிகளைச் செய்த பள்ளி முதல்வர் ந. இராமலிங்கம் அவர்களுக்கும் மற்றும் என்னுடன் பணியாற்றும் திரு. வி. வெங்கடேசன், திரு. பி. இராமலிங்கம் ஆகியோருக்கு மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன். இந்நூல் வெளிவரக் கணிப்பொறியுடன் தொடர்புடைய பணிகளைச் செம்மையாகச் செய்த திரு. ச. செந்தில் ஆனந்தம் அவர்களுக்கும், திரு. கனகப்பன் குமார் அவர்களுக்கும் என் நன்றியுணர்வை உரித்தாக்குகிறேன்.

இந்நூல் அழகுற அச்சிட்டு வெளியிடக் காரணமாக அமைந்த காரைக்கால் குமரன் கம்ப்யூட்டர் ஆஃப்செட் பிரஸ் உரிமையாளர்களுக்கும் அதன் அங்கத்தினர்களான திரு. ஜே. அமீது, திரு. கே. ஆனந்தன் முதலானோருக்கும் சிறந்த முறையில் ஒளி அச்சு அமைத்துத் தந்த காரைக்கால் ஸ்ரீ அம்மன் கம்ப்யூட்டர்ஸ் & கிராஃபிக்ஸ் உரிமையாளர் திரு. ப. காளிதாஸ் அவர்களுக்கும் என் நன்றியையும், பாராட்டையும் அன்புடன் தெரிவித்துக் கொள்கிறேன்.

- ஆசிரியர்

# சுருக்க விளக்கக் குறிப்புகள்

| | | |
|---|---|---|
| உ. ஆ. | - | உரையாசிரியர் |
| கீ. எ. | - | கீர்த்தனை எண் |
| சி. வ. | - | சிம்மகிரி வசனமுலு |
| செ. எ. | - | செய்யுள் எண் |
| செ. எஎ. | - | செய்யுள் எண்கள் |
| துவி. ப. எ. | - | துவிபத எண் |
| துவி. ப. எஎ. | - | துவிபத எண்கள் |
| தொ. ஆ. | - | தொகுப்பாசிரியர் |
| தொகு. | - | தொகுதி |
| நூ. ஆ. | - | நூலாசிரியர் |
| நூ. எ. | - | நூற்பா எண் |
| ப. | - | பக்கம் |
| ப. ஆ. | - | பதிப்பாசிரியர் |
| பப. | - | பக்கங்கள் |
| பா. எ. | - | பாடல் எண் |
| பா. எஎ | - | பாடல் எண்கள் |
| மு. கூ. நூ. | - | முற்கூறிய நூல் |
| மொ. பெ. ஆ | - | மொழிபெயர்ப்பாசிரியர் |
| வ. எ. | - | வரி எண் |
| வ. எஎ. | - | வரி எண்கள் |
| வச. எ. | - | வசன எண் |
| வெ. | - | வெளியீடு, வெளியீட்டாளர் |
| Ed. | - | Edition, Editor |
| Ibid | - | Ibidem - in the same place or work |
| Op. cit. | - | opere citato - in the work cited |
| P. | - | Page |
| PP. | - | Pages |
| Vol. | - | Volume |

# உள்ளுரை

# 1

# தமிழ் - ஆந்திர மாநிலங்களில் வைணவம்

1.1.0 சமயம் - விளக்கம்
1.1.1 சமயத் தோற்றம்
1.1.2 சமயத்தின் பண்புகள்
1.1.3 சமயத்தின் பயன்
1.1.4 சமயங்கள் பல
1.2.0 இந்து மதம்
1.2.1 சைவம் - வைணவம்
1.2.1.1 சைவம்
1.2.1.2 வைணவம்
1.3.0 வட இந்தியாவில் வைணவம்
1.3.1 இருக் வேத விஷ்ணு
1.3.2 வாசுதேவ கிருஷ்ணன்
1.3.3 நாராயணன்
1.3.4 கோகுல கிருஷ்ணன்
1.4.0 தென்னாட்டில் வைணவம்
1.5.0 தமிழ் மாநிலத்தில் வைணவம்
1.5.1 சங்க காலம்
1.5.1.1 திருமாலின் ஐந்து நிலைகள்
1.5.2 இருண்ட காலம்
1.5.2.1 முதல் ஆழ்வார்கள்
1.5.3 பல்லவர் காலம்
1.5.3.1 பக்தி இயக்கம்
1.5.3.2 பிற ஆழ்வார்கள்
1.5.3.3 அரசர்கள் தொண்டு
1.5.4.0 சோழர் காலம்
1.5.4.1 ஆச்சாரியர்கள்

①

# 1.0 தமிழ் ஆந்திர மாநிலங்களில் வைணவம்

*இவ்வியலில் சமயம் பற்றிய விளக்கம், இந்து சமயங்களுள் ஒன்றாகிய வைணவ சமயம், அது வடநாட்டில் அமைந்த பாங்கு, தென்னகத்தில் குறிப்பாக தமிழ் -ஆந்திர மாநிலங்களில் வளர்ந்தமை ஆகியன விளக்கப் பெறுகின்றன. இறுதியில் இரு மாநிலங்களிலும் நிலவிய வைணவம் ஒப்பிட்டு ஆயப்படுகிறது.*

### *1.1.0 சமயம் விளக்கம்*

*'சமயம்' என்ற சொல் 'சமையம்' என்ற சொல்லின் திரிபாகும். சமையம் சொல்லின் வேர்ச்சொல் 'சமை' ஆகும். 'சமை' என்னும் சொல்லுக்குச் சமைத்தல் அல்லது ஒழுங்குபடுத்தப்படுதல் என்பது பொருளாகும். எனவே, சமயம் என்னும் சொல்லுக்குச் சமைக்கப்பட்டது*

அல்லது ஒழுங்குபடுத்தப்பட்டது என்று பொருள் கொள்ளலாம்.

அ. ச. ஞானசம்பந்தன் அவர்களும் "சமைக்கப்பட்டது தான் சமயம். மனிதன் தன் வாழ்வு வளம் பெறவும் மாக்கள் தன்மையிலிருந்து விடுதலை பெற்று மக்கள் தன்மை பெறவும் வழிவழியாகச் செய்யப்பட்டது அல்லது சமைக்கப்பட்டதுதான் சமயமாகும்"[1] என்று கூறுகிறார்.

ஆங்கிலத்தில் சமயம் என்பதை 'ரெலிஜன்' (Religion) என்று குறிப்பிடுவர். ரெலிஜன் என்ற சொல் 'ரிலிகெரி' (Relegere) அல்லது 'ரிலிகாரி' (Religare) என்ற சொல்லிலிருந்து பிறந்திருக்கலாம் என்றும் முதலாவது 'திரும்பத்திரும்பப் படிக்கப்பட்டுச் சிந்திக்கப்பட்டது' என்ற பொருளையும் இரண்டாவது 'கட்டுவது' என்ற பொருளையும் தருவதாக ஆக்ஸ்போர்டு புதிய ஆங்கில அகராதி கூறுகிறது. எனவே சமயம் என்பது திரும்பத்திரும்பப் படித்தறிந்து சிந்திக்கப்பட்டது அல்லது நன்கு கட்டப்பட்டது எனவும் அறியலாம்.

பொதுவாகச்சமயங்களில் கடவுள் அல்லது கடவுளர் உண்டு என்ற நம்பிக்கை காணப்பட்டாலும் இத்தகைய கடவுள் நம்பிக்கை இல்லாக் கொள்கைகளும் சமயம் என்னும் பெயர் தாங்கி நிலவுகின்றன. எடுத்துக்காட்டாக பௌத்த மதத்தில் கடவுள் பற்றிய நம்பிக்கை இல்லை. ஆனால் அதுவும் ஒரு மதமாக விளங்குகிறது. [2]

சமயம் என்னும் சொல்லை மதம், தருமம், நெறி என்னும் சொற்களாலும் குறிப்பிடுவர். மதம் என்னும் சொல் கருத்து, கொள்கை, கோட்பாடு என்னும் பொருள்களையும் தருமம் என்னும் சொல் அடிப்படைக் குணம், தன்மை, அடிப்படைப் பொருள், உயிர்த்தத்துவம் என்னும் பொருள்களையும் தரும். [3]

### 1.1.1 சமயத்தின் தோற்றம்:

மனிதன் தன்னையும் தன் சுற்றுப்புறத்தில் உள்ள பொருள்களையும் உயிர்களையும் ஆராயத் தொடங்கி, என்று தன்னையும் விஞ்சிய ஓர் ஆற்றல் உண்டு என அறியும் அறிவுத்திறம் பெறத்தொடங்கினானோ அன்றே சமயம் பற்றிய உணர்வும் அவனிடத்தில் வளரத் தொடங்கியது எனலாம்.

கே. கே. பிள்ளை அவர்கள் "சமயம் அச்சத்தின் அடிப்படையில் தோன்றியது" [4] என்பர். எனவே அச்சத்தின் காரணமாகத் தோன்றிய சமயம் பின்னர்க் கால வளர்ச்சியில் பயன் காரணமாகவும் அருள் காரணமாகவும் வளர்ந்து செம்மையானது எனலாம்.

### 1.1.2 சமயத்தின் பண்புகள்:

ஹெர்பர்ட் பிரபு (Lord Herbert of Cherbury) என்பவர் சமயம் என்பதன் பொதுப்படையான பண்புகளை இவ்வாறு கூறுவர்.[5]

1. உயர்வற உயர்ந்த ஒரு பொருள் உண்டு என்ற நம்பிக்கை. இப்பொருள் எல்லாவற்றுக்கும் முதற்காரண மாய் இருப்பது; வரம்பில்லாற்றுலுடைமை முதலிய பதினொன்று பண்புகளைக் கொண்டது.

2. இப்பொருளை வழிபடுவது மனிதனின் கடமை.

3. இப்பொருளுக்கு எதிராகச் செய்யும் பாவத்திற்கு மனம் வருந்தித் தகுந்த ஈடு செய்ய வேண்டும்.

4. இவ்வுலகம் அறவொழுங்குக்கு உட்பட்டதால் மக்கள் தங்கள் செயல்களுக்கு ஏற்பப் பயன்களை அடைவர்.

**1.1.3 சமயத்தின் பயன்:**

சமயம் மனிதனை விலங்கிலிருந்து வேறுபடுத்திக் காட்டுவதால் அவனைப் பண்புடையவனாக ஆக்குகிறது; அல்லல் நிறைந்த வாழ்க்கையில் உற்சாகத்தைத் தந்து மன நிறைவை ஏற்படுத்துகிறது. வெவ்வேறு இனம், பண்பாடுகள் சார்ந்த மக்களிடையே உள்ள இடைவெளியைக் குறைத்து அவர்களிடையே ஒற்றுமையை வளர்க்கிறது.

இன்று ஒரு சமயம் ஒரு குறிப்பிட்ட இனத்தவருக்கு அல்லது நாட்டவருக்கு மட்டும் உரியது என்று இல்லாமல் உலக மக்கள் அனைவருக்கும் உரியது என்னும் பொது மனப்பான்மை தோன்றியுள்ளதால் சமய உணர்வில்

பரந்த மனப்பான்மையைக் காண முடிகிறது.

இத்தகைய பயன்கள் சமயத்தின் விளைவால் ஏற்பட்டாலும் சமயங்களைத் தவறாகப் புரிந்து கொண்டதின் விளைவே இன்றைய பல்வேறு சமயத்தவரிடையே பூசல்கள் ஏற்படக் காரணமாகும்.

**1.1.4 சமயங்கள் பல:**

பல்வேறு காலங்களில் பல்வேறு போக்குகள் தெய்வ நம்பிக்கையில் ஏற்பட்டதால் உலகில் சமயங்கள் பல தோன்றலாயின. சமயம் என்பது பொதுப்பெயராக இருக்க, வணங்கும் இறைவர்களுக்கு ஏற்பச் சமயங்கள் பல்வேறு பெயர் கொண்டு தோன்றலாயின.

யூதமதம், டாவோயிஸம், கன்பூசிஸம், கிறித்தவம், இசுலாமியம், சௌராஷ்டிரம் (பார்ஸி), பௌத்தம், சமணம், சீக்கியம் எனச் சமயங்கள் பல உலகில் உள்ளன. அவற்றுள் ஒன்றாக - மிகவும் பழமையானதாகச் சிறந்து விளங்குவது இந்து மதமாகும்.

**1.2.0 இந்து மதம்:**

இந்தியாவில் உள்ள சமயங்களில் வேதங்களைப் பிரமாணமாக ஏற்றுக்கொள்ளும் சமயங்களை வைதிகச் சமயங்கள் என்றும் ஏற்றுக்கொள்ளாத சமயங்களை அவைதிகச் சமயங்கள் என்றும் கொள்வர். சைவம், வைணவம், சாக்தம் முதலான சமயங்கள் வைதிகச்

சமயங்களாகும். பௌத்தம், சமணம், உலகாயதம் முதலான சமயங்கள் அவைதிகச் சமயங்களாகும்.

வைதிகச் சமயங்கள் அனைத்திற்கும் ஏற்பட்ட பொதுவான பெயர்தான் இந்து மதம் என்பதாகும். எனவே, இந்து மதம் என்பது ஒரு குறிப்பிட்ட மதத்தை மட்டும் குறிப்பதன்று.

இந்து மதம் என்னும் சொல் எவ்வாறு வந்தது என்பது பற்றி அரங்க சீனிவாசன் அவர்கள் இவ்வாறு குறிப்பிடுவர்.

"இந்து மதம் வரலாற்றுக்கு முற்பட்ட பழமையானதாயினும், அதன் பெயராகிய இந்து என்னும் சொல் அண்மைக் காலத்ததேயாகும். மேனாட்டார் முதன் முதலில் புகுந்த இடம் சிந்து நதிப் பகுதியாகும். சிந்து நதியோடு தொடர்புடைய மதம் 'சிந்து மதம்' என்றனர். சிந்து என்பது மேனாட்டு உச்சரிப்பில் 'ஹிந்து' என மாறுவது இயல்பு. ஹிந்து (இந்து) மதம் வழங்கிய நாடு இந்தியா ஆனது.[6]

இந்து என்னும் சொல் புதியதாகத் தோன்றினாலும் அதற்கும் நம் சான்றோர்கள் அதன் இயல்பின்படிப் பொருள் கூறுவர்.

"பிற உயிர்கள் துன்பப்படுவதைக் கண்டால் அந்தத் துன்பம் தனக்கு வந்ததாகக் கருதுபவன் இந்து என்பது

நம்மவர் கொண்ட பொருள். இம் - இம்சையில், து- துக்கிப்பவன் என்பது பதவுரை. வடமொழியில் சப்த கல்பதரு என்ற இலக்கணநூல் ஒன்றுள்ளது. அதில் 'ஏயம் நிந் தூதி இதம் இந்து' என ஒரு தொடர் காணப்படுகிறது. மனம், மொழி, மெய் ஆகிய முக்கரணங்களாலும் குற்றம் நேராமல் கவனமாக ஒழுகுபவன் இந்து. அவன் சமயம் இந்து சமயம்"[7] என்ற பொருள் கூறுவர்.

இந்து மதத்தின் சிறப்பையும், பழமையையும் அறிந்து மேனாட்டு அறிஞர்கள் பலர் பலவாறு அதன் சிறப்பைக் கூறியுள்ளனர். அவர்களுள் சர். மானியல் வில்லியம்ஸ் அவர்களின் கூற்று குறிப்பிடத்தக்கதாகும். "இந்து சமயம், சமயங்கள் அனைத்திலும் உள்ள நல்ல கொள்கைகளையெல்லாம் ஏற்கிறது. அது எந்தச் சமயத்தையும் இகழ்ந்து ஒதுக்குவதில்லை. ஏற்புடைய கொள்கைகளை எல்லாம் ஏற்கிறது. அது எந்தச் சமயத்தையும் இகழந்து ஒதுக்குவதில்லை. ஏற்புடைய கொள்கைகளை உடன்பட்டுத் தழுவிக்கொள்கிறது. மனித குலம் அனைத்திற்கும் ஏற்ற சமயம் அது. இயற்கைக்குப் பொருந்தியதும் அது. உலகத்திற்கே இனியது. பிற மதங்களின் வளர்ச்சியைத் தடுக்க எண்ணும் குறுகிய கண்ணோட்டம் இந்து மதத்தில் இல்லை."[8] என்று அவர் கூறுவர். எனவே அயல் நாட்டவரின் கருத்துக்கும், அன்புக்கும் உரியதாளனது இந்து மதம் எனலாம்.

### 1.2.1 சைவம் - வைணவம்

இந்துக்கள் இருவேறு நோக்கங்களில் இருவேறு கொள்கைகளைக் கொண்டு இருவேறு பெயர்களால் இறைவனை வணங்கினர். அவ்வடிப்படையில் சைவ வைணவ மதங்களாக இந்துமதம் திகழ்ந்தது. இந்து மதத்தின் இரு கண்களாக அவை இன்று விளங்குகின்றன.

### 1.2.1.1 சைவம்

சிவனை முழு முதற் கடவுளாகக் கொண்டு வழிபடும் சமயமே சைவ சமயமாகும். சிவம் என்னும் சொல்லிலிருந்தே சைவம் என்னும் சொல் தோன்றியது. இதில் சைவ சித்தாந்தம், காஷ்மீர் சைவம், வீர சைவம் எனப் பல பிரிவுகள் உள்ளன. இந்தியாவின் வட பகுதியில் விளங்கும் சைவம் காஷ்மீர் சைவமாகும். தென் பகுதியில் உள்ள மைசூரில் விளங்கும் சைவம் வீர சைவமாகும். இன்று சைவ சித்தாந்தம் என்று பேசப்படும் சைவம் மட்டும் தமிழ்நாட்டில் மட்டுமே வழங்கப்படுவதாகத் தெரிகிறது.[9] மேலும் இச்சைவத்தில் காபாளிகம், பாசுபதம் முதலான உட்பிரிவுகளும் உள்ளன.

சைவ ஆகமங்கள் மொத்தம் 28 உள்ளன. இவற்றுள் பத்து ஆகமங்கள் இறைவனால் நேரே அருளப்பட்டன என்றும் ஏனையவை இறைவழி நின்ற பெரியோர்களால் ஆக்கப்பட்டனஎன்றும்கருதுவது மரபு. இவ்வாகமங்களின்

அடிப்படையில் தத்துவங்கள் வகுக்கப்பட்டுள்ளன.

**1.2.1.2 வைணவம்**

"வைஷ்ணவம்" என்பதையே தமிழில் வைணவம் என்பர். "வைஷ்ணவம்" என்பதற்கு விஷ்ணு சம்பந்தமுடையது என்று பொருள். 'விஷ்ணு' என்பதற்கு எங்கும் பரந்துள்ளவன் என்று பொருள். [10] எனவே எங்கும் பரந்து நிறைந்துள்ள விஷ்ணுவின் தொடர்புடைய சமயம் வைணவம் எனத் தெளியலாம்.

வைணவத்தை மேலும் விளக்கும் வகையில் இராமசாமி இராமாநுசதாசர் அவர்கள் இவ்வாறு கூறுவர்.

"வைஷ்ணவ சமயம் வைஷ்ணவமாகிய சமயம் என்று விரிந்து எல்லா தேசக் காலங்களிலும் வியாபித்துள்ள சமயம் என்றும் பொருள் தரும். வைணவ குருபரம்பரையிலே முதல் குரு திருமகள் கேள்வனான விஷ்ணு. விஷ்ணுவை முதலிலே கொண்ட மதமாகையாலே வைஷ்ணவ மதம் என்னும் பேர் பெற்றதென்றும் கூறலாம்." [11] என்று கூறுவர்.

இந்துக்கள், பரம்பொருளே பிரமன், விஷ்ணு, சிவன் என்னும் மும்மூர்த்திகளாக நின்று முறையே உலகைப் படைத்தும் காத்தும் அழித்தும் அருள் செய்வதாகக் கூறுவர். வைணவர்கள் இதை ஏற்றாலும் தாங்கள் வழிபடும் விஷ்ணுவே இம்மும்மூர்த்திகளுக்கும் பரம்பொருள் என்று கூறுவர். இதைப் பொய்கையாழ்வார்,

**"கைய வலம்புரியும் நேமியும் கார்வண்ணத்து
ஐய மலர்மகள்நின் ஆகத்தாள் - செய்ய
மறையான்நின் உந்தியான் மாமதில்மூன் றெய்த
இறையான்நின் ஆகத்து இறை" 12**

என்று திருமாலைப் போற்றும் வகையில் குறிப்பிடுவர்.

உலகில் உள்ள சமயங்கள் அனைத்திலும் மிகவும் பழமையானதுவைணவம் என்றும் உலகம் என்று தோன்றியதோ அன்றே வைணவமும் தோன்றியது என்றும் வைணவப் பற்றுடையோர் கூறுவர். ஆனால் வரலாற்று ஆசிரியர்கள் இதை ஏற்பதில்லை. வரலாற்றின் அடிப்படையிலேயே வைணவத்தின் வளர்ச்சியைக் கூறுகின்றனர்.

### 1.3.0 வட இந்தியாவில் வைணவம்

வைணவத்தின் வளர்ச்சியை வரலாற்று முறையில் நோக்கும்போது பழைமையான வைணவத்தில் நான்கு விதமான கருத்தோட்டங்கள் நிலவுகின்றன. அவை 1. வேதகால விஷ்ணு, 2. வாசுதேவ கிருஷ்ணன், 3. நாராயணன், 4. கோகுல கிருஷ்ணன் என்பன. இந்நான்கு கருத்தோட்டங்கள் வடநாட்டில் நிலவி கால வளர்ச்சியில் இணைந்து ஒரே தெய்வ வழிபாடாயின.

### 1.3.1 இருக்வேத விஷ்ணு (கி. மு. 1400 - 1000)

"இருக்வேதம், விஷ்ணுவைச் சூரியனோடு தொடர்புடையனவாகக் கூறுகிறது. இவனையே பின்னர்

புராணங்கள் சூரியநாராயணனாகப் போற்றுகின்றன. மேலும் இவ்வேதம் மூவடிகளால் உலகை மறைத்ததாகவும், விஷ்ணுவின் பரமபதத்தில் தேனருவி பாய்வதாகவும் அதை அடைய ரிஷிகள் அவாவுகின்றனர் என்றும் கூறுகிறது. சதபதப்பிரமாணம் விஷ்ணுவை வேள்வியுடன் இணைக்கிறது. யக்ஞம் அவன்தானாம். இதன் வளர்ச்சியே யக்ஞநாராயணன் ஆகும். முதலில் விஷ்ணு யக்ஞத்தின் மூலமே வழிபடப்பட்டான். அவன் பரம்பொருளாக வணங்கப்பட்டான் என்றோ தத்துவங்களோடு தொடர்பிருந்தது என்றோ கூறுவதற்கு இடமில்லை" [13]

### 1.3.2 வாசுதேவகிருஷ்ணன்

"மகாவீரர், புத்தர் இவர்களுக்குச் சற்றுமுன் கி. மு. 5ஆம் நூற்றாண்டின் அளவில் வடக்கிவ் வாசுதேவ வழிபாடு கொண்ட பாகவதமதம் தோன்றியது. இதைத் தோற்றுவித்தவன் விருஷ்ணி மரபைச் சேர்ந்த வாசுதேவன் ஆவான். இம்மதம் வைதிகமானது. வசுதேவன், சங்கர்ஷணன் (பலதேவன்), வாசுதேவன் (கிருஷ்ணன்), பிரத்யும்நன், அநிருத்தன் ஆகியோர் விருஷ்ணி குடும்பத்தைச் சார்ந்தவர்கள். இப்பஞ்ச வீரர்கள் விருஷ்ணி மக்கள் (யாதவர், சாத்வதர் ) என்றும் அழைக்கப்பட்டனர். தங்கள் இனத்திற்குப் பாதுகாப்பாக இருந்ததால் சிலைவைத்து தீபதூபம் காட்டிப் பூ இட்டு வழிபட்டனர். கி. பி. முதல் நூற்றாண்டைச் சார்ந்த மதுரா பக்கத்தில் தோன்றிய 'மொரா' கல்வெட்டு இவ்வைந்து விருஷ்ணி வீரர்களை வாசுதேவன் என்கிறது. எனவே,

இவ்வழிபாடே காலப் போக்கில் வாசுதேவ வழிபாடாகவும் ஒரேதெய்வ பாகவத சமயமாகவும் பஞ்ச வீரர்கள் வியூகங்களாகவும் பரிணமித்திருத்தலைக் காணலாம். பதஞ்சலி முனிவர் காலத்தில் (கி. மு. 2ம் நூற்றாண்டு) வியூகக் கொள்கைகள் தொடங்கி பாரதம் நாராண்யத்தில் (கி. பி. 6-ஆம் நூற்றாண்டு) முழு வளர்ச்சியடைந்தன. கீதையில் கிருஷ்ணன் "நான் விருஷ்ணிகளில் வாசுதேவன்" என்று கூறுவதால் கிருஷ்ணனும் வாசுதேவனும் ஒருவராயினர். [14]

**1.3.3 நாராயணன்**

"சதபத பிரமாணத்தில் நாராயணனை "அவன் எங்கும் பரந்து அனைத்தையும் தன்னுள் அக்கிக் கொண்டிருக்கிறான்; பஞ்சராத்ரசத்ரம் (ஐந்து நாள் யாகம்) யாகம் ஒன்றைக் கற்பித்து நடத்தி அதன் மூலம் அனைத்தினும் முதன்மை வாய்ந்து எல்லாமுமாய் இருக்கின்றான்" என்று பரம்பொருள் நிலைக்குப் பேசப்பட்டுள்ளது. அப்போது விஷ்ணுவோடு அவனுக்கு எந்தவிதத் தொடர்பும் இல்லை. ஆனால் தைத்ரிய ஆரண்யகத்தில் நாராயணன் பரம்பொருளாகவே காட்சியளிக்கின்றான். 'அவனே இந்த உலகத்திற்குக் காரணன்; ஆனந்தமயமானவன்; ஆதித்திய மண்டல மத்தியிலே எழுந்தருளியிருக்கும் தாமரைக் கண்ணனான புருஷன் அவனே' என்று அது கூறும். மேலும் வாசுதேவன் என்பதும் விஷ்ணு என்பதும் நராயணன்தான் என்கிறது அந்நூல். வாசுதேவனும் நாராயணனும் விஷ்ணுவும் கலந்துபோனதால் பாரதம் மூவரையும்

ஒருவராகவே சுட்டுகிறது. பரம்பொருளாகிய நாராயணன், நரன், நராயணன், அரி, கிருஷ்ணன் என்னும் நான்கு வடிவங்களுடன் தரும தேவதைக்குப் புதல்வனாய்த் தோன்றினான் என்று பாரத சாந்தி பருவம் கூறும். இவற்றிலிருந்து யக்ஞ - வேள்விகளின் பரமபுருஷனான நாராயணன் பின்னர் விஷ்ணு வாசுதேவ வழிபாட்டுடன் இணைந்ததைக் காண முடிகிறது." [15]

**1.3.4 கோகுல கிருஷ்ணன்**

'ஆபீரர் அல்லது ஆஹீர் எனப்படும் ஆயர்கள் துவாரகையைச் சுற்றிலும் கி. பி. முதல், இரண்டு நூற்றாண்டுகளில் சிறந்து விளங்கி வந்தனர். சிறுபிள்ளை கண்ணன் வழிபாட்டைக் கொண்டிருந்தனர். இவர்கள் காலத்திலேயே கோபாலனை மையமாகக் கொண்ட கவர்ச்சியான கதைகள் தோன்றின. அவனும் வாசுதேவனுடன் ஒன்றியிருந்தான். இச்செய்தி கி. பி. 3-ம் நூற்றாண்டைச் சேர்ந்த அரிவம்சத்தில்தான் முதன்முதலில் காணப்படுகிறது' [16].

இவற்றைக் கருத்தில் கொண்டு கு.அருணாசலக் கவுண்டர், "இந்த விருஷ்ணி வீரன் வாசுதேவன், வேதகால தெய்வமாகிய விஷ்ணுவுடனும், ரிஷி நாராயணனுடனும் ஒன்றி நடப்பிலிருந்த பாமர தேவதைகளையும் வழிபாடுகளையும் ஏற்று உபநிடதங்களின் பரம்பொருளைத் தழுவி வளர்ந்தான். இந்த வளர்ச்சியிலே புராணங்களின் கோகுல கிருஷ்ணனையும் உட்கொண்டு ஏக தெய்வக்

கொள்கையுடன் வைணவம் பரிணமித்திருக்கிறது. இது நேர்ந்தது கி. மு. 2 ஆம் நூற்றாண்டளவிலே எனக் கருதலாம்"[17] என்பர். ஆர். ஜி. பண்டார்க்கர்,[18] ஓம் பிரகாஷ்[19] ஆகியோரும் இக்கருதையே கூறுவர். கோகுலகிருஷ்ணன் வழக்கம் மட்டும் கி. பி. முதல் நூற்றாண்டில் இணைந்திருக்க வேண்டும் என்று அவர்கள் கூறுவர்.

### 1.4.0 தென்னாட்டில் வைணவம்

வடக்கில் இருந்த பாகவத மதம் தென்னாட்டிலும் பரவியிருந்தது. கி. பி. இரண்டாம் நூற்றாண்டைச் சேர்ந்த நாசிக் சாசனத்தில் ஆந்திர மன்னன் கௌதமிபுத்திர சாதகர்ணி பலராமனுக்கும் கேசவனுக்கும் நிகராக ஒப்பிட்டு கூறப்பட்டுள்ளான். அதே நூற்றாண்டைச் சேர்ந்த சின்ன சாசனம் வாசுதேவ வழிபாட்டுடன் தொடங்குகிறது.[20] எனவே கி. பி. இரண்டாம் நூற்றாண்டிற்கு முன்பே தென்னகத்தில் வைணவம் குறிப்பாக, பாகவதமதம் பரவியிருந்ததெனக் கருதலாம்.

### 1.5.0 தமிழ் மாநிலத்தில் வைணவம்

தமிழ் நாட்டின் வரலாற்றையும் பண்பாட்டையும் விளக்கும் வரலாற்று ஆசிரியர்கள் அரசர்களின் ஆட்சி அடிப்படையில் காலத்தை வகைப்படுத்திக் கூறுவதாலும் சமயத்தின் வளர்ச்சியும் அரசர்களைச்சார்ந்து இருப்பதாலும் அக்கால அடிப்படையிலேயே வைணவத்தின் வளர்ச்சியும் இங்கு ஆயப்பெறுகிறது.

### 1.5.1 சங்க காலம்

சங்ககாலம் பற்றி அறிஞர்களிடையே பல்வேறு கருத்துகள் நிலவுகின்றன. அவற்றை நோக்கும்போது கி. மு. 4-ஆம் நூற்றாண்டு முதற்கொண்டு கி. பி. 3-ஆம் நூற்றாண்டு வரை உள்ள காலத்தைச் சங்க காலம் எனக் கொள்வது ஏற்புடையதாக உள்ளது.

இக்காலத்தில் சேர சோழ பாண்டியர்கள் என்னும் மூவேந்தர்களும் குறுநில மன்னர்கள் பலரும் தமிழகத்தை ஆண்டு வந்தனர்.

சங்க காலத்தில் நிலவிய வைணவத்தை அறிய முதலில் பயன்படும் நூல் தொல்காப்பியமாகும். இந்நூலில் நிலத்தை நான்காகப் பிரித்து அந்நிலங்களுக்குரிய தெய்வங்களைச் சுட்டுமிடத்தில் தொல்காப்பியர் "மாயோன் மேய காடுறை உலகமும்" [21] என்று கூறுவர். "மேய" என்னும் சொல்லுக்கு 'விரும்பிய' என்று பொருள்கொண்டு உ. வே. சா. அவர்கள் "முல்லைத் திணையில் திருமாலுக்குப் பிரீதி உண்டென்றும் அதனால் அங்கே அவர் விரும்பித் தங்கி உள்ளார் என்றும் அறியவேண்டும்" [22] என்று கூறுவர். எனவே, தொல்காப்பியர் காலத்திற்கு முன்பே திருமால் வழிபாடு முல்லை நில மக்களிடையே (ஆயர்) இருந்ததுடன் திருமாலும் முல்லை நிலத்தை விரும்பித் தன் உறைவிடமாகக் கொண்டிருந்தான் என்பதை அறியலாம்.

**"மாயோன் மேய மன்பெருஞ் சிறப்பிற்**
**தாவா விழுப்புகழ் பூவை நிலையும்"** [23]

என்னும் நூற்பாவில் மன்னர்க்குக் காக்கும் கடவுளான திருமாலை ஒப்பிட்டுக் கூறும் பூவை நிலையைத் தொல்காப்பியர் குறிப்பிடுவர். இதனாலும் அகத்திணை ஒழுக்கம் தொடங்குவதற்கு இடமான குறிஞ்சி நிலத்தையும் அதன் தெய்வமான முருகனையும் முதலில் கூறாமல் முல்லை நிலத்தையும் முல்லை நிலக் கடவுளான திருமாலையும் முதலில் கூறுவதனாலும் திருமாலுக்கு இருந்த தலைமை சிறப்பை நன்கு அறிய முடிகிறது.

**'நூலே கரகம் முக்கோல் மணையே**
**ஆயுங் காலை அந்தணர்க் குரிய'** [24]

என்னும் நூற்பாவில் வரும் முக்கோல் தரித்த அந்தணர்கள் வைணவத்துறவிகளே என்று ம. ராதாகிருஷ்ணன் அவர்கள் கூறுவர்.[25] இதனால் இந்நூற்பாவில் திருமாலை வழிபடும் துறவிகளைக் குறிப்பிடுதலைக் காணலாம்.

மு. இராகவையங்கார்[26], கு. அருணாச்சலகவுண்டர்[27] ஆகியோர் 'தொல்காப்பியர் தெய்வக் குழந்தையாகிய கண்ணனிடம் ஆய மகளிர் கொண்ட காதலைக் கருதியே மானிடப் பெண்கள் கடவுளிடத்தும், கடவுள் குழவிகளிடத்தும் காதல் கொள்ளுதற்குரியர் (தொல். பொருள். நூ. எ. 83, 84) என்று இலக்கணமும்

வரையறுத்துள்ளார். இவ்வகையில் அமைந்தனவே பின் வந்த ஆழ்வார்கள் முதலியோரின் அகத்துறைப் பாடல்கள் பலவும் ' என்று கூறுவர்.

தொல்காப்பியர் காலத்திலேயே மாயோன் ஆன கண்ணன் வழிபாடு இருந்தது போலவே அவன் தமையனான பலதேவன் வழிபாடும் பரவியிருந்ததைப் பலதேவனுக்குரிய பனைக் கொடியை அவர் எழுத்ததிகாரத்தில் சுட்டுவதிலிருந்து தெரிகிறது. [28] இதன் வளர்ச்சியைச் சங்க இலக்கியங்களில் காணலாம்.

தொடக்கத்தில் முல்லை நிலத்திற்கே உரியதாக இருந்த திருமால் வழிபாடு நாளடைவில் குறிஞ்சி முதலிய நிலங்களிலும் பரவியது எனலாம்.

மாயோன் ஆன திருமால் கருடக் கொடியை உடையவன்;[29] கையில் சக்கரப்படையையும் சங்கையும் கொண்டவன்[30]; திருமகள் வாழும் மார்பில் திருத்துழாய் மாலை அணிந்தவன்[31]; பாம்பணை மேல் பள்ளி கொண்டவன்[32]; பிரமனைத் தன் உந்திக் கமலத்தில் தேற்றுவித்தவன்[33] என்பனதிருமால் பற்றி வருவனவாகும்.

மாயோன் பிறந்த ஓணத்திருநாள் மிகவும் சிறப்புடன் கொண்டாடப்பட்டதை மதுரைக்காஞ்சி குறிப்பிடுகிறது. மேலும் அந்நூல் குழந்தைகளைத் தாய்மார்கள் தம் ஒக்கலிலே இருக்கிக் கொண்டு கணவரோடு சென்று காக்கும் கடவுளாகிய திருமாலைப்

பூவும் புகையும் கொண்டு வணங்குவதைக் கூறுகிறது.[34] பலதேவன்பற்றியசெய்திகளும்சங்கஇலக்கியங்களில்உள்ளன. பால்நிறவண்ணன்[35]; நாஞ்சில் படையையும் பனைக் கொடியும் உடையவன்[36] என்று புறநானூற்றில் உள்ளது. பலதேவனையும், மாயோனையும் இணைத்துச் சங்க இலக்கியங்கள் சுட்டுவதும் உண்டு. சோழனும், பாண்டியனும் ஒருங்கிருந்த காட்சியைப் புறநானூறு "இருபெருந் தெய்வமும் உடன் நின்றாங்கு" [37] என்று கூறுகிறது. மலையும் அருவியும் தோன்றும் காட்சிக்கு நற்றிணை மாயோனையும் பலதேவனையும் உவமிக்கிறது.[38]

கி. மு. இரண்டாம் நூற்றாண்டைச் சேர்ந்த கோசண்டி (Ghosundi, ராஜஸ்தான்) சாசனமும் கி. மு. முதல் நூற்றாண்டைச் சார்ந்த நானாகாட் (Nannaghat) சாசனமும் வட பகுதியில் பரவியிருந்த வாசுதேவன் சங்கர்சணன் வழிபாட்டைக் குறிப்பிடுவதாக ஓம் பிரகாஷ் அவர்கள் கூறுவார்.[39] அத்தகைய வழிபாடு சங்க காலத்திலும் இருந்ததை மேற்கூறிய செய்திகள் குறிப்பிடுகின்றன. எனவே, வாசுதேவனையும் பலதேவனையும் வழிபடும் பாகவத மதம் சங்க காலத்தில் பரவியிருந்ததை உணரலாம்.

முல்லைப் பாட்டில் வாமனாவதாரம் பற்றியும்[40] அகநானூற்றில் கண்ணன் குருத்தொசித்தது[41] பற்றியும் புறநானூற்றில் அவுணர்கள் ஞாயிற்றை மறைக்க அதை மீட்டது[42] பற்றியும் அமைந்த குறிப்புகள் உள்ளன.

சீதையை இராவணன் கவர்ந்து சென்ற போது அவள் வீசிய அணிகளைக் குரங்குகள் அணிந்து மகிழ்ந்ததாகப் புறநானூறு குறிப்பிடுகிறது.[43] இவற்றால் திருமாலின் அவதாரம் பற்றிய செய்திகளும் சில சங்க காலத்தில் இருந்தமை புலப்படுகிறது.

சிவனையும், திருமாலையும் ஒன்றாக இணைத்துக் கூறும் உவமை ஒன்று அகநானூற்றில் காணப்படுகிறது.

**"இருபெருந் தெய்வத்து உருவுடன்**
**இயைந்த தோற்றம்போல**
**அந்திவான மொடு கடலணி**
**கொளாஅ வந்த மாலை"** [44]

என்பது அவ்வுவமை. இதனால் இருபெரும் தெய்வமான சிவனையும் திருமாலையும் வேறுபாடின்றி ஒன்றாகக் கருதியமை புலப்படுகிறது.

திருமாலின் வழி வந்தவன் தொண்டைமான் இளந்திரையன் என்று பெரும்பாணாற்றுப் படையும்[45] திருமாலைத் தன் மனத்துள்வைத்தவன்செல்வக்கடுங்கோன் என்று பதிற்றுப்பத்தும்[46] கூறுகின்றன. களங்காய்க்கண்ணி நார்முடிச் சேரல் என்பவன் திருமாலை வழிபட்ட முறையைப் பதிற்றுப்பத்து குறிப்பிடுகிறது. எனவே அரசர்கள் சிலரும் திருமால் பக்தராக இருந்தனர் என அறியலாம்.

வைணவத்தின் முழு வளர்ச்சியைப் பரிபாடலில் காணலாம். இந்நூலில் உள்ள ஆறு பாடலும் புறத்திரட்டில் உள்ள ஒரு பாடலும் திருமாலை முன்னிலையாகப் பரவுகின்றன. அதனால் பிற்காலத்தில் எழுந்த வைணவ பக்தி இலக்கியத்திற்கு வித்து பரிபாடலே ஆகும். மேலும் இவை இசையோடு பாடப்பட்டனவாகும். இதைக் கருத்தில் கொண்ட ஆர். சாரங்கபாணி அவர்கள் "பரிபாடலில் புலவர்கள் தங்கள் நலனுக்காவல்லாமல் உறவினருக்காகவும் மக்களுக்காகவும் திருமாலை வணங்கியதைக் காண முடிகிறது. இக்கொள்கையே பின்னாளில் ஆழ்வார்களால் வளர்க்கப்பட்டதைக் காண்கிறோம். எனவே பரிபாடல் புலவர்கள் பின்னாளில் வைணவ பக்தி இலக்கியங்கள் தோன்றுவதற்கு முன்னோடிகளாய் இருந்தனர் எனக் கூறலாம். அதனால் அவர்கள் பரிபாடலின் ஆழ்வார்கள்"[47] என்று கூறுவர்.

திருமால் வேதத்தின் முடிவாகத் திகழ்வதை "வேதத்து மறை நீ"[48] "நீயென மொழியுமால் அந்தணர் அருமறை"[49] என்ற தொடர்கள் சுட்டுகின்றன.

திருமாலின் திருவடிகளை "மறுபிறப்பிலுக்கும் மாசில் சேவடி"[50] என்று இளவெயினனார் சிறப்பித்துப் போற்றுவர்.

பலதேவனும் திருமாலும் ஒருவரே என்பதையும் திருமாலின் அவதாரம் பலதேவன் என்பதையும்

"இளையன் என்போர்க்கு இளையை" [51] என்னும் தொடர் குறிப்பிடுகிறது.

### 1.5.1.1 திருமாலின் ஐந்து நிலைகள்

திருமால் ஐந்து நிலைகளில் நின்று உயிர்களை உய்விப்பதாக வைணவப் பெரியோர் கூறுவர். பரத்துவம், வியூகம், விபவம், அந்தர்யாமி, அர்ச்சை என்பன அவை. இந்த ஐந்து நிலைகளையும் பரிபாடல் குறிப்பிடுகிறது. இறைவன் பரத்துவ நிலையில் (உயர்ந்த நிலையில்) விளங்கி இருத்தலை,

> **"தன்னுரு உறழும் பாற்கடல் நாப்பண்**
> **மின்னவிர் சுடர்மணி ஆயிரம் விரித்த**
> **கவைநா அருந்தலைக் காண்பின் சேக்கைத்**
> **துளவம் சூடிய அறிதுயிலோன்"** [52]

என்னும் பரிபாடல் தொடர் விளக்குகிறது. இது இறைவன் பரமபதத்தில் (வைகுந்தத்தில்) இருக்கும் நிலையைக் கூறுவதாகும்.

வியூகம் என்பது பிரிந்து நிற்றலாகும். அதாவது வாசுதேவன், சங்கர்சணன், பிரத்தியும்நன், அநிருத்தன் எனப் பாற்கடலில் பிரிந்து நின்று விளங்குவதாகும். இதைப் பரிபாடல்,

> **"செங்கண் காரி கருங்கண் வெள்ளை**
> **பொன்கண் பச்சை பைங்கண் மால்"** [53]

என்று குறிப்பிடுகிறது.

விபவம் என்பது உயிர்களைக் காக்க திருமால் எடுக்கும் அவதாரங்களாகும். வராகம்[54] (பன்றி), ஆமை[55], கண்ணன்பலதேவன்[56], நரசிம்மம்[57] என்னும்அவதாரங்கள் பரிபாடல்களில் வருகின்றன. நரசிம்ம அவதாரம் பற்றிய குறிப்பு முதன் முதலில் பரிபாடலில்தான் காண முடிகிறது.

"தீயினுள் தெறல் நீ பூவினுள் நாற்றம் நீ
கல்லினுள் மணியும் நீ சொல்லினுள் வாய்மை நீ"[58]

என்று தொடங்கும் பாடல் உலகத்தில் உள்ள பொருள்கள் உயிர்கள் அனைத்திலும் உள்ளும் புறமும் கலந்து நிற்கும் அந்தர்யாமத்தைக் குறிப்பிடுகிறது.

அர்ச்சை என்பது மக்கள் வழிபடுதற்குரிய திருவடிவமாக விளங்குவதாகும். கோவில்களிலும் வீடுகளிலும் தொழ வைத்த வடிவங்களைஇது குறிக்கிறது. திருமாலிருஞ்சோலையிலும்[59] இருந்தையூரிலும்[60] இறைவன் எழுந்தருளியிருத்தலைப் பரிபாடல் குறிப்பிடுகிறது.

சிலப்பதிகாரத்திலும் திருமால் பற்றிய செய்திகளும் வைணவக் கோட்பாடுகளும் புராணச் செய்திகளும் பல இடங்களில் காணப்படுகின்றன. ஆய்ச்சியர் குரவையில் இவற்றைக் காணலாம். பின்

வந்த வைணவப் பெரியோர்களால் மிகவும் சிறப்பித்துக் கூறப்பட்ட நாராயண மந்திரம் இந்நூலில் இடம் பெற்றுள்ளது.

"நாராயணவென்னா நாவென்ன நாவே" [61]

என்று சமணப் பெரியோரான இளங்கோவடிகள் பக்திப் பரவசத்துடன் பாடுவார்.

இன்று வடநாட்டவர்கள் போற்றும் "ராஸலீலை" அல்லது "ராஸகிரீடை" [62] என்பது சிலப்பதிகாரத்தில் காணப்பெறும் ஆய்ச்சியர் குரவையின் வளர்ச்சியே என்பர் கு. அருணாச்சலக் கவுண்டர் அவர்கள். [63] மேலும் நம் ஆய்ச்சியர் குரவையிலிருக்கும் நப்பின்னையே வடநாட்டவர் ராதையாக வளர்ந்திருக்கிறார் என்றும் அவர் கூறுவர். [64]

மணிமேகலையில் மணிமேகலை வைணவ வாசியிடம் சென்று பாடம் கேட்டதைச் சாத்தனார் குறிப்பிடுவர். [65] எனவே, சாத்தனார் காலத்தில் வைணவவாதிகள் சிலர் இருந்ததை அறியலாம்.

திருமால் திருவரங்கம், [66] திருவேங்கடம், [67] திருமாலிருஞ்சோலை, [68] திருவெஃகா, [69] இருந்தையூர் [70] ஆகிய இடங்களில் வழிபடும் மூர்த்தியாகக் கோவில் கொண்டிருத்தலைக் காணலாம். பலதேவனுக்கும்

தனியாகக் கோவில் இருந்ததைச்சிலம்பில் காணலாம். [71]

மேற்கூறிய கருத்துகளிலிருந்து தொல்காப்பியர் காலத்திற்கு (கி. மு. 4 நூற்றாண்டு) முன்பே மாயோனான கண்ணன் வழிபாடு இருந்தென்றும் பின்னர் அது சங்க இலக்கியங்களில் பரவலாகக் காணப்பெறுகின்றது என்றும் அறியலாம். மேலும் திருமால் பற்றிய செய்திகளும் பல சங்ககால மக்களிடையே பரவியிருந்தமையை அறியலாம். இவற்றைக் குறித்து ஆராய்ந்த ஏ. எஸ். வரதராஜ ஐயர் அவர்கள் "தொன்றுதொட்டே தமிழ்நாட்டில் வைணவம் உண்டெனினும் திருமாலின் வியூகாவதாரங்களும் அவன் கோகுலத்தில் பிறந்து வளர்ந்த செய்திகளும் தமிழ்நாட்டில் கி. மு. முதல் நூற்றாண்டின் பின்னரே வழங்கலாயிற்று" என்று கூறுவர். [72] எனவே வைணவ சமயத்தின் கோட்பாடுகள் சில சங்க இலக்கியத்தில் சிறப்பாகப் பரிபாடலில் இருத்தலைக் காண்கிறோம்.

சங்க காலத்தில் சமயம் வாழ்க்கை நெறியாக இருந்ததேயல்லாமல் அது ஒரு இயக்கமாக வளர்ந்து சமுகத்தை ஆட்டிப்படைக்கவில்லை. சிவனும் திருமாலும் வணங்கப்பட்டு வந்தாலும் அன்று சைவம், வைணவம் என்ற பிரிவினைகள் இல்லை. ஆனால் வைணவம் உருவாவதற்கான அடிப்படைக் கோட்பாடுகள் அன்று தோன்றியிருந்தன.

### 1.5.2 இருண்ட காலம் (கி.பி. 250 - 600)

இக்காலத்தில் தமிழகம் முதன் முதலில் அந்நியர் ஆட்சிக்கு உள்ளாகியது. தமிழகத்தின் வடபகுதி முற்காலப் பல்லவரிடமும் தென்பகுதி கலப்பிரரிடமும் சிக்கின. பல்லவர்கள் பிராக்கிருத மொழியையும் வடமொழியையும் களப்பிரர்கள் பாலி மொழியையும் போற்றினர். அதனால் தமிழ் மொழியும் தமிழ்ப் புலவர்களும் சிறப்பு குன்றினர். சீரிய நூல்கள் தோன்றவில்லை. தமிழ் இலக்கிய வரலாற்றில் இதை இருண்ட காலம் என்பர்.

இக்காலத்தில் சமயம் தலைமை வகித்தது. கி. பி. 4-ஆம் நூற்றாண்டிலிருந்து கி. பி. 5-ஆம் நூற்றாண்டுவரை பௌத்தம் களப்பிரர்களாலும் கி.பி 5-ஆம் நூற்றாண்டிலிருந்து 6-ஆம் நூற்றாண்டு வரை சமணம் பல்லவர்களாலும் சிறந்தோங்கின. அதனால் வேள்விகளையும் குல வேறுபாடுகளையும் கொண்டிருந்த வைதிக சமயம் தன் செல்வாக்கை இழந்தது. இழந்த செல்வாக்கை மீண்டும் பெற வைதிக சமயங்கள் முயன்றன. அதன் விளைவாகச் சைவம், வைணவம் என்னும் சமயங்கள் காலூன்றத் தொடங்கின.

### 1.5.2.1 முதல் ஆழ்வார்கள்

இந்நிலையில் பல்லவர் ஆட்சி விளங்கிய தொண்டை நாட்டில்பொய்கையாழ்வார்,பூதத்தாழ்வார்,பேயாழ்வார்என்னும் முதல் ஆழ்வார்கள்மூவர்தோன்றியதாக மு. ச. விமலானந்தம்[73], ஆ. வேலுப்பிள்ளை[74], டி. மோகனரங்கசாமி[75] ஆகியோர்கூறுவர்.

இம்மூன்று ஆழ்வார்களும் அருளியன முறையே முதல் திருவந்தாதி, இரண்டாம் திருவந்தாதி, மூன்றாம் திருவந்தாதி என்பனவாகும். இப்பாடல்கள் திருமால் பல தலங்களிலிருந்து அருள்புரியும்திறத்தைஉரைக்கின்றன.

இவர்கள் ஏற்றிய ஞானதீபத்தையே பிற்காலத்தில் வந்த ஆழ்வார்களும் ஆச்சாரியர்களும் தமக்கு வழிகாட்டியாகக் கொண்டனர். அதனால் முதலில் தோன்றிய பொய்கையாழ்வாரை வைணவ சமயத்தின் "**விடிவெள்ளி**" என்றும் மூவரையும் சேர்த்து வைணவ சமயத்தின் "**ஆதிகவிகள்**" என்றும் வைணவப் பெரியோர்கள் கூறுவர்.

இவர்கள் இறைவனைத் தொழுவதையே உய்யும் வகையாகக் கொண்டவர்கள், நாராயணனையன்றிப் பிற தெய்வங்களைத் தொழாதவர்கள்.

இக்காலம் சமண பௌத்த சமயங்களுடன் போட்டியிட்டு வைணவமும் சைவமும் வளரத் தொடங்கிய காலமாக இருந்தமையால் வைணவத்திற்கும் சைவத்திற்கும் இடையே வேற்றுமை மனப்பான்மையைக் காண முடியவில்லை. அதனால் முதல் ஆழ்வார்கள் மூவரும் திருமாலையும் சிவனையும் ஒன்றாகவே கருதி வழிபட்டனர். இதை விளக்கும் வகையில்,

"தாழ் சடையும் நீள்முடியும் ஒண்மழுவும்
சக்கரமும்
சூழரவும் பொன்னாணும் தோன்றுமால் -
சூழும்
திரண்டருவி பாயும் திருமலைமேல் எந்தைக்கு
இரண்டுருவும் ஒன்றாய் இசைந்து" 76

என்று பேயாழ்வார் பாடியிருத்தலைக் காணலாம். இக்காலத்தவரான (6-ஆம் நூற்றாண்டு) காரைக்காலம்மையாரும், சிவனையும் திருமாலையும் ஒன்றாகக் காண்பதை,

"ஒருபால் உலகளந்த மாலவனாம் மற்றை
ஒருபால் உமையவளாம் என்றால் - இருபாலும்
நின்னுரு வமாக திறந்தெரிய மாட்டேன்
நின்னுருவோ மின்னுருவோ நேர்ந்து" 77

என்னும் பாடலில் காணலாம்.

இக்காலத்தில் சமணர்களேயல்லாமல் வைணவர்களும் அறநூல்கள் சிலவற்றை இயற்றியுள்ளனர். நான்மணிக்கடிகையை இயற்றிய விளம்பி நாகனாரும், திரிகடுகத்தை இயற்றிய நல்லாதனாரும் வைணவர்களாவர். இவர்கள் தம் கடவுள் வாழ்த்துப்பாடல்களில் திருமாலைப் பரவியுள்ளனர்.

### 1.5.3 பல்லவர் காலம் (கி. பி. 600 - 900)

இக்காலத்தில் பிற்காலப் பல்லவ மன்னனான சிம்ம விஷ்ணு பல்லவன் (கி. பி. 575 - 610) தொண்டை நாட்டையும் சோழநாட்டையும் களப்பிரரிடமிருந்து கைப்பற்றினான். சிம்ம விஷ்ணு முதல் நிருபதுங்கவர்மன் (கி. பி. 850 - 882) வரை உள்ள மூன்று நூற்றாண்டுகளில் பல்லவராட்சி பரவியிருந்தது.

### 1.5.3.1 பக்தி இயக்கம்

இக்காலத்தில் சமணமும் பௌத்தமும் வளர்ச்சி குன்றியது. ஆழ்வார்களும் நாயன்மார்களும் இயக்கமாகத் தோன்றி வைணவத்தையும் சைவத்தையும் பரப்பி பக்தி மார்க்கத்தைத் தோற்றுவித்தனர். அதனால் இக்காலத்தைப் **"பக்தி இயக்கக் காலம்"** என்றும் **"வைணவ சைவக் காலம்"** என்றும் கூறுவர். சமணர்களாய் இருந்த பல்லவ மகேந்திரவர்மனும் பாண்டியன் நின்ற சீர் நெடுமாறனும் முறையே திருநாவுக்கரசராலும் திருஞானசம்பந்தராலும் சைவர்களாயினர். அதனால் சமணம் அரசு ஆதரவையும் மக்கள் ஆதரவையும் இழந்தது.

நாயன்மார்கள் சைவத்தை வளர்த்தது போன்று ஆழ்வார்களும் வணைவத்தை வளர்த்தனர். இவர்கள் தத்தம் இறைவன் வீற்றிருக்கும் திருத்தலங்களுக்குச் சென்று இசையுடன் பாடல்களைப்பாடி இறைவனைப் போற்றிப் பிற சமயங்களான சமண பௌத்த சமயங்கள் புறங்காணவும் தத்தம் சமயங்களைச் சீர்திருத்தித் தழைத்திடச் செய்யவும் செயல்பட்டனர். இதனால் பக்தி இயக்கம் தமிழகம் முழுவதும் பரவியது;

தமிழ்மொழி பக்தி மொழியாக உருவெடுத்தது. இக்காலத்தில் சமயம் வேறு தமிழ் வேறு என்று பிரித்துப் பார்க்கமுடியாத அளவிற்கு ஆழ்வார்களும் நாயன்மார்களும் இரண்டையும் ஒன்றாகக் காட்டினர். இதனால் சாதாரணமாக இருந்த தமிழுணர்வு தெய்வத் தமிழுணர்வாக மாறியது என்று ப. கிருஷ்ணன் குறிப்பிடுவர்.[78]

சங்க காலத்தில் இருந்ததுபோன்ற அரசனைப் பாடும் மரபு மாறி இறைவனைப்பாடும் புதிய மரபு ஏற்பட்டது. இறைவனை நாயகனாக ஏற்றுப்பாடும் நாயகன் நாயகி மரபு ஏற்பட்டது. பல சாதியினர், பல மரபினர், உயர்வு தாழ்வு இன்றிக் கற்றார் - பாமரர், செல்வந்தர் - ஏழையர் என்னும் வேற்றுமை இன்றித் தத்தம் சமயத்தில் ஒன்றுபட்டனர்.

இவர்கள் பாடிய பாடல்களே பின்னர் இந்தியா முழுவதும் பக்தி இலக்கியங்கள் வளர்வதற்குக் காரணமாய் இருந்தன.[79]

### 1.5.3.2 ஆழ்வார்கள் பிறர்

சங்கம் மருவிய காலத்தில் தோன்றிய பொய்கையாழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார் என்னும் ஆழ்வார்களைத் தவிர இக்காலத்தில் ஆழ்வார்கள் பிறர் தோன்றலாயினர்.

திருமழிசையாழ்வார், தொண்டரடிப்பொடியாழ்வார்,

குலசேகராழ்வார், திருப்பாணாழ்வார், திருமங்கையாழ்வார், பெரியாழ்வார், ஆண்டாள், நம்மாழ்வார், மதுரகவி ஆகியோர் அவர்களாவர். இவர்களுள் ஆண்டாள் பெண் பாலர் ஆவர். மதுரகவியாழ்வார் தம் குருவான நம்மாழ்வாரைப்பாடி இறைவனைத் தொழுதார்.

ஆழ்வார்களால் மங்களாசாஸனம் செய்யப்பெற்றவை 108 திருத்தலங்களாகும். அவை இன்றும் புகழொளி குன்றாமல் சிறப்புற்று விளங்குகின்றன. இவற்றுள் திருவேங்கடம், திருவரங்கம் குறிப்பிடத்தக்கவை.

இழிந்த குலத்தவராயினும் அவர்கள் அடியார்களாகில் அடியார் தம் அடியாராவார் என்று சாதிப்பிடிப்பைக் கண்டித்து ஆழ்வார்கள் பாடல்களைப் பாடியுள்ளனர்.

> **"குலந்தாங்கு சாதிகள்நாலிலும் கீழிழிந்து எத்தனை**
> **நலந்தான் இலாதசண்டாளசண் டாளர்கள்ஆகிலும்**
> **வலந்தாங்கு சக்கரத்தண்ணல் மணிவண்ணற் காள் என்றுஉள்**
> **கலந்தார் அடியார் தம்மடியார் எம்அடிகளே"** [80]

என்பது அப்பாடல். ஆழ்வார்கள் பல குலத்தவராயினும் திருமால் பக்தியில் ஒன்றுபட்டே விளங்கினர். நம்மாழ்வார் வேளாளர் குலத்தவர், பெரியாழ்வார் அந்தணர், திருமங்கையாழ்வார் கள்ளர் மரபினர்,

திருப்பாணாழ்வார் பாணர் குலத்தவர்.

ஆழ்வார்கள் முதலில் பௌத்த சமயத்துடனும் சமண சமயத்துடனும் போட்டியிட்டுத் தம் சமயத்தை வளர்த்தனர். பின்னர்ச் சைவத்துடனும் போட்டியிட்டதாகத் தெரிகிறது.

திருமங்கையாழ்வார் நாகப்பட்டினத்திலிருந்து புத்தர் சிலையைக் கவர்ந்து வந்து கோவில் பணி செய்ததாகக் குருபரம்பராப்பிரபாவம் கூறுகிறது.[81] மேலும் இவர் சமண பௌத்தர்களை வெறுத்ததாக இவர்தம் பாடல்வழி தெரிகிறது.[82] சைவர்களைச் "சிறியார் சிவபட்டர்" என்று இகழ்வதோடு தொண்டரடிப்பொடியாழ்வார்,

**"வெறுப்போடு சமணர் முண்டர்**
**விதியில்சாக் கியர்கள், நின்பால்**
**பொறுப்பரி யனகள் பேசில்**
**போவதே நோய தாகி,**
**குறிப்பெனக் கடையு மாகில்**
**கூடுமேல் தலையை ஆங்கே**
**அறுப்பதே கருமங் கண்டாய்**
**அரங்கமா நகரு ளானே"**[83]

என்னும் பாடலில் சமணர், முண்டர் (சைவர்), சாக்கியர் (பௌத்தர்) ஆகிய பிற மதத்தவர்களையும் மிகவும் வெறுத்தார்.

### 1.5.3.3 அரசர்கள் தொண்டு

அரசர்களின் ஆதரவும் வைணவர்களுக்கு அக்காலத்தில் இருந்தது. சிம்ம விஷ்ணு (கி. பி. 575 - 615) என்பவன் "**பக்தி ஆராதித்ய விஷ்ணு சிம்ம விஷ்ணு**" "**பரமபாகவதா**" என்ற பட்டப்பெயர்களைப் பெற்றுள்ளமையால் தீவிரமான திருமால் பக்தன் எனத் தெரிகிறது. இவன் மகாபள்ளிபுரத்தில் உள்ள ஆதிவராகர் கோவிலைக் கட்டினான். இதைத் தமிழ்நாட்டில் தோன்றிய புதிய குகைக் கோவில் என்று மா. இராசமாணிக்கம்பிள்ளை கூறுவர்.[84]

மகேந்திரவர்மன் (கி. பி. 615 - 630) சமணத்திலிருந்து சைவத்திற்கு மாறினாலும் மகேந்திரவாடியில் பெருமாள் கோவிலைக் கட்டியுள்ளான். மாமண்டூர், சிங்கவரம், நாமக்கல் என்னும் இடங்களில் பெருமாள் குடைவரைக் கோவில்களை அமைத்துள்ளான். நரசிம்மவர்மன் என்பவன் (கி.பி. 630 - 668) நாமக்கல் மலையடியில் இருக்கும் நரசிங்கப் பெருமாள் கோவில், திருவெள்ளறையின் மலைமீது இருக்கும் குகைக் கோயில், மாமல்லபுரத்தில் இருக்கும் வராகமண்டபம் ஆகியவற்றை அமைத்துள்ளான். மாமல்லபுரத்தில் உள்ள சலசயனப்பெருமாள் கோயிலை இராசசிம்மன் அமைத்தான். காஞ்சிபுரத்தில் உள்ள பரமேஸ்வர விண்ணகரம் எனப்படும் வைகுந்தப் பெருமாள் கோவிலைக் கட்டியவன் இரண்டாம் பரமேசுவர்மன் (கி. பி. 705 - 710) ஆவான்.[85]

இரண்டாம் நந்திவர்மன் சிறந்த வைணவ பக்தன். தண்டன் தோட்டப்பட்டயம் அவனை "முகுந்தன் திருவடிகளைத் தவிர வேறு ஒன்றிற்கும் அவன் தலை வணங்கவில்லை" எனக் கூறுகிறது. இவன் வைகுந்தப் பெருமாள் கோவிலை நலமுறச் செய்தவன். அதற்கு வேண்டிய ஏற்பாடுகள் பலவற்றைச் செய்தான். [86]

திண்டிவனம் கூற்றத்தில் உள்ள **"திகைத்திலார்"** என்ற பெருமாளுக்கு மூன்றாம் நந்திவர்மன் ஒரு கோவிலைக் கட்டினான். [87]

இவ்வாறாகப் பல்லவ மன்னர்களால் பெருமாள் கோவில்கள் பல தோன்றின; குகைக்கோவில்களும் பல குடையப்பட்டன. இக்கோவில்களுக்கு அரசர்களைச் சார்ந்தவர்களான கோவில் அர்ச்சகர்கள், பணி செய்வோர், நடன மாதர்கள் முதலானோர் கோவில் பழுது பார்க்கவும் கண்காணிக்கவும் வழிபாட்டிற்கும் நிலங்கள் பலவற்றைத் தானமாக வழங்கியுள்ளனர். "காவேரிப்பாக்கம் கடிகாசலம் முதலிய இடங்களில் வைணவ மடங்களும் இருந்தன"[88] சைவர்களான அரசர்களும் பெருமாள் கோவில்கள் பல அமைந்திருப்பதால் அவர்கள் மத வேறுபாடின்றிச் சைவத்தையும் வைணவத்தையும் போற்றியமை புலப்படுகிறது.

பாரதவெண்பாஎன்றஉரையிடையிட்டபாட்டுடைச் செய்யுள் இக்காலத்தில்தான் இயற்றப்பட்டது. இதில்

திருமால் வணக்கம் ஆங்காங்கு காணப்படுகிறது. இதை இயற்றியவர் பெருந்தேவனார் என்பவராவார். 12,000 பாக்களுக்கு இன்று இதில் 830 பாக்களே கிடைத்துள்ளன.[89]

### 1.5.4.0 சோழர் காலம் (கி. பி. 875 - 1250)

ஒன்பதாம் நூற்றாண்டில் பல்லவர் வலிமை குன்றிடவே அவர்கள் ஆட்சியில் சிற்றரசர்களாய் இருந்த சோழர்கள் தனியாட்சி நிறுவினர். விஜயாலயன் (கி. பி. 850 - 870) தொடங்கி மூன்றாம் இராசேந்திரன் (கி. பி. 1246 - 1279) வரை சோழப் பேரரசு செங்கோல் ஓச்சியது. இராசராசன் காலத்தில் ஆட்சி மிக உச்ச நிலையை அடைந்தது. இராசேந்திர சோழன் வடக்கே கங்கை வரை சென்று கடாரத்தை வென்று ஆட்சியை விரிவுபடுத்தினான். இங்ஙனம் உச்ச நிலையில் இருந்த சோழப் பேரரசு மூன்றாம் இராசராசன் (கி. பி. 1216 - 1246) காலத்தில் வீழ்ச்சியுற்றது. தமிழகம் ஒரு குடைக்கீழ் முதன்முதலில் இருந்த காலம் இக்காலம் என்பர் வரலாற்று அறிஞர்கள்.

சேக்கிழார், கம்பர் முதலான பெரும் புலவர்களும் நாதமுனிகள், நம்பியாண்டான் நம்பி, இராமானுசர் முதலான சமயப் பெரியோர்கள் தோன்றி நூல்களையும் சமயத்தத்துவங்களையும் படைத்தமையாலும் சமயப் பூசலற்ற ஆட்சி அமைந்து அமைதியாக மக்கள் வாழ்ந்திருந்தமையாலும் இக்காலத்தைக் கே. ஏ. நீலகண்ட சாஸ்திரி ‘ **தமிழ்ப் பண்பாட்டின் பொற்காலம்**’ என்பர்.

**1.5.4.1 வைணவ ஆச்சாரியர்கள்**

"சமய நம்பிக்கை சமுதாயத்தில் இடம்பெற்ற பின்பே அச்சமய உண்மைகளை விளக்கும் சமயத்தத்துவம் தோன்றுவது வரலாற்று நியதியாகும்" 90 என்று ஆ. வேலுப்பிள்ளை அவர்கள் கூறும் கருத்திற்கு ஏற்பச் சோழர் காலத்தில் சமயத்தத்துவங்கள் ஏற்பட்டன. வைணவத்தில் ஆழ்வார்கள் பாடல்கள் மக்களிடையே பரவியபின்னர் அப்பாடல்களையும் வேதங்களையும் அடிப்படையாகக் கொண்டு வைணவத் தத்துவங்களை வகுக்க வைணவ ஆச்சாரியர்கள் முற்பட்டனர். இது வைணவவரலாற்றில் குறிப்பிடத்தக்கதாகும்.

இவ்வாச்சாரியர்கள் ஆழ்வார்கள் பாடல்களை அடிப்படையாகக் கொண்டாலும் வடமொழி நூல்களையும் ஆதாரமாக ஏற்றனர். ஆழ்வார்களின் பக்தி ஞான கர்ம நெறிகளை ஏற்று இம்மூன்று நெறிகளும் இன்றியமையாதவை என்று கருதினர். வேதம், உபநிடதம், பகவத் கீதை ஆகியவற்றோடு ஆழ்வார்கள் பாடல்களை ஐக்கியப்படுத்தினர். இதன் பயனாக வைணவம் வடமொழி தென்மொழி ஆகியவற்றின் சாராம்சமான உபயவேதாந்தம் என அழைக்கப்பட்டது.

**1.5.4.1.1 நாத முனிகள்**

வைணவ வழக்கத்தின்படி நாராயணன், திருமகள், சேனை முதலியார், நம்மாழ்வார் ஆகியோருக்கு அடுத்து நாதமுனிகள் ஆச்சாரியராக விளங்குகிறார். வரலாற்றின்படி நாதமுனிகளே முதல் வைணவ

வரலாற்றின்படி நாதமுனிகளே முதல் வைணவ ஆச்சாரியராக உள்ளார்.

காட்டுமன்னார் கோவிலில் தோன்றிய இவர் **"முனிகள்"** எனக் கூறப்பட்டாலும் மனைவி மக்களோடு இல்லறம் நடத்தியவரேயாவர். வட நாடுவரை சென்று பல திருப்பதிகளையும் சேவித்துத் தம் ஊருக்குத் திரும்பி வந்து பகவத் கைங்கரியத்தில் ஈடுபட்டார். 12000 முறை மதுரகவி ஆழ்வாரின் கண்ணிநுண்சிறுத்தாம்பு பதிகத்தை உரு செய்து யோகதசையில் நம்மாழ்வாரைக் கண்டு அவரிடமிருந்து ஆழ்வார்களின் பாடல்களையும் மறைப் பொருட்களையும் பெற்றதாக குருபரம்பரைகள் கூறுகின்றன.

ஆழ்வார்களின் பாடல்களைத் தொகுத்து, வேதவியாசர் வேதங்களை நான்காக வகுத்து தொகுத்ததுபோல் அவற்றை முதலாயிரம், பெரியதிருமொழி, திருவாய்மொழி, இயற்பா என நான்காகவும், இசைப்பா, இயற்பா என இரு பிரிவுகளாகவும் வகைப்படுத்தினார். எனவே ஏதோ ஒரு காரணத்தினால் மக்களிடையே அருகியிருந்த ஆழ்வார்களின் பாடல்களைத் தொகுத்து வேதங்களுக்கு நிகரான பெருமையை அளித்து வெளியிட்ட பெருமை இவரையே சாரும்.

சற்று எறுக்குறைய இக்கால அளவிலேயே நம்பியாண்டார் நம்பிகள் (9-10 நூற்றாண்டு) சைவத்

குறிப்பிடத்தக்கதாகும்.

யோக ரகசியம், நியாய தத்துவம் என்பன நாதமுனிகளால் இயற்றப்பட்டனவாகும். இவை இன்று கிடைப்பதில்லை. இவர் சரணாகதி தத்துவத்தைத் தம் நூலில் குறிப்பிட்டுள்ளதாகக் கூறுவர்.

நாலாயிர திவ்வியப்பிரபந்தத்தைத் தொகுத்ததுடன் அவற்றைத் தம் ஊர் பெருமாள் கோவிலில் முறையே அநுசந்தானம் செய்ய ஏற்பாடு செய்தார். மார்கழி மாதம் ஏகாதசி திதியையொட்டி திவ்வியப்பிரபந்தங்களைத் திருவரங்கத்தில் ஓதச் செய்தார். இந்தப் பழக்கம் பின்னாளில் எல்லா வைணவ ஆலயங்களிலும் பரவியது. [91]

வைணவத் தத்துவங்களை விளக்கவும் புறமத எதிர்ப்பைச் சமாளிக்கவும் திருவரங்கத்தில் ஆச்சாரிய பீடம் ஏற்படுத்தப்பட்டது. [92] அதன் முதல் ஆச்சாரியராக நாதமுனிகள் விளங்கினார்.

நாதமுனிகளுக்குப் பின்னர் வைணவ ஆச்சாரிய இடத்தை வகித்தவர் உய்யக்கொண்டார் என்பவராவார். இவருக்கு அடுத்து வகித்தவர் மணக்கால்நம்பி என்பவராவார். அடுத்து ஆச்சாரிய பீடத்தை வகித்தவர் ஆளவந்தார் என்பவராவார்.

### 1.5.4.1.2 ஆளவந்தார்

ஆளவந்தார்எனஅழைக்கப்பெறும் யமுனைத்துறைவர் நாதமுனிகளின் பெயரர் ஆவார். விசிட்டாத்துவைதக் கொள்கையை ஒழுங்குபடுத்திப் பின்னால் வந்த இராமாநுசருக்கு வழிகாட்டியாக விளங்கினார். சித்தித்ரயம், ஆகமப் பிரமாண்யம், தோத்திரரத்னம், ஸ்ரீசதுஸ்லோகி, கீதாசங்கிரகம், மகாபுருஷநிர்ணயம் என்னும் நூல்களை இயற்றியுள்ளார்.

சித்தித்ரயம் என்னும் நூல் இறைவன், உயிர்கள், சடப் பொருள்கள் ஆகியவற்றிற்கு உள்ள தொடர்பைக் கூறுகிறது; சங்கரரின் அத்வைதக் கொள்கையைக் கண்டிக்கிறது. ஆகமப்பிரமாண்யம் என்னும் நூல் பஞ்சராத்திர ஆகமத்தைக் கடைபிடிக்கவேண்டுமெனக் கூறுகிறது. தோத்திரரத்னம் என்பது ஒரு உயர்ந்த நூல். இதில் ஆளவந்தார் வாழ்நாளில் உள்ள துன்பங்களை நினைத்துக் கரைந்து உருகித் தெய்வத்தைப் பாடியுள்ளார். இது சரணாகதித் தத்துவத்தைப் பல வழிகளில் விளக்குகிறது. திருமகளை வழிபடும் முதல் நூல் சதுஸ்லோகியாகும். இந்நூல் திருமகளின் பெருமையைக் கூறுவதோடு அவருடைய பெருமையை நாராயணன்கூட அறியமுடியவில்லை என்று கூறுகிறது. நாராயணனே பரதெய்வமெனக் கூறுகிறது மகாபுருஷநிர்ணயம் என்னும் நூல்.[93] கீதையின் சாரத்தைத் தருகிறது கீதாசங்கிரகம் என்னும் நூல்.

ஆளவந்தாருக்குப் பிறகு ஆச்சாரிய பீடத்தை

வகித்தவர் இராமாநுசராவார்.

**1.5.4.1.3 இராமாநுசர் (கி. பி. 1017 - 1137)**

வைணவ ஆச்சாரியர்களுள் தனிச்சிறப்புக்கும் பெருமைக்கும் உரியவர் இராமாநுசராவார். இவர் காஞ்சிபுரத்திற்கு அருகில் உள்ள ஸ்ரீபெரும்புதூரில் தோன்றினார். இவர் வைணவத்திற்குச் சிறந்த தொண்டாற்றி விசிட்டாத்வைதக் கொள்கையை நாடறியச் செய்தார்.

இந்தியா முழுவதும் சென்று பிற மதத்தவர்களுடன் வாதிட்டு அவர்களையும் வைணவர்களாக்கினார். இவருடைய நூல்களுள் சூத்திரபாஷ்யம், கீதாபாஷ்யம், வேதாந்தசங்கிரகம் ஆகியன குறிப்பிடத்தக்கன. இந்நூல்கள் அத்வைதிகளின் கருத்தைக் கண்டித்து சங்கரருக்கு முன்னாலிருந்த வேதாந்திகளான போதாயனர் முதலானவர்களின் வழிகளைப் பின்பற்றி விசிட்டாத்வைத கொள்ளையை நிலைநாட்டுகின்றன. உபநிடத்தில் சொல்லப்பட்டுள்ள நாராயணனோடு ஒன்றுபடுத்திச் சொல்வதே இவருடைய முக்கியமான கொள்கையாகும். ஞானானந்த ஸ்வருபனான பிரமத்தை நாராயணன் உருவத்தில் நிறுத்தியது மட்டுமின்றி அவருக்கு பத்தினிபூஷண பரிச்சின்னம் ஸ்தன விசேஷம் இவற்றையும் நிறுவுகிறார். [94]

இராமாநுசர் கொள்கைப்படி உலகம், உயிர், இறைவன் ஆகிய மூன்றும் உண்மைப் பொருள்கள்

எனினும் இறைவனே உயிர்கள் அனைத்திற்கும் உலகுக்கும் உள்நின்று அவையனைத்தையும் இயக்குகின்றான். ஆன்மாக்கள் பலவாயினும், அவ்வான்மாக்கள் அனைத்தையும் தனக்கு உடலாகக் கொண்டு ஆன்மாக்களுக்கெல்லாம் ஆன்மாவாய் நிற்கும் பரமான்மா ஒன்றுதான். இறைவன் உயிருக்கு உயிராய் நிற்கும் காரணத்தால் இறைவன் வேறு உயிர் வேறு அல்ல. இரண்டும் ஒன்றுதான். இதுவே இராமாநுசர் கூறும் விசிட்டாத்வைதமாகும்.

இவர்தம் கத்தியத்ரயம் என்னும் நூல் சரணாகதியைப் பற்றியும் ஸ்ரீவைகுண்டத்தைப் பற்றியும் வருணித்துப் பேசுகிறது. மேலும் வேதாந்தசாரம் முதலான நூல்களையும் இயற்றியுள்ளார்.

சாதிபேதமின்றி ஏழை பணக்காரன் என்றில்லாமல் எல்லோருக்கும் முக்திக்கு வழிகாட்டினார் என்றும் தாழ்த்தப்பட்ட சாதியினரையும் திருத்தித் தம் சமயத்தில் சேர்த்துக் கொண்டார் என்றும் அரிசனங்களைத் "திருக்குலத்தோர்" என்று அழைத்து அவர்களுக்கு ஆண்டில் ஒருநாள் கோவிலுள் செல்ல வகையும் செய்தார் என்றும் குருபரம்பரை நூல்கள் கூறுகின்றன. இறுதியில் இராமாநுசர் திருவரங்கத்தில் ஆச்சாரிய பீடத்தில் அமர்ந்து வைணவத் தொண்டாற்றினார்.

### 1.5.4.1.4 அரசர்கள் வைணவத் தொண்டு

"சோழ நாடு தொன்று தொட்டு சைவ நாடகவே

இருந்து வந்தது. அதற்கு அடுத்தபடியாகவே வைணவம் இருந்துவந்தது. களப்பிரர் காலத்திலும் பல்லவர் காலத்திலும் சிற்றரசர்களாக இருந்த சோழரும் பல்லவரைப் போலவோ பாண்டியரைப் போலவோ சமயம் மாறினர் என்று இதுகாறும் கூறச் சான்று கிடைத்திலது" என்று மா. இராசமாணிக்கம் கூறுவர்.[95] எனவே சோழர்கள் காலம்காலமாகச் சைவ மதத்தினர் என்பதை உணரலாம். என்றாலும், சைவமும் வைணவமும் பல்லவர் காலத்தில் வளரத் தொடங்கிச் சோழர் காலத்தில் மிக உன்னத நிலையைப் பெற்றிருந்தன. சோழர்கள் சிலர் வேறுபாடின்றி வைணவக் கோயில்களுக்கும் மடங்களுக்கும் தானங்கள் வழங்கியுள்ளனர்.

வைணவக் கோவில்களில் வழிபாட்டின்போது திவ்வியப்பிரபந்தங்களைப் பாடும் வழக்கம் 11-ஆம் நூற்றாண்டிலிருந்தே வழக்கத்தில் உள்ளது. திருவாய்மொழியைக் கோவில்களில் பாடுவதற்கு ஆட்களை அமர்த்தி அவர்களுக்கு வேண்டிய வசதிகளை முதலாம் இராசேந்திர சோழன் (கி. பி. 1012 - 44) செய்து கொடுத்தான். திருவிழாக்களின் போதிலும் திருவாய்மொழி பாடப்பட்டது.[96]

முதலாம் இராசராசன் காலத்திலேயே (கி. பி. 985 - 1014) நம்மாழ்வார் வழிபாடும் தொடங்கிவிட்டிருந்தது. வழிநடை வைணவருக்கு உண்டியளிப்பதற்காக நிவந்தங்கள் நிறுவப்பட்டிருந்தன.

இதைத் திருக்கோவலூர் கல்வெட்டு ஒன்று தெரிவிக்கிறது. வைணவ மரபினரான ஏகதண்டிச் சந்நியாசிகள் சமய வளர்ச்சியில் ஈடுபட்டிருந்தனர். வைணவக் கோவில்களில் உறியடி விழாவும் ஆண்டாளுக்கு திருவாடிப்பூர நோன்பும், சங்கராந்தியும் கொண்டாடப்பட்டன.[97]

முதற்குலோத்துங்க சோழன் (கி.பி. 1070 - 1120) சைவனானாலும் சமயச்சார்பற்றவன். மன்னார்குடியில் (தஞ்சை மாவட்டம்) உள்ள இராசகோபாலசாமி என்று வழங்கப்பெறும் பெருமாள் கோவில் இவன் ஆட்சிக் காலத்தில் எழுப்பப்பெற்று குலோத்துங்க சோழ விண்ணகரம் என்று இவன் பெயர் அதற்கு அன்று இடப்பட்டது.[98] வேலூரில் (தென்னாற்காடு மாவட்டம்) உள்ள திருமால் கோவிலுக்குக் குலோத்துங்க சோழ விண்ணகரம் எனத் தன் பெயரிட்டு அதற்கு நிவந்தமாகக் குலோத்துங்க சோழ நல்லூர் என்ற ஊரை மூன்றாம் குலோத்துங்க சோழன் (கி. பி. 1178 - 1218) 1181-இல் வழங்கினான்.[99] இவ்வாறு அரசர்களேயல்லாமல் அவர்களிடம் பணி செய்பவர்களும் திருமாலிடத்தில் அன்பு கொண்டிருந்தனர். முதலாம் குலோத்துங்க சோழனின்படைத்தலைவனானகருணாகரத்தொண்டைமானின் இயற்பெயர் திருவரங்கன் என்பதாகும். அவன் திருமாலிடத்தில் பக்தி கொண்டவனாவான். இராசவல்லப பல்லவராயன் என்ற அமைச்சன் பீமாவரத்தில் (கோதாவரி மாவட்டம்) திருமால் கோவிலுக்கு நந்தா விளக்கு ஒன்று தந்துள்ளான்.[100]

மூன்றாம் குலோத்துங்க சோழனின் அதிகாரியான திருக்கோவலூர் மலையமான் முதலானோர் திருமால் பக்தர்களாக இருந்துள்ளனர்.[101]

சோழர் காலத்தில் வைணவ மடங்களும் சில இருந்தனவாக கே. கே. பிள்ளை அவர்கள் கூறுவர்.[102] இம்மடங்கள் கல்வித்துறையிலும் மருத்துவத் துறையிலும் நற்பணியாற்றி வந்தன. வானமாமலையில் வைணவ மடம் ஒன்று அமைக்கப்பட்டது. அது இன்றும் செயல்பட்டு வருகிறது. மன்னார்குடியில் செண்டலங்கார மாமுனி மடமும் சேரன் மாதேவியில் மற்றொரு வைணவ மடமும் சிறந்து விளங்கி வந்தன.

அவ்வப்போது வைணவத்திற்கும் சைவத்திற்கும் இடையே பூசல்களும் ஒருசில சோழர் காலத்தில் நிகழ்ந்துள்ளன. சோழ அரசனால் இராமாநுசர் தமிழகத்திலிருந்து மைசூருக்குச் சென்று நெடுங்காலம் இருக்கவேண்டிய நெருக்கடி ஏற்பட்டது. இரண்டாம் குலோத்துங்க சோழன் கி. பி. 8-ஆம் நூற்றாண்டில் நந்திவர்ம பல்லவமல்லனால் தில்லையம்பல முன்றிலில் நிறுவப்பெற்ற தில்லை கோவிந்தராசப் பெருமாளின் திருமேனியைப் பறித்துக் கடலில் எறிந்தான். சைவக் கோவிலின் மகேசுவரர்கள் வைணவக் கோவில் பட்டர்களுடன் உறவு கொண்டாடியதற்காக அவர்களின் உடைமைகளைக் கோவில் மகா சபை பறிமுதல் செய்துகொண்டதாகத் தெரிகிறது.[103]

இரண்டாம் குலோத்துங்கச் சோழன் தில்லைக் கோவிந்தராசப் பெருமாள் திருமேனியைக் கடலில் எறிந்ததற்காக வைணவர்கள் மனம் புண்பட்டிருந்ததை உணர்ந்து இரண்டாம் இராசராசோழன் (கி. பி. 1146 - 1163) தன் ஆட்சியில் அவர்களுக்கு ஆதரவு அளித்து உளம் குளிரச் செய்தான் என்று சதாசிவ பண்டாரத்தார் கூறுவர். [104] எனவே வைணவத்திற்குச் சோழர்கள் ஆதரவு தந்து வ்ந்தனர் எனக் கூறலாம்.

மேற்கூறிய செய்திகளைக் கொண்டு நோக்கும் போது சோழ மன்னர்களுள் ஒரு சிலரைத் தவிர மற்றவர்கள் அனைவரும் சைவர்களாய் இருந்தாலும் வைணவத்தின்மீது அன்பு கொண்டவர்களாகவே இருந்துள்ளனர் என்றும் திருமால் கோவில்களுக்குப் பல திருப்பணிகளும் செய்துள்ளனர் என்றும் கூறலாம்.

**1.5.4.1.5 கம்பராமாயணம்**

தமிழ் இலக்கியத்திற்கு மணிமுடியாகவும் தமிழ் மரபிற்கு ஏற்றவாரும் இராமனைத் திருமாலின் அவதாரமாகக் காட்டும் கம்பராமாயணம் தோன்றியது இக்காலத்தில்தான். கம்பர் மூன்றாம் குலோத்துங்க சோழன் காலத்தவர் என்றும் கி. பி. 1178 - 1185-க்கு இடைபட்ட காலத்தில் தமது இராமாயணத்தை இயற்றித் திருவரங்கம் திருமால் முன்னிலையில் அரங்கேற்றினார் என்றும்கூறுவர் மு. இராகவ ஐயங்கார். [105] இவர் வரங்கலைத் தலைநகராகக் கொண்டு ஆண்டுவந்த ஆந்திரமன்னன் காகதீய உருத்திரதேவனை

(கி. பி. 1157-1195) கண்டு போற்றியுள்ளார். கம்பரின் முன்னோர்கள் தெலுங்கர் என்றும் அவர்கள் ஆந்திராவில் உள்ள கம்பம் மாவட்டத்தில் தோன்றியவர்கள் என்றும் அதனால் கம்பரும் பிறப்பால் தெலுங்கர் என்றும் டி. மோகனரங்கசாமி தம் ஆய்வில் முடிப்பாகக் கூறுவர். [106] மேலும் அவர் கம்பர் பிறப்பால் தெலுங்கராக இருந்தும் ஏன் காவியத்தைத் தமிழில் இயற்றவேண்டும் என்னும் வினாவுக்கு விடைதரும் வகையில் குறிப்பிடுவது இங்குக் குறிப்பிடத்தக்கதாகும்.

"ஆழ்வார்களின் சமயமும் இராமானுசரின் தத்துவமும் கம்பரின் காவியத்திற்கு ஆழ்ந்த பரந்த கதைப் பொருட்களைத் தந்தன. சிலப்பதிகாரம், சீவகசிந்தாமணி, மணிமேகலை, பெரியபுராணம் முதலான சமண பௌத்த சைவ தமிழ்க் காப்பியங்கள் இருந்தன. ஆனால் வைணவத்திற்கென்று அன்றுவரை ஒரு காப்பியமும் இல்லை. இக்குறையே வைணவச் சார்புடைய கம்பராமாயணத்தை இயற்றத்தூண்டியது." [107]

இக்கருத்துகளை நோக்கும்போது ஆழ்வார் ஆச்சாரியர்களின் சமயச் செல்வாக்கும் பிற சமயத்தவர் காப்பியங்கள் இருந்தும் வைணவ சமயத்தின் காப்பியம் இல்லாத குறையும் கம்பரை இராமாயணம் இயற்றத் தூண்டின எனக் கருதலாம்.

**1.5.5.0 பிற்காலப் பாண்டியர் காலம்**

சோழப் பேரரசின் இறுதிக் காலத்தில்

வலிமைகுன்றி இருந்த பாண்டியர்கள் சோழப் பேரரசின் வீழ்ச்சிக்குப் பிறகு மீண்டும் 13-ஆம் நூற்றாண்டில் வீறுபெற்றுத் தமிழகத்தை ஆளத் தொடங்கினர்.

சோழர் காலத்தில் சிற்றரசர்களாக விளங்கிய நெடுஞ்சடையன் பராந்தகன் என்னும் முதல் வரகுண பாண்டியன் (கி. பி. 768 -811) வைணவத்தில் பெரிதும் ஈடுபாடுடையவன் என்றும் இவன் காலத்தில் நம்மாழ்வார் வாழ்ந்தார் என்றும் என். சேதுராமன் குறிப்பிடுவர்.[108] இம்மன்னனின் மந்திரியான மதுரகவி என்னும் மாறன் காரி மதுரைக்கு அருகில் உள்ள ஆனை மலையில் நரசிங்கப் பெருமான் குடைவரைக் கோவிலை எழுப்பித்தார் என்றும் அவர் இறந்துவிடவே அவர்தம் தம்பியான மாறன் எயினன் என்பவர் அக்கோயிலைக் கட்டி முடித்தார் என்றும் ஆனைமலைக் கல்வெட்டு கூறுகிறது.[109]

சடையவர்மன் ஸ்ரீவல்லபன் என்பவன் (கி. பி. 1101 - 1124) இன்று சித்திரரத வல்லப பெருமாள் கோவில் என்றழைக்கப்படும் திருச்சக்கரத்தாழ்வார் கோயிலைக்கட்ட ஐந்து வேலி நிலம் அளித்தான்.[110] முதலாம் சடையவர்மன் குலசேகரபாண்டியன் காலத்தில் முதலாம் இராசேந்திர சோழன் காலத்தில் (கி. பி. 1025) கட்டப்பட்ட மன்னார் கோவிலின் உள் குலசேகர ஆழ்வாருக்குத் தனிக்கோவில் கட்டப்பட்டது.[111]

13-ஆம் நூற்றாண்டில் சோழர் ஆட்சிக்குப்பின்

வந்த பாண்டியர்கள் சைவர்களாக விளங்கினாலும் மதவேறுபாடு இல்லாமல் பிற மதத்தையும்போற்றினர். கோவில்களில் வழிபாடுகள் நடக்கவும் வகை செய்துள்ளனர்.

பிற்காலப் பாண்டியர்கள்திருவரங்கம் கோவிலில் துணைக் கோயில்களையும் மண்டபங்களையும் கோபுரங்களையும் கட்டினர். அழகர் கோயில் போன்றவை குலசேகர பாண்டியன் காலத்தில் சிறப்படைந்தன; அர்த்த மண்டபம், மணி மண்டபம், சந்நிதி, முன்கோபுரம் முதலியன கட்டப்பட்டன. மேலும் அழகர் கோயிலில் உள்ள பொன்வேய்ந்த பெருமான் திருமண்டபமும் துலாபாரமண்டபமும் யாகசாலையும் சடையவர்மன் சுந்தரபாண்டியனால் (கி. பி. 1250 - 1284) கட்டப்பட்டன. [112]

முதலாம் சடையவர்மன் சுந்தரபாண்டியன் (கி.பி. 1250 - 1284) பலமுறை துலாபாரம் ஏறித் திருவரங்கம் கோயிலுக்குப் பொன் வேய்ந்தான். இவன் செய்த பல திருப்பணிகளை அரங்கனே கூறுவதுபோன்று அமைத்திருப்பது அவன் அரங்கனிடம் கொண்ட மிகுந்த பக்தியைக் காட்டுகிறது. சித்திரை மாதத்தில் திருவரங்கனுக்குத் தேரோட்டத் திருவிழாவும் நடத்தினான். [113] மூன்றாம் சடையவர்மன் வீரபாண்டியன் பரம விஷ்ணு பக்தன். இவன் திருவரங்கத்திற்கு அருகில் தன் பெயரால் கலியுகராமன் சதுர்வேதிமங்கலம் என்னும் ஊரை எழுப்பித்து அதில்

வேதம்வல்ல அந்தணர்களைக் குடியேற்றினான். நிலங்களை விற்பதாக இருந்தால் அந்தணர்கள் தங்களுக்குள்ளேயே விற்றுக்கொள்ள வேண்டும், இல்லையேல் இராமாநுச தரிசனத்தைப் பின்பற்றும் பாகவதர்களுக்கு விற்கலாம் என்று ஆணையிட்டான்.[114] இவனுடைய செப்புக்காசிலும் ஒரு பக்கம் கலியுகராமன் என்ற பெயரும் மறுபக்கம் திருமால்திருவடிகளும் உள்ளன.

ஐந்தாம் சடையவர்மன் சுந்தரபாண்டியனின் (கி. பி. 1304 - 1319) அதிகாரியான நெட்டூருடையான் இளையாழ்வான் காளிங்கராயன் என்பவன் தான் பிறந்த நட்சத்திரத்தில் காஞ்சிபுரம் அருளாளப் பெருமாள் கோவிலில் சிறப்பு விழாக்கள் எடுத்து திருவாழி ஆழ்வாரை (சுதர்சனம்) எழுந்தளிவித்தான்; இராமாநுசரின் திருமேனியை எழுப்பித்தான்; இராமாநுசரின் தரிசனத்தையும் அவர் பாஷ்யத்தையும் பரப்ப நிவந்தங்கள் அளித்தான்.[115]

ஐந்தாம் சடைவர்மன் சுந்தரபாண்டியன் (கி. பி. 1304 - 1319) கோதண்டராகவப் பெருமாள் கோவிலையும் இலஷ்மி நாராணப்பெருமாள் கோவிலையும் கட்டினான்.[116]

இவ்வாறாகப் பாண்டியர்கள் வைணவத்தின்மீது வெறுப்பின்றித் திருப்பணிகள் பல திருமால் கோயில்களுக்குச் செய்துள்ளனர். ஆனால் மக்களிடம் இதைக் காண முடியவில்லை. முதலாம் மாறவர்மன்

பராக்கிரமபாண்டியன் (1335-1362) காலத்தில் விஸ்வேஸ்வரதேவர் சிவன் கோயில் தானத்தாரும் வீட்டுமனைப் பற்றிய வழக்கில் முரண்பட்டதால் இரண்டு கோயில்களிலும் பூசை நின்று போனது.[117] இந்நிகழ்ச்சி மகேசுவர்களுக்கும் வைணவர்களுக்கும் இடையே இருந்த பூசலைக் காட்டுகிறது.

இவையன்றிக் கோயில்களில் முழுமதி நாட்களில் விழாக்கள் நடைபெற்றன. அரசர்களும் தலைவர்களும் தாம் பிறந்த நாட்களில் விழாக்கள் நடத்துவதற்கு இறையிலி நிலங்களும் பொருள்களும் அளித்தனர். வைணவக் கோயில்களில் நாலாயிரத் திவ்வியப் பிரபந்தம் இசையுடன் ஓத நிவந்தங்கள் விடப்பட்டன.

### 1.5.5.1 முகமதியர் கொள்ளை

பாண்டியர் காலத்தில்தான் தில்லி சுல்தானான அல்லாவுதீன் கில்ஜியின் படைத் தளபதி மாலிக்காபூர் கி. பி. 1311-இல் தென்னாட்டின்மீது படையெடுத்து வந்து தமிழ்நாட்டைக் கொள்ளையடித்துச் சென்றான். பிறகு குத்புதீன் முபாரக் ஷாவின் படைத்தளபதி குஷ்ருகான் 1318-இல் வந்து கொள்ளையடித்துச் சென்றான். பின்னர் மதுரையைப் பிடித்து 1323-இல் இருந்து சுமார் 1390 வரை ஆதி சுல்தானும் மாலுக் நேமியும் ஆட்சி செய்தனர்.

இக்காலத்தில் சிவன் கோயில்களையும் திருமால் கோயில்களையும் இடித்தனர்; கோவில் பொருட்களையெல்லாம் கொள்ளையடித்தனர்.

திருவரங்கத்தில் இருந்தவர்கள் ஸ்ரீதேவி பூதேவியுடன் கூடிய திருவரங்கன் திருமேனியைச் சிறு பல்லக்கில் ஏற்றிக்கொண்டு செஞ்சிக்கு வந்தனர். துருக்கர் அரங்கன் கோவிலில் புகுந்து திருமேனியைக் காணாமல் பட்டர்கள் பலரைக் கொன்றனர். பின்னர், சுல்தானின் படைத்தளபதியைக் கொன்ற கம்பணனின் மந்திரியான கோபணன் 1371-இல் திருவரங்கன் திருமேனியைச் செஞ்சியிலிருந்து கொண்டு வந்து நிறுவினான் என்று கோயில் ஒழுகு கூறுகிறது. [118] மேலும் இக்காலத்தில் கோவில்கள் பல பூட்டப்பட்டன; வழிபாடுகள் நிறுத்தப்பட்டன. அதனால் இக்காலத்தில் அமைதி குன்றியதோடு சமய வளர்ச்சியும் குன்றியது எனலாம்.

**1.5.6.0 விஜய நகர ஆட்சிக் காலம்**

தென்னிந்தியா முழுவதும் முகமதியர் ஆட்சி பரவவிடாமல் தடுப்பதற்கும் இந்து சமயத்தையும் கோயில்களையும் இந்து கலாச்சாரங்களையும் பேணிக்காத்த அரசர்கள் அழிவுற்றதால் ஏற்பட்ட வெற்றிடத்தை நிரப்புவதற்கும் தென்னிந்திய சமுகத்தையும் சமயத்தையும் காப்பதற்கும்தான் விஜயநகரப்பேரரசு கி. பி. 1336-இல் தோன்றியது.

முதலாம் புக்கனுடைய (கி.பி. 1355 - 1377) முதல் மகன் கம்பண உடையார் (குமார கம்பணர்) கி. பி. 1363 முதல் 1371 வரை உள்ள இடைப்பட்ட காலத்தில் மதுரை வரை சென்று மதுரையையும் இராமேஸ்வரத்தையும் விஜயநகர ஆட்சியின்கீழ் கொண்டு வந்தான். பின்னர்

தமிழகத்தின் பெரும் பகுதிகள் விஜயநகரப் பேரரசின்கீழ் வந்தன.

இக்காலத்தில் தோன்றிய வைணவ ஆச்சாரியர்களின் வரலாற்றை நோக்கும்போது இராமானுசரின் வைணவத்தைக் கடைபிடித்து வந்த ஆச்சாரியர்களிடத்திலும் வைணவ நெறியிலும் மாற்றங்கள் சில ஏற்பட்டுள்ளன. அதன் விளைவாக வைணவத்தில் வடகலை தென்கலை என்னும் இருபெரும் உட்பிரிவுகள் ஏற்பட்டன.

**1.5.6.1 வடகலை - தென்கலை:**

வடகலை என்பது வடமரபு என்றும் தென்கலை என்பது தென்மரபு என்றும் பொருள் படும். கலை என்பது "மொழி" என்னும் பொருள் தந்தாலும் இங்கு மரபையே குறிக்கின்றது. மேலும் தமிழகத்தின் வடக்கில் அதாவது காஞ்சிபுரத்தை மையமாகக் கொண்டு தோன்றிய மரபே வடகலையாகும். அவ்வாறே தமிழகத்தின் தெற்கில் அதாவது திருவரங்கத்தை மையமாகக் கொண்டு தோன்றிய மரபே தென்கலையாகும்.

என். ஜகதீசன் அவர்கள் வடகலை தென்கலை என்னும் பிரிவின் வித்து நாதமுனிகளின் காலத்திலேயே அமைந்தது என்றும் பின்னர் இராமானுசருக்குப் பிறகு இப்பிரிவுகளின் கருத்துகள் வெளிப்படையாகத் தோன்றின என்றும் அவற்றைத் தத்துவ வாதங்களாக

நிறுவியவர்கள் பிள்ளை லோகாச்சாரியரும் வேதாந்த தேசிகரும் ஆவர் என்று கூறுவர்.[118] இவற்றை மேலும் நிலைநாட்டியவர்கள் மணவாள மாமுனிகளும் பிரம்மதந்திர சுவதந்திர ஜீயரும் ஆவர் என்று அவர் கூறுவர். எனவே நாதமுனிகள் காலத்திலிருந்தே பிரிவினைக்கான வித்து இருந்தாலும் அதை வெளிப்படையாகக் கொண்டு வந்து தம்நூல்களின்வழி பிள்ளைலோகாச்சாரியரும் வேதாந்ததேசிகரும் நிறுவியுள்ளனர்.

வடகலை வைணவத்தைப் போற்றியவர் வேதாந்த தேசிகர், தென்கலை வைணவத்தைப் போற்றியவர் பிள்ளைலோகாச்சாரியர்.

பிரபத்தி (சரணாகதிநெறி) குறித்து ஏற்பட்ட வேறுபட்ட கருத்துக்களே வடகலை தென்கலை என்னும் பிரிவுக்குக் காரணமாகும். இறைவனுடைய அருளைப்பெறுவதற்குச் சொந்த முயற்சியே மேற்கொள்ள வேண்டும்: அம்முயற்சியின் திறத்தைச் சீர்தூக்கியே இறைவன்அருள் புரிவான்: சொந்த முயற்சி சிறிதும் இல்லாதவர்கள் இறையருளுக்குப் பாத்திரமாகிப் பிறவிப்பிணியை அறுப்பது இயலாத காரியம் என்று வடகலையினர் கருதினர். தென்கலையினர் இறைவனுடைய அருளைப் பெறுவதற்குச் சொந்த முயற்சி வேண்டியதில்லை இறையருள் எங்கும் நிறைந்திருப்பதால் வானம்தானே மழை பொழிவதுபோல அது வந்து நம்மைக் காக்கும்:

அதற்குத் தன்முனைப்பைவிட்டு இறைவன் எது செய்யினும் செய்க என்று வாளா இருப்பதே அறிவுடைமையாகும் என்று கருதினர்.

இதற்கு மார்க்கட நியாயம் (குறங்கு நெறி) மார்ச்சால நியாயம் (பூனை நெறி) என்னும் இரண்டு எடுத்துக்காட்டுகளை முறையே கூறுவர். குரங்குக் குட்டி எவ்வாறு தன் முயற்சியாலே தன்தாயின் மார்பைப்பற்றிக் கொள்கிறதோ அவ்வாறே நாமும் நம் முயற்சியால் இறையருளைப் பெற முயலவேண்டும் என்பர் வடகலையார். பூனைத் தன் குட்டியைத் தன் வாயால் கவ்விக்கொண்டு செல்வதைப்போலவே இறைவனும் தன் பக்தர்களைப் பிறவிக் கடலிலிருந்து காப்பாற்றிப் பரமபதத்திற்கு அழைத்துச் செல்வான் என்று தென்கலையினர் கூறுவர். மேலும் பல்வேறு கருத்துகள் காலப்போக்கில் ஏற்பட்டன. பதினெட்டு நிலையான வேற்றுமைகள் இரண்டிலும் உள்ளன. அவற்றை 'அஷ்டாதச பேதங்கள்' என்பர். வடகலையினர் வழிபாட்டின்போது வேதத்திற்கு முதலிடம் தந்தனர். அதனால் தென்கலையினர் ஆழ்வார் பாடல்களுக்கு முதலிடம் தந்தனர். தங்களை அடையாளம் காட்டிக்கொள்ள வடகலையினர் பாதம் வைக்காத நாமத்தையும் தென்கலையினர் பாதம் வைத்த நாமத்தையும் நெற்றியில் அணிந்து கொண்டனர். தென்கலையினர் கொள்கை தீண்டாமையை ஒழிப்பதைத் தீவிரமாக கொண்டதெனலாம்.

**1.5.6.2 வேதாந்த தேசிகர்:**

இவர் கி. பி. 1268 - 1369 என்னும் இடைப்பட்ட பகுதியில் வாழ்ந்தவராவார். காஞ்சிபுரத்தின் அருகில் இருந்த தூப்புல் என்னும் ஊரில் தோன்றினார். நூற்றுக்கும் மேற்பட்ட நூல்களைத் தமிழிலும் வடமொழியிலும் மணிப்பிரவாள நடையிலும் இயற்றியுள்ளார். அவை தனி நூலாகவும் சித்தாந்த தோத்திர நூலாகவும் உள்ளன. ஆழ்வார்களுடைய பாடல்கள் வடமொழி வேதத்திற்குச் சமமாகும் என்று கூறியவர் இவர். இவர்தம் பாடல்கள் எளிய நடையிலும் சிறந்தும் உள்ளனவாகக் கூறுவர். மேலும், இவர்தம் படைப்புகள் சில வடமொழிப்புலவர்களான காளிதாசர், பாரவி, மாக ஆகியோரின் படைப்பைவிட சிந்துள்ளனவாக என். ஜெகத்சன் கூறுவர். [119]

இராமாநுசருக்குப் பிறகு ஆச்சாரியர் வரலாற்றில் மிகவும் சிறப்புக்குரியவர் இவர்: வடகலை வைணவத்தை வளர்த்தார். தென்கலையாரின் கருத்துக்களை மறுத்து நூல்கள் பலவற்றில் தம் கருத்துகளை நிறுவியுள்ளார்.

வடக்கில் உள்ள காசி, பதரிகாசிரமம், அயோத்தி, பூரி, அகோபிலம் முதலான திருப்பதிகளுக்குச் சென்று இறைவனைத் தரிசித்துள்ளார். பின்னர் காஞ்சிக்குத் திரும்பிவந்து வைணவத் தொண்டு புரிந்து வந்தார். திருவரங்கத்தில் அத்வைத மதத்தவருக்கும் ஸ்ரீ வைஷ்ணவ மதத்தவருக்கும் இடையே வாதம் நிகழ்ந்து கொண்டிருந்தபோது அங்குச் சென்று விசிட்டாத்வைதத்தை

நிலைநாட்டினார். இவர்தம் திறமையைத் தென்கலையினரும் பாராட்டி வைணவச் சமயத் தலைவராக ஏற்றுக் கொண்டனர். சிலர் இவருக்குப் பல இன்னல்களையும் விளைவித்தனர்.

வேதாந்த தேசிகருக்குப் பிறகு அவர் மகனும் சீடனுமான நயினாச்சாரியர் (கி.பி. 1316- 1385) வடகலை ஆச்சாரியராக விளங்கினார். அவரின் மற்றொரு சீடரான முதலாம் பிரம்மதந்திரசுவதந்திர ஜீயர் மைசூரில் உள்ள பரகாலமடத்தை நிறுவியவராவார். நயினாச்சாரியர் கேரளம் வரைசென்று பலரை ஸ்ரீவைஷ்ணவர்களாக்கினார். தம் தந்தையின் சம்பிரதாயத்தை வளர்த்த இவருடன், வடகலை ஆச்சாரிய பரம்பரை முடிவடைந்தது.

**1.5.6.3 பிள்ளைலோகாச்சாரியர்:**

இவர் வடக்கு திருவீதிப்பிள்ளையின் மகனும் நம்பிள்ளையின் சீடனுமாவார். வேதாந்த தேசிகரின் சமகாலத்தவர். அழகிய மணவாளப் பெருமாள் நாயனார், கூரகுலோத்தமதாசர், விளாஞ்சோலைப்பிள்ளை, திருவாய்மொழிப்பிள்ளை ஆகியோர் இவர்தம் சீடர்களாவர். அஷ்டதச ரகசியங்கள் என்னும் பதினெட்டு நூல்களை மணிப்பிரவாளநடையில் எழுதியுள்ளார். அவை தென்கலை வைணவக் கருத்துகளைக் கூறுகின்றன. ஸ்ரீவசனபூஷணம் என்னும் நூல் அவற்றுள் மிகவும் சிறந்ததாகும்.

முகமதியர்கள் திருவரங்கக் கோவிலைச் சூறையாடியபோது பிள்ளைலோகாச்சாரியர் மூலவருக்குக்

கல்காப்பிட்டு வைத்து உற்சவரோடு வெளிப்போந்து சோதிடக்குடி என்னும் கிராமத்தில் அவரை வைத்துப் பூசித்துக் காத்து வந்தார். திருவரங்கத்தில் இருந்தபோது ஆச்சாரியபீடம் வகித்து வைணவத் தொண்டாற்றினார். இவர் சாதியில் உயர்வு தாழ்வு இல்லை, ஞானத்தினாலும் பக்தியினாலும் உயர்வு தாழ்வு ஏற்படுகிறது என்ற கொள்கையை உடையவர். இவருக்குப்பின் இவர் தம்பி அழகிய மணவாளப்பெருமாள் நாயானார் தென்கலை வைணவத்தை வளர்த்தார். இவர் இயற்றிய ஆச்சாரிய ஹிருதயம் மிகவும் சிறப்புடையதாகும்.

**1.5.6.4 மணவாள மாமுனிகள்:**

இவர் ஆழ்வார் திருநகரிக்கு அருகில் கி. பி. 1370-இல் தோன்றினார். இராமாநுசரே மீண்டும் மணவாளமாமுனிகளாகத் தோன்றியதாக வைணவர் கூறுவர். இவர் பெரிய ஜீயர் என்று பலராலும் பாராட்டப்பட்டார். ஆச்சாரிய பரம்பரையில் சிறந்தவர்.

ஸ்ரீவசனபூஷணம், ஆச்சாரிய ஹிருதயம், இராமாநுச நூற்றந்தாதி, பெரியாழ்வார் திருமொழி முதலான நூல்களுக்கு வியாக்கியானங்கள் இயற்றியுள்ளார். இவர்தம் நூல்களில் திருவாய்மொழி நூற்றந்தாதி, உபதேசரத்தினமாலை, ஆர்த்தி பிரபந்தம், யாதிராஜவிம்சதி ஆகியன மிகவும் சிறப்புடையனவாகும்.

திருவரங்கம் கோவில் நிர்வாகத்தில் முறைகேடுகள் சில நிகழ்ந்தபோது அவற்றைச் சீர்படுத்தி

அமைத்தார். இன்றும் இவர்தம் திருத்தத்தின்படி கோவில் நிர்வாகம் நடந்து வருகிறது. பின்னர் இவர் திருப்பதியிலும் மூன்று ஆண்டுகள் தங்கியிருந்தார்.

மணவாள மாமுனிகளுக்குச் சீடர்கள் பலர் இருந்தாலும் அவர்களுள் மிகவும் சிறப்புக்குரியவர் எண்மர் ஆவர். அவர்களை அஷ்டதிக்கஜங்கள் என்பர். இவர்கள் வைணவத்தை மேலும் பரப்பினர்;பிறரை ஸ்ரீவைஷ்ணவர்களாக்கினர். இவர்களுள் மிகவும் சிறப்புக்குரியவர் வானமாமலைராமாநுச ஜீயர். இவர் வானமாமலை மடத்தை நிறுவினார். பலரை மதமாற்றம் செய்ய நீண்ட பயணம் மேற்கொண்ட மாமுனிகள் தென்கலை வைணவத்தைப் பரந்த அளவில் பரப்பினார். ஆழ்வார் திருநகரியில் இராமாநுசர் கோவிலை அமைத்தார். திருவரங்கத்தில் இவர் இருந்த மடத்தில் பிள்ளைலோகாச்சாரியரின் திருமேனியை எழுப்பினார். கி. பி. 1443-இல் இவர் இறைவன் திருவடி சேர்ந்தார். பின்னர் இவர் சீடர்கள் இவர்தம் நெறியைப் பரப்பினர்.

வடகலை வைணவ ஆச்சாரியர்களான வேதாந்த தேசிகர், அவர்தம் மகன் நயினாராச்சாரியர் ஆகியோரின் மறைவுக்குப் பிறகும் மணவாளமாமுனிகளின் அஷ்டதிக்கஜங்கள் இருந்து தொண்டாற்றியமையால் தென்கலை வைணவம் மக்களிடையே சிறந்த இடத்தைப் பெற்றது. வடகலை வைணவர்களும் சிலர் தம் பாதுகாப்பிற்காகதென்கலை வைணவத்தைத் தழுவினர்.

**1.5.6.5 அரசர் தொண்டு:**

உயர் சமயங்களாக விளங்கிய சைவம் வைணவம் என்னும் இரு சமயங்களும் விஜயநகர மன்னர்களால் ஆதரிக்கப்பட்டன. பேரரசின் தொடக்கத்தில் ஆட்சி புரிந்த சங்கம சாளுவ மரபினர் வைணவக் கொள்கைகளையும் ஆதரித்தனர். துளுவ ஆரவீட்டு மரபினர் வைணவக் கொள்கைகளையும் சைவ சமயத்தையும் வேற்றுமையின்றி ஆதரித்தனர்.

15-ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் தோன்றிய சாளுவ மரபினர் திருப்பதி திருமாலையும் அகோபிலம் நரசிம்ம சாமியையும் தங்களுடைய குல தெய்வங்களாகக் கருதினர். சைவம், வைணவம் என்னும் இரு சமயத்தைச் சேர்ந்த கோயில்களுக்குத் திருப்பணிகள் பல செய்தாலும் வைணவக் கோவில்களுக்குச் சலுகைகள் பல அவர்கள் செய்தார்கள் என்று அ. கிருஷ்ணசாமி குறிப்பிடுவர். [121]

கிருஷ்ண தேவராயரும் அச்சுத தேவராயரும் காஞ்சிபுரம் அருளாளப் பெருமாள் கோவிலுக்குப் பல திருப்பணிகள் செய்தனர். இரண்டாம் குலோத்துங்க சோழன் அகற்றிய தில்லைக் கோவிந்தராசப் பெருமாளைச் செஞ்சியின் நாயக்கன் கிருஷ்ணப்பன் கி. பி. 1539-ஆம் ஆண்டில் எழுப்பினான். அக்கோவில் வழிபாட்டிற்காக 500 பொற்காசுகள் அச்சுதராயரால் அளிக்கப்பெற்றன. சதாசிவராயரும் இராமராயரும் ஆட்சிபுரிந்த காலத்தில் திருப்பதி, ஸ்ரீபெரும்புதூர்,

திருவரங்கம் முதலிய வைணவத் திருப்பதிகளுக்குப் பேராதரவு கிடைத்தது.[122]

விஜயநகர ஆட்சியில் வைணவம் மிகவும் சிறப்புற்று மக்களிடையே செல்வாக்கு பெற்றிருந்தது என்றும் விஜயநகர மன்னர்கள் அதைக் கடைபிடித்தனர் என்றும் கே. ஏ. நீலகண்ட சாஸ்திரிகள் கூறுவர்.[123] மேலும் கி. பி. 1556-இல் சதாசிவராயர் இராமராயரின் வேண்டுதல்படி 31 கிராமங்களை ஸ்ரீபெரும்புதூரில் உள்ள இராமாநுசரின் கோவிலுக்கும் அதைச் சார்ந்த மடத்திற்கும் திருவிளையாட்டமாகக் கொடுத்துள்ளதை அவர் குறிப்பிடுவர்.

வைணவக் கோவில்களில் வேதங்களையும் திராவிட பிரபந்தங்களையும் பாராயணம் செய்வதற்குக் கிருஷ்ணதேவராயர்காலத்தில் நிலங்கள்வழங்கப்பட்டன.[124]

### 1.5.6.7 வைணவ நூல்கள் (14-ஆம் நூற்றாண்டு)

இக்காலத்தில் தோன்றிய வில்லிபுத்தூராழ்வார் வைணவ அந்தணராவார். 4339 விருத்தப்பாக்கள் கொண்ட பாரதத்தை இயற்றினார். அந்நூலுள் சருக்கங்கள் தோறும் திருமால் வணக்கம் அமைந்துள்ளது. வைணவத்தில் ஆழ்ந்த பற்றிருந்தாலும் இவர் சிவனைக் குறைத்துப்பேசியதில்லை.

கிருஷ்ணதேவராயர் காலத்தவரான செவ்வைசூடுவார் என்பவர் பாகவத புராணத்தை இயற்றினார். தமிழில் தோன்றிய முதல் பாகவத நூல் இது

என்பர். அதே காலத்தவரான அரிதாசர் என்பவர் இருசமய விளக்கம் என்னும் நூலை இயற்றியுள்ளார். இந்நூல் சைவ கருத்துக்களை மறுத்து வைணவக் கருத்துகளை உயர்த்திக்கூறுகிறது.[125] நாகலாபுரத்தில் (சித்தூர் மாவட்டம், ஆந்திரம்) கருமாமணிவண்ணன் கோவிலையும் அமைத்தார். தமிழ் நாட்டில் இருந்த பல தேவாலயங்களுக்கு அரிதாசர் மேற்பார்வையாளராகவும் இருந்ததாகக் கூறுவர்.[126]

இவ்வாறாக, விஜயநகர ஆட்சிக்காலத்தில் வைணவ ஆச்சாரியர்கள் தோன்றி ஒரு புறம் வைணவத்தை வளர்த்துக் கொண்டிருக்க மறுபுறம் விஜயநகர மன்னர்கள் வைணவக் கோவில்களுக்குத் திருப்பணிகள் பலவற்றைச் செய்து வைணவத்தைப் போற்றினர். வைணவப் புலவர்களும் தோன்றி வைணவ நூல்களை இயற்றினர்.

முகமதியர்களின் தாக்குதல்களால் இந்து மதமும் கோவில்களும் பெருமளவில் அழிவுக்குள்ளாயின. அதைப்போக்க விஜயநகர ஆட்சி தோன்றியதாலும் அரசர்களும் சைவம் வைணவம் என்னும் வேறுபாடு இன்றித் திருப்பணிகள் செய்ததாலும் சைவ வைணவர்களிடையே பூசல்கள்பெருமளவில் நிகழவில்லை. ஆனால் துவைதம், அத்வைதம், விசிட்டாத்வைதம் மேற்கொண்ட ஆச்சாரியர்களிடையே வாதங்கள்நிகழ்ந்தமை அவர்தம் வரலாற்றின்வழி தெரிகின்றது. மேலும் வடகலை தென்கலை என்ற பிரிவினர்களுக்கிடையே இருந்த கருத்து

வேற்றுமைகளையும் அறியலாம்.

இக்காலத்தில் கிறித்தவம் வளரத் தொடங்கியதால் அவர்கள் இந்து மதக் கோவில்கள் சிலவற்றை அழித்ததை வரலாற்றில் காண முடிகிறது. அவர்கள் நாகூரில் இருந்த அரங்கநாதர் ஆலயத்தை இடித்தனர். தக்க சமயத்தில் விஜயநகரப்படையினர் அங்குச் சென்று அக்கோவிலைப் பழுதுபார்த்து மீண்டும் எழுப்பிக் கொடுத்தனர்.[127]

**1.5.7.0 நாயக்கர் காலம் (கி. பி. 1529 - 1736)**

தமிழகத்தின் மதுரை, தஞ்சை, செஞ்சி ஆகிய இடங்களில் விஜய நகரப் பேரரசர்களின் கீழ் அரசு புரிந்து வந்த நாயக்கர்கள், கி. பி. 1565-இல் நடந்த தலைக்கோட்டைப் போருக்குப் பிறகு தனித்தனியாக தத்தம் நாட்டு மன்னர்களாக முடிசூடிக்கொண்டனர். கி. பி. 1529 முதல் 1736 வரை உள்ள 207 ஆண்டுகள் இவர்கள் ஆட்சி நடைபெற்றது. தமிழர் வரலாற்றில் இக்காலம் மிகவும் குறிப்பிடத்தக்கதாகும்.

**1.5.7.1 அரசர்கள் தொண்டு:**

நாயக்கர் காலத்தில் சமயச் சடங்குகளும் சமய விழாக்களும் கோவில் திருப்பணிகளும் பெருகின. திருமால் வழிபாடும் சிவன் வழிபாடும் இக்காலத்தில் மிக உயர்ந்த இடத்தைப் பெற்றிருந்தன. "கிருத்தவர்கள் தீவிரமாக தம் சமயத்தைப் பரப்ப முயன்றமையால் இக்காலத்தில் அதை முறியடிக்கச் சைவமும்

வைணவமும் பெரிதும் பூசலின்றிக் காணப்பட்டன" என்று அ.ராமகிருஷ்ணன் கூறுவர்.[128]

நாயக்க மன்னர்கள் வைணவர்களாக இருந்த போதிலும் பிற மதங்களின்மீது காழ்ப்புணர்ச்சி இன்றிப் பெருந்தன்மை உடையவர்களாக இருந்தனர். கிறித்தவர்களுக்கும் முகமதியர்களுக்கும் பல நிவந்தங்கள் அளித்துப் போற்றியுள்ளனர்.

சிதம்பரத்தில் இரண்டாம் குலோத்துங்கன் கோவிந்தராசப்பெருமாளின் திருமேனியை அகற்றிவிட்ட பிறகு 1597-இல் தில்லை தீட்சிதர்கள் மிகத் தீவிரமாக எதிர்த்தபோதும் மீண்டும் அங்கு அப்பெருமாளின் திருமேனியை அமைத்துக் கொடுத்த பெருமை செஞ்சியின் நாயக்கன் இரண்டாவது கிருஷ்ணப்பனையே (1580 - 1620) சாரும். அக்கோவில் வழிபாட்டிற்கும் திருப்பணிகள் பலவற்றையும் செய்துள்ளான். [129]

திருவரங்கம் கோவிலைச்சுற்றி ஆறு திருச்சுற்றுகள் நாயக்க மன்னர்களால் கட்டப்பட்டன. மேலும், கோவில்கள் பலவற்றுக்குப் பல கோபுரங்களையும் ஆயிரங்கால் மண்டபங்களையும் கட்டும் புதிய கலைப்பணியை அவர்கள் பின்பற்றினர். காஞ்சி வரதராசப்பெருமாள் கோவிலிலுள்ள ஆயிரங்கால் மண்டபம் இக்காலத்தில் எழுந்ததாகும்.

விசுவநாத நாயக்கர் (கி. பி. 1529 - 1564) திருவரங்கம்

கோவிலைச் சீர்படுத்திச் சுற்றிலும் வீடுகளைக்கட்டி மக்களைக் குடியேற்றினார். கோவிலுக்காக மூன்று லட்சம் பொன் செலவிட்டார். முதலாம் கிருஷ்ணப்ப நாயக்கர் (கி. பி. 1564 - 1572) கிருஷ்ணபுரத்தில் திருவேங்கடநாதர் கோவிலைக்கட்டி அதற்குத் திருப்பணிகள் பல செய்தார். திருமலை நாயக்கர் (கி. பி. 1623 - 1659) மதுரை மீனாட்சி சுந்தரேஸ்வரர் கோயிலை நன்கு புதுப்பித்ததோடு அழகர் கோயில், ஸ்ரீவில்லிபுத்தூர் ஆண்டாள் கோயில், திருவரங்கம் பெரிய கோவில் ஆகியவற்றிற்குத் திருப்பணிகள் செய்துள்ளார். மேலும் பலர் வைணவக் கோவில்களுக்குத் திருப்பணிகள் செய்துள்ளனர்: நிவந்தங்களும் அளித்துள்ளனர். [130]

விஜயநகரப் பேரரசின் நோக்கம் இந்து சமயத்தையும் இந்து சமயப் பண்பாட்டையும் அழிந்து போகாமல் பாதுகாப்பதாகும். முகமதியர் படையெடுப்பைத் தடுத்து நிறுத்தி இந்து சமயத்தைக் காத்தனர்; அதன் வழியில் வைணவர்களான அவர்கள் வைணவக் கோவில்களைக் கட்டினர்; கோவில் விழாக்கள் நடக்க ஏற்பாடு செய்தனர்; சமயப்பற்றை மக்களிடத்தில் வளர்த்தனர்; சைவத்தையும் வேறுபாடின்றி போற்றினர்; அதனால் சைவமும் வைணவமும் அவர்களால் பாதுகாக்கப்பட்டன எனக் கூறலாம். இந்நாயக்கருள் மதுரை நாயக்க மன்னர்கள் செய்த பணிகள் அளப்பரியன.

### 1.5.7.2 வைணவப் புலவர்கள் - வைணவ நூல்கள்:

இக்காலத்தில் நம்மாழ்வார்மீது மிகுந்த பக்தி கொண்ட திருக்குருகைப் பெருமாள் கவிராயர் (16ஆம் நூற்றாண்டு) மாறன் அகப்பொருள், மாறன்பாவினம், மாறன் அலங்காரம் என்னும் இலக்கண நூல்களுடன் நம்பெருமாள் மும்மணிக்கோவை, திருப்பதி கலம்பகம், மாறன் கிளவி மாலை என்னும் நூல்களை இயற்றினார். இவர் இயற்றிய திருக்குருகை மான்மியம் என்னும் தலபுராணம் திருக்குருகையின் தலச்சிறப்பையும் நம்மாழ்வாரின் வரலாற்றையும் கூறுகிறது. அழகர்கோவிலின் தலபுராணம் கூறும் கூடற்புராணமும் இக்காலத்தில் தோன்றியவைதாம்.

அழகிய மணவாளதாசர் என்னும் பிள்ளை பெருமாள் ஐயங்கார் ( 17ஆம் நூற்றாண்டு ) திருவரங்கன் மீதும் திருவேங்கடவன் மீதும் இனிய பாடல்களைப் பாடியுள்ளார். அவர் இயற்றிய நூல்கள் எட்டு. அவற்றை "அஷ்டபிரபந்தம்" என்பர். அழகர்அந்தாதி. திருவரங்கக் கலம்பகம். திருவரங்கத்தந்தாதி. திருவரங்கத்துமாலை. திருவரங்கத்து ஊசல். திருவேங்கடத்தந்தாதி. திருவேங்கடமாலை நூற்றெட்டுத் திருப்பதி அந்தாதி என்பன அவை.

### 1.5.8.0 மராட்டியர் காலம் ( கி.பி. 1676 - 1855)

தஞ்சை நாயக்கனான செங்கமலதாசின் ஆட்சியை ஏசோகி ( பீஜப்பூர் சுல்தான் அடில்சாவின் தளபதி ) 1676-இல் கைப்பற்றி ஆளத் தொடங்கினான். அன்று முதல் தஞ்சை, மராட்டியரின் ஆட்சிக்கு உட்படலாயிற்று.

சிவாஜி செஞ்சியையும் வேலூரையும் கைப்பற்றிச் சந்தாஜி என்பவரை ஆளுனராக நியமித்தான். 1855-இல் தஞ்சை டல்ஹௌசிப் பிரபுவின் காலத்தில் ஆங்கிலேயரின் நேரடி ஆட்சிக்கு உட்பட்டது. அதுவரை மராட்டிய மன்னர்கள் தஞ்சையை ஆண்டு வந்தனர்.

மராட்டிய மன்னர்கள் செய்த கோயிற் பணிகளைக் குறித்து கே. எம். வேங்கடராமையா அவர்கள் இவ்வாறு கூறுவர். " தஞ்சை மராட்டிய மன்னர்கள்தம் காலத்துக்கு முன் இருந்த கோயில்களை நன்கு புரந்து வந்தனர்; சிலவற்றைத் தம் நேர்பார்வையில் வைத்துப் புரந்தனர்; சிலவற்றைப் புரந்து கொண்டிருந்தவரிடத்திலேயே விட்டுத் தாம் விரும்பிய வண்ணம் உதவிகள் புரிந்தனர். பொதுவாக நோக்கில் அவர்கள் சிவ பக்தர்களாகத் திகழ்ந்தனர் எனலாம்; எனினும் வைணவ சமயத்தையும் போற்றியேற்றுத் திருமால் வழிபாட்டிலும் ஈடுபாடுடையவராய்த் திருமால் கோயில்கள் பலவற்றைப் பாதுகாத்தனர் ; பல புதிய கோயில்களையும் எழுப்பித்தனர்; சிலவற்றுக்குத் திருப்பணி செய்தனர்" 131 என்று அவர் கூறுவர். இதிலிருந்து அவர்கள் பொதுவாகச் சிவபக்தர்களாக இருந்தும் வைணவக்கோயில்களுக்குப் பல தொண்டுகள் செய்திருத்தலை அறியலாம்.

தஞ்சையில் உள்ள கீழசிங்கப்பெருமாள். பிரசன்னவெங்கடேசர்.வரதராஜப்பெருமாள்.மதனகோபால்சாமி. நவநீத கிருஷ்ணசாமி. கோவிந்தராஜப்பெருமாள். கல்யாண வெங்கடேசர். லக்ஷ்மி நாராயணசாமி முதலான

கோவில்கள் மராட்டிய மன்னர்களின் நேர்ப்பார்வையில் இருந்தன, கோட்டையின் விண்ணாற்றங்கரையில் கி.பி.1777-இல்நீலமேகப்பெருமாள். மேலசிங்கப்பெருமாள் கோயில்கள் எடுக்கப்பட்டன , கீழவாசல் அருள்மிகு லக்ஷ்மி நரசிம்ம கோயில் எடுப்பிக்க கி,பி , 1826-இல் 2900 - 150 1/2 சக்கரம்[132] வழங்கப்பெற்றன, திருப்பதிக்கு ஆண்டுதோறும் சப்பரம் எடுத்துச் சென்று திரும்பக்கொண்டு வந்தனர், திருவரங்க அரங்கநாதனுக்கு ஆண்டுதோறும் அரண்மனையிலிருந்து அகண்டதீபம், துளசியருச்சனை, நைவேத்தியம் ஆகியவை நடந்து வந்தன, கும்பகோணம் சாரங்கபாணி கோயிலுக்கு 1842-இல் கும்பாபிஷேகம் நடத்தினர். [133] இவ்வாறாக. தஞ்சை மராட்டிய மன்னர்கள் வைணவக் கோயில்களுக்குத் திருப்பணிகள் செய்ததோடு புதிய கோவில்கள் சிலவற்றையும் எழுப்பியுள்ளனர்,

இக்காலத்திலும் கிறித்தவமும் இசுலாமியமும் வளரத் தொடங்கியமையால் மராட்டிய மன்னர்கள் அவற்றின் வளர்ச்சிக்கும் பல உதவிகள் செய்துள்ளனர். ஆயினும் அவர்கள் இந்து சமய வளர்ச்சிக்கே .முதலிடம் தந்தனர். இதுகுறித்துக் கூறும்போது ஏ. சுவாமிநாதன் என்பவர் “ இந்துக்கள் வசிக்கும் தெருக்களிலும் இந்துக்கோயில்கள் அருகிலும் வெளிநாட்டவர்களோ கிறித்தவர்களோ தங்க மராட்டியர்கள் அனமதிக்கவில்லை” என்று கூறுவர், எனவே அவர்கள் இந்து சமய வளர்ச்சிக்குப் பெரிதும் உதவினர் என்பது தெரிகிறது,

### 1.5.9.0. ஐரோப்பியர் காலம் ( 1750 - 1947 )

நாயக்கர் ஆட்சி நலியத் தொடங்கியதும் முகமதியர் பலமுறை முயன்று தமிழகத்தைக் கைப்பற்றி ஆண்டனர், ஆயினும் நிலையான ஆட்சியை அவர்களால் நிலைநாட்ட முடியவில்லை, உள்நாட்டுக் குழப்பங்கள் மிகுந்து இருந்தன, இவற்றை வாய்ப்பாகப் பயன்படுத்திக்கொண்டு வாணிபத்தின் பொருட்டு வந்த ஆங்கிலேயர்கள், பிரெஞ்சுக்காரர்கள், டச்சுக்காரர்கள் என்னும் ஐரோப்பியர்கள் தமிழ் நாட்டின் பல இடங்களில் ஆளத்தொடங்கினர், இவர்களுள்ளும் அடிக்கடி உட்பூசல்கள் நடைபெற்றன, இறுதியாகப் பாண்டிச்சேரி. காரைக்கால் பகுதிகள் பிரெஞ்சுக்கார்களுக்கும் ஏனைய பகுதிகள் ஆங்கிலேயர்களுக்கும் உட்பட்டன, இவர்கள் ஆட்சி இந்தியா விடுதலை அடையும் வரை ஓங்கி இருந்தது,

### 1.5.9.1 இந்து சமயத்தில் மாற்றம்

சைவம் வைணவம் இசுலாமியம் என்னும் மதங்களால் தொடக்கத்தில் கிறித்தவம் கண்டனத்திற்கு உள்ளானாலும் ஆங்கில பிரெஞ்சுக்காரர்களின் ஆட்சியில் வளர முற்பட்டது, இந்துக்கள் பலர் அம்மதத்தைத் தழுவினர், ஐரோப்பியரின் பண்பாட்டாலும் கல்வியாலும் இந்துக்கள் தம் பண்பாட்டில் உள்ள குறைகளைக் களைய முற்பட்டனர். சைவர்களும் வைணவர்களும் ஒன்றுபட்டுத் தம் மதத்தைக் காக்க முற்பட்டனர்.

இந்நிலையில் வட இந்தியாவில் ராஜாராம் மோகன்ராய் ( 1774 - 1883 ) தேவேந்திரநாத் தாகூர். கேசப் சந்திரசென். ராமகிருஷ்ண பரமஉறம்சர் (1824 - 1887 ), விவேகானந்தர் ( 1862 - 1902 ), தயானந்த சரஸ்வதி (1824 - 1883) முதலானோர் தோன்றி இந்துசமயக் கோட்பாடுகளில் பல அடிப்படையான - புரட்சிகரமான மாற்றங்களைச் செய்தனர், அதன் விளைவாக இந்து மதத்தில் இருந்த ஜாதி வேறுபாடு. மூடப்பழக்க வழக்கங்கள். சடங்குகள். தீண்டாமை முதலியன மறையத் தொடங்கின.

தமிழகத்தில் இராமலிங்க சாமிகள் (கி. பி. 1823 - 1874) தோன்றிச் சமரச சுத்த சன்மார்க்க நெறியைத் தோற்றுவித்தார். சன்மார்க்கம் என்பது எல்லோரையும் ஒன்றுபடுத்தும் உண்மை நெறியாகும். இறைவனை ஒளி வடிவமாகக் காணவேண்டும் எனறார்; மூட பழக்கவழக்கங்களையும் மரபுகளையும் ஒழிக்க முயன்றார். புராணங்களையும் சாத்திரங்களையும் கற்பனைகள் என்றார். மனிதனுக்குச் செய்யும் தொண்டே இறைவனுக்குச் செய்யும் தொண்டு என்று இறுதியாகக் கூறினார்.

இந்நிலையில் மாற்றமுற்ற இந்து மதத்தின் உட்பிரிவான வைணவம் தன்னிடம் உள்ள குறைகளை நீக்கிக் கொண்டு மக்களிடையே பொலிவோடு வாழ்ந்தது. கோவில்கள் அதை நிலை நாட்டும் வகையில் சிறந்து விளங்கின. புதிய சிந்தனைகள் தமிழ்நாட்டின் வைணவத்தில் தோன்றவில்லையென்றாலும்

ஆச்சாரியர்களின் வடகலை தென்கலை சிந்தனைகள் காக்கப்பட்டன. இரு பிரிவினருக்களுக்கிடையே அவ்வப்போது வழக்குகளும் நிகழ்ந்துள்ளன. 1754, 1776, 1790, 1803, 1841, 1865, 1867, 1879 என்னும் ஆண்டுகளில் இத்தகு வழக்குகள் நிகழ்ந்துள்ளன.[134]

*1.5.9.2. வைணவ நூல்கள்:*

இக்காலத்தில் வைணவர்களேயல்லாமல் சைவர்களும் ஒரு சிலர் வைணவம் சார்ந்த நூல்களை இயற்றியுள்ளனர். உரைநடையும் ஆராய்ச்சியும் வளர்ந்தமையால் சிலர் உரைநடையில் வைணவ நூல்களை விளக்கும் வகையிலும் வைணவக் கருத்துக்களை ஆயும் வகையிலும் பல நூல்களை வெளியிட்டனர்.

18 -ஆம் நூற்றாண்டில் தோன்றிய அஷ்டாவதானம் அரங்கநாத கவிராயர் பாரத காவியத்தையும் நல்லாப்பிள்ளை, முருகப்ப வாத்தியார் என்ற இருவர் வில்லிபுத்தூராரின்4300 செய்யுட்களோடு மேலும் 10,000 செய்யுட்களைப் பாடிச் சேர்த்து 14728 செய்யுட்கள் கொண்ட பெரிய நூலையும் உருவாக்கினர். அரபத்தநாவலர் அழகர் கலம்பகத்தையும் வீரராகவ முதலியார் திருவேங்கடக் கலம்பகம், திருவிருத்தம் என்னும் நூல்களுக்குச் சிற்றுரையும் ஆழ்வார்கள் சரித்திரம் பட்டர் வைபவம் என்னும் உரைநடை நூல்களையும் இயற்றினார். இராமாநுசக்கவிராயர் (1832)

என்பவர் பார்த்தசாரதிமாலை, வரதராசப்பெருமான் பதிற்றுப்பத்தந்தாதி, திருவேங்கடஅனுபூதி என்னும் நூல்களைப் படைத்துள்ளார். தி.கோ. நாராயணசாமிப்பிள்ளை இராமாயணவெண்பா என்ற நூலை வழங்கினார். சைவர் எனப்படும் சீர்காழி அருணாசலக் கவிராயர் (1712 - 1779) அனுமார் பிள்ளைத்தமிழ், இராமநாடக கீர்த்தனை என்னும் நூல்களையும் இயற்றியுள்ளமை அவர்களின் மத வேறுபாடின்மையைக் காட்டுகிறது.

**1.5.10. இக்காலம்:**

மேலை நாட்டுப் பணபாட்டின் தாக்கத்தால் மனிதரின் வெளிவாழ்க்கையில் பல மாற்றங்கள் ஏற்பட்டாலும் இன்றும் மதத்தின் அடிப்படையில்தான் மக்கள் இயங்கி வருகின்றனர். பழைய வழிபாடுகள் இக்காலத்திலும் சில மாற்றங்களோடு பின்பற்றப்பட்டு வருகின்றன. எனவே வைணவ வழிபாடும் இக்காலத்தில் கோவில்களிலும் வீடுகளிலும் பின்பற்றப்பட்டு வருகின்றது. அதன் செல்வாக்கை பிரிக்கமுடியாத அளவிற்கு இன்றைய வைணவக் கோவில்கள் விளங்குகின்றன. பாராயணங்களும் பஜனைகளும் சொற்பொழிவுகளும் வைணவக் கோயில்களில் நடந்து வருகின்றன. திரைப்படம், தொலைக்காட்சி, வானொலி முதலானவற்றின் மூலமும் இந்து சமயக் கோட்பாடுகளை எடுத்துக் காட்டும் வகையில் வைணவக் கருத்துகள், பாடல்கள், கதைகள்

ஆகியன விளக்கப்பெறுகின்றன.

இன்றைய இந்திய அரசு சமயச் சார்பற்றதாக விளங்குவதால் மக்களிடையே சமயப் பூசல்கள் குறைந்துள்ளன. மக்களும் தாம் விரும்பும் சமயத்தைத் தழுவுகின்றனர். அந்நிலையில் வைணவமும் தன் செல்வாக்கால் இந்துமதத்தில் தனக்கென ஓர் இடத்தைப் பிடித்து நிலைத்து வருகிறது.

### 1.5.10.1 வைணவ நூல்கள்:

இக்காலத்தில் வைணவம் சார்ந்த பல நூல்களை இயற்றிச் சிறந்த தொண்டாற்றியவர் ஸ்ரீகாஞ்சி பிரதிவாதி பயங்கரம் அண்ணங்காராச்சாரிய சுவாமிகள் (கி.பி.1899 - 1986) ஆவார். இவர் ஆழ்வார்களின் பாடல்களையும் ஆச்சாரியர்களின் நூல்களையும் பதிப்பித்தும் உரை எழுதியும் வெளியிட்டுள்ளார். சமயக்கட்டுரைகளையும் தோத்திரங்களையும் பல இயற்றியுள்ளார். வடமொழி, தெலுங்கு, இந்தி .ஆகிய மொழிகளையும் அறிந்த இவர் அம்மொழிகளிலும் வைணவ நூல்னயை வெளியிட்டுள்ளார். இக்காலத்தில் அதிக நூல்களை இயற்றிய பெருமை இவருக்குரியதாகும். 1276 நூல்களை வெளியிட்டுள்ளதாகக் கூறுவர். காஞ்சி தேவப்பெருமாள் பெருந்தேவித்தாயார், திருவேங்கடமுடையான், அரங்கநாதன் ஆகியோர் மீது துதிப்பாடல்களையும் பல இயற்றியுள்ளார். ஆழ்வார்களின் அருளிச் செயல்களுக்கு "திவ்யார்த்த

தீபிகை" என்ற பெயரில் உரைகள் எழுதினார். மேலும் பல வகையில் அதிக அளவில் வைணவ நூல்களை இயற்றியும் வெளியிட்டும் சிறந்த வைணவத் தொண்டாற்றியதால் இக்காலத்தை "அண்ணங்காரச்சாரியரின் நூற்றாண்டாகக்" கொள்ளலாம் என்று கோ. க. அ. ரங்கராஜன் அவர்கள் குறிப்பிடுவர்.[135]

இக்காலத்தில் சிறந்த கவிஞராக விளங்கும் பாரதியாரும் கண்ணனைத் தோழன், தாய், தந்தை, சேவகன், அரசன், சீடன், சத்குரு, குழந்தை, விளையாட்டுப் பிள்ளை, காதலன், காதலி, ஆண்டான், குல தெய்வம் எனப் பலவகையில் கண்டு ஆழ்வார்கள் போன்று ஆழ்ந்து உணர்ச்சி பொங்கப் பாடியுள்ளார். இவரை அடுத்து கண்ணனைப் பாடிப் பெரும் புகழ் பெற்றவர் கவிஞர் கண்ணதாசன் ஆவார். அவர்தம் புனைபெயரே இதை வெளிப்படுத்தும்.

பி. ஸ்ரீ. ஆச்சாரியர், என். [illegible] ரெட்டியார் முதலானர்கள் வைணவ நூல்கள் தொடர்பாக ஆய்வு நூல்களை வெளியிட்டுள்ளனர். திருவேங்கடவன் பல்கலைக் கழகம் முதலான பல்கலைக் கழகங்களிலும் வைணவத்தின் மீதும் வைணவ நூல்களின் மீதும் ஆய்வுகள் மேற்கொள்ளப் பெற்று வருகின்றன.

இக்காலத்தில் வைணவத்தைப் பரப்பவும் வைணவ நூல்களை வெளியிடவும் ஸ்ரீ வைஷ்ணவ

சித்தாந்த சபைகள் சென்னை, காஞ்சிபுரம், கோயம்புத்தூர், திருவாரூர் முதலிய மடங்களில் ஏற்படுத்தப்பட்டுள்ளன. இச்சபைகள் ஆண்டுதோறும் பெரியோர்கள் பலரைக் கொண்டு சொற்பொழிவுகள் ஆற்றி வருகின்றன. சென்னை ஸ்ரீ வைஷ்ணவ சித்தாந்த சபை ஸ்ரீ வேதாந்த தீபிகை என்னும் திங்கள் இதழையும் நடத்தி வருகின்றது. திருப்பதியில் உள்ள திருமலை - திருப்பதி தேவஸ்தானம் "ஸப்தகிரி" என்னும் பெயரில் சமயத் திங்கள் இதழை வெளியிட்டு வருகின்றது; சமயம் சார்ந்த சிறப்பாக வைணவ சமய நூல்களை வெளியிட பண உதவிகள் அளித்தும் சில நூல்களை வெளியிட்டும் வருகின்றது.

## 1.6.0 ஆந்திர மாநிலத்தில் வைணவம்:

"ஆந்திரர்கள் என்னும் பெயர் தோன்றியதிலிருந்தே அவர்கள் சைவர்கள் என்று சிலர் கூறுவர். ஆனாலும் அவர்களிடையே வைணவம்கூட செறிந்துள்ளது என்று கூறலாம். ஆந்திரர்களின் ஊர்கள், பெயர்கள், குலங்கள், கோத்திரங்கள் ஆகியனவும் படைப்புகள், நடப்புகள், ஆடல்கள், பாடல்கள் ஆகியனவும் அவர்களிடையே எப்பொழுதும் வைணவத்தின் செல்வாக்கு இருத்தலைக் காட்டுகின்றன. பண்டைக் காலத்தில் அரசர்கள், அரசரைச் சார்ந்தவர்கள் சிறிது காலம் வைணவம் அல்லாத இதர மதங்களை ஆதரித்ததாகக் காணப்பட்டாலும் மக்கள் மட்டும் அன்று வைணவத்தை

விரும்பினர் எனக் கருதலாம். அவர்கள் விருப்பம் ஒரு கால கட்டத்தில் அரச மரபினர்களையும் ஏற்கச் செய்ததை அறியலாம்"[136] என்று வேடூரி ஆனந்த மூர்த்தி கூறுவர். இக்கூற்றுக்கு இணங்க ஆந்திர மக்களிடையே வைணவம் தோன்றி வளர்ந்து இன்று வரை நிலைத்து வாழ்வதை வரலாற்றுச்சான்றுகளிலிருந்தும் அறியலாம்.

### 1.6.1 சாதவாகனர் ஆட்சிக்கு முன்:

ஆந்திராவை ஆண்ட அரசர்களுள் சாதவாகனர்களே முதன் முதலில் ஆந்திர ஆட்சியை நிறுவியவர்களாக வரலாற்று ஆசிரியர்கள் கூறுவர். அவர்களுக்கு முன் கி. மு. 5, 6- ஆம் நூற்றாண்டுகள் வரை ஆந்திராவின் நிலையை அறிய தகுந்த சான்றுகள் இல்லையென்றாலும், பௌத்த நூல்கள், இந்துக்களின் சூத்திரங்கள், சுருதிகள் முதலியவற்றைக் கொண்டு ஒருவாறு வரலாற்று ஆசிரியர்கள் கூறுவர். இக்காலத்தில் ஆந்திரம் ஆரியர்கள் அல்லாத நாகர்களிடம் இருந்தது. நாகரிகம் அடையாத இந்நாகர்கள் மரம், பாம்பு முதலியவற்றை வணங்கி வந்தனர். கி. மு. 5, 6-ஆம் நூற்றாண்டளவில் வட நாட்டிலிருந்து ஆரியர்களான ஆந்திரர்கள் வந்து நாகர்களிடம் கலந்து உறவு முறைகளை ஏற்படுத்திக் கொண்டமையால் ஆரியர்களின் வைதிக நெறி நாகர்களிடம் கலந்தது. நாகர்களும் அதை ஏற்றனர்.[137] எனவே கி. மு. 5, 6-ஆம் நூற்றாண்டுகளில் ஆந்திரத்தில் வைதிக மதம் இருந்ததென அறியலாம். அதனால் அவர்கள்

திருமாலை மும்மூர்த்திகளில் ஒருவனாகவே கருதியிருக்க வேண்டும். தனிப்பட்ட திருமால் வழிபாடு அன்று இல்லை என்றே கருதலாம்.

### 1.6.2 சாதவாகனர்காலம் (கி. மு. 271 - கி. பி. 174)

இவர்கள் பிரதிஸ்டானம் (பைடான், ஔரங்கபாத் மாவட்டம், மகாராஷ்டிரம்), ஸ்ரீகாகுலம் (கிருஷ்ணா மாவட்டம்), அமராவதி (குண்டூர் மாவட்டம்) ஆகிய இடங்களில் தலைநகரங்களைக் கொண்டு கி. மு. 271 முதல் கி. பி. 174 வரை ஆந்திரத்தை ஆண்டனர்.

சாதவாகனர்கள் வைதிக மதத்தவர்கள்; வைதிகமானவளர்ச்சிக்கு காரணமானவர்கள்,அஸ்வமேகம் முதலிய பல யாகங்கள் செய்ததோடு அந்தணர்களுக்குத் தானங்கள் பல செய்துள்ளனர். இவர்கள் காலத்தில் பௌத்தமும் சமணமும் பரவியிருந்தமையால் அவற்றையும் வெறுக்காமல் போற்றியுள்ளனர்.

சாதவாகன அரசைத் தோற்றுவித்தவன் ஸ்ரீமுகன் (கி. மு. 271 - 248) என்பவன். இவன் பெயரே திருமாலுடன் தொடர்புடைய தாகக் காணப்படுகிறது. இவன் பெயரிலேயே ஸ்ரீகாகுளம் ஆந்திர விஷ்ணுவின் இடமாகி ஆந்திர அரசுப்பீடமானது என்று வேடூரி ஆனந்தமூர்த்தி கூறுவர்.[138] மேலும் ஸ்ரீமுகனின் தம்பியின் பெயரும் கிருஷ்ணன் (கி. மு. 248 - 230) என்பதாகும்.

முதல் சாதகர்ணியின் (கி. மு. 230 - 220) மனைவி நகோனிகாவின் நானாகட் (மகாராஷ்டிரம்) கல்வெட்டில் சங்கர்சனன் வாசுதேவனுடன் கூடிய வழிபாடு காணப்பெறுகிறது. இதைக் கொண்டு சாதவாகனர்களின் தொடக்கக் காலத்திலேயே சங்கர்சனன் வாசுதேவனுடன் கூடிய பாகவதமதம் பரவியிருந்ததாக பி. எஸ். எல். அனுமந்தராவு அவர்கள் கூறுவர்.[139] மேலும் பாலஸ்ரீயின் நாசிக் கல்வெட்டில் அவள் மகன் கௌதமி புத்திர சாதகர்ணியை (கி. பி. 62 - 86) அவள் பலராமனுடனும் கேசவனுடன் ஒப்பிடுவதைக் காண முடிகிறது. அவன் நாணயங்களில் வைணவத்தின் சின்னங்களான தாமரை, சங்கு ஆகியனவும் காணப் பெறுகின்றன. யக்ஞஸ்ரீயின் (கி. பி. 128 - 157) நாணயத்திலும் தாமரை காணப்படுகிறது. வாஸிஸ்தி புத்திர ஸ்ரீபுலுமாவின் காலத்தைச் சார்ந்த (கி. பி. 166 - 174) நாசிக் கல்வெட்டில் விஷ்ணு பாலித என்ற பெயரில் ஓர் அலுவலர் காணப்படுகிறார்.[140] இவ்வாறாக, ஆந்திராவுடன் கூடிய தக்காணப் பகுதிகளில் வைணவம் பரவியிருந்ததற்குச் சான்றுகள் பல கிடைக்கின்றன.

சாதவாகன மன்னர்களுள் 17-வது மன்னனான ஆலன் என்பவன் (கி. பி. 6 - 7) "காதாசப்தசதி" என்னும் பெயரில் ஒரு பிராகிருத மொழி நூலைத் தொகுத்துள்ளான். இந்நூலில் வைணவம் தொடர்பான பல பாடல்கள் கிடைப்பதாகக் கூறுவர். இதில்

“கிருஷ்ணன் பற்றிய பாடல்கள் பல உள்ளன. ராதை பற்றிய குறிப்பும் உள்ளது. அவள் கோபியர்கள் பிறரைவிட மிகவும் கண்ணனால் விரும்பப்படுபவளாகக் காணப்படுகிறாள். பிற்காலத்தில் மதுர பக்திக்கு எடுத்துக்காட்டாக விளங்கும் ராதை பற்றிய குறிப்பு முதன் முதலில் இந்நூலிலேயே காணப்படுகிறது. கிருஷ்ணன் - கோபியர் ஆடல்களைச் சில பாடல்கள் குறிப்பிடுகின்றன. வாமன அவதாரம் பற்றிய செய்தியும் உள்ளது. அவன் மார்பில் கௌஸ்துபம் மின்னுவதாகவும் அதில் திருமகளின் முகம் பிரதிபலிப்பதாகவும் அப்பாடல் கூறுகிறது” 141 இதனால், ஆலன் காலத்தில் அவதாரக் கருத்துகளுடன் கூடிய வைணவம் ஆந்திரத்தில் பரவியிருந்ததை அறியலாம்.

மேற்கண்ட சான்றுகளை நோக்கும்போது சாதவாகனர் ஆட்சிக் காலத்தின் தொடக்கத்திலேயே வாசுதேவனை வணங்கும் பாகவத மதம் மக்களிடையே வழக்கத்தில் இருந்ததோடு அரசர்களிடமும் விருப்பத்திற்குள்ளாகி இருந்ததை அறிய முடிகிறது. பின்னர்த் திருமாலின் அவதாரம் (வியூகம்) பற்றிய கருத்துகள் பரவின. ஆனால் சாதவாகனர்கள் வைதிக நெறியைக் கடைபிடித்தவர்களாகக் காணப்படுகின்றனர்.. பௌத்தம், சமணம், சைவம் ஆகிய மதங்களையும் வேற்றுமையின்றிப் போற்றியுள்ளனர். அதனால் வைணவம் எந்த அளவிற்கு மக்களிடமும், அரசர்களிடமும் செல்வாக்குற்றிருந்தது என அறிய

போதிய சான்றுகள் இல்லை.

### 1.6.3 இக்சுவாகர்கள் (கி. பி. 180 - 300)

சாதவாகனர் ஆட்சி அழிந்த பிறகு தாண்யகடகம் பகுதியைக் கைப்பற்றி இச்சுவாகர்கள் கி. பி. 180 முதல் கி. பி. 300 வரை ஆண்டனர். கிருஷ்ணா, கோதாவரி இரண்டிற்கும் இடைப்பட்ட பகுதி இவர்கள் ஆட்சியில் இருந்தது. இவர்கள் தலைநகரம் நாகார்ஜுன மலைப் பள்ளத்தாக்கில் உள்ள விஜயபுரி என்பதாகும்.

இச்சுவாகர் ஆட்சியில் பௌத்த மதம் செல்வாக்குபெற்று இருந்தது. புத்தர் விஷ்ணுவின் அவதாரமாகவும் இவர்கள்காலத்தில் கருதப்பட்டதாகக் கூறுவர்.[142] இவர்கள் தம் கோட்டையைச் சுற்றிலும் கிருஷ்ணா நதிக்கரையிலும் வைதிக ஆலயங்கள் பல எழுப்பியுள்ளனர். அவற்றுள் சிவன், திருமால் ஆலயங்களும் உள்ளன.

இச்சுவாகர்களுள் மூன்றாவது அரசனான எஹுவல சாந்தமூலன் காலத்தில் மேற்குத் தக்காணப் பகுதியை ஆண்டு கொண்டிருந்த ஆபீரமன்னனான வசுசேனனின் சிவசேபன் என்னும் அதிகாரி சேசகிரியின் மீது அஷ்டபுஜ நாராயணன் திருமேனியை எழுப்பினான். வனவாசியின் விஷ்ணு ருத்திர சிவானந்த சாதகர்ணி என்பவன் கி.பி. 270-.ல் அதை ஒட்டிய

கோவிலை அழகுபடுத்தினான். இதைக் கருத்தில் கொண்ட பி. எஸ். எல். அனுமந்தராவு அவர்கள், பௌத்தமும் சைவமும் இருந்த நாகார்ஜுன மலைப்பள்ளத்தாக்கில் வைணவம் நுழைந்தது என்றும் திருமாலின் அம்சமான அஷ்டபுஜ நாராயணன் என்னும் பெயர் அதற்கு முன் கி. பி. 250 -ஆம் ஆண்டளவில் விளங்கிய வைணவ புராண வளர்ச்சியைக் காட்டுகிறது என்றும் கூறுவர். மேலும் இவ்வடிவமே உண்டவல்லியிலுள்ள சிற்பங்களில் எட்டுக்கரங்களை உடைய திருவிக்கிரமனை வடிக்கத்தூண்டியது என்றும் பல்லவர்கள் விஜயபுரி இச்சுவாகர் ஆட்சியைக் கைப்பற்றியபோது அஷ்டபுஜ நாராயணன் வடிவைக் கண்டு அதேபோன்று காஞ்சியிலும் அவனுக்குக் கோவில் கட்டினர் என்றும் அவர் கூறுவர்.[143]

இவ்வாறாக இக்சுவாகர் காலத்தில் வைணவம் வளர்ச்சி இருப்பினும் இவர்கள் சைவர்கள் என்பர். சிலர் யாகங்களும் செய்துள்ளனர். இவர்களின் நண்பர்களான ஆபீரர்கள் வைணவர்களாவர். அதனால், இக்காலத்தில் சைவ வைணவ காழ்ப்புணர்ச்சியில்லை.

### 1.6.4 பல்லவர் காலம்

கி. பி. 3-ஆம் நூற்றாண்டின் இறுதியிலோ 4-ஆம் நூற்றாண்டின் தொடக்கத்திலோ பல்லவர்கள் ஆட்சி வலிமையுற்றதால் இச்சுவாகர்களின் ஆட்சி மறைந்தது. பல்லவர்கள் காஞ்சியைத் தலைநகரமாகக்

கொண்டு தமிழகத்தை ஆண்டதுடன் ஆந்திராவையும் கிருஷ்ணா நதிக்கரை வரை ஆண்டனர்.

பல்லவர் காலத்தில் தமிழ்நாட்டில் பக்தி இயக்கம் தோன்றிச் சைவமும் வைணவமும் சிறப்பாக வளர்ந்தமை முன்னரே விளக்கப்பட்டது. பல்லவர்களுள் சிலர் வைணவர்களாகவும் விளங்கியதைக் காணலாம். அப்பல்லவர்கள் ஆந்திராவிலும் உள்ள வைணவக் கோயில்களுக்கும் கொடைகள் பல வழங்கியுள்ளனர். புத்தவர்மனின் (4ஆம் நூற்றாண்டு) மனைவியான சாருதேவி என்பவர்தாலூரில்(நெல்லூர்மாவட்டம்)உள்ளகூலிமகாதரகன் கோயிலுக்கு நிலத்தை தானமாக வழங்கியுள்ளான். முற்காலப் பல்லவர்களுள் சிலர் குண்டூர், நெல்லூர் பகுதிகளில் ஐந்து ஆறு நூற்றாண்டுகளில் அரசாண்டுள்ளனர். இவர்கள் அனைவரும் பாகவத நெறியினர். இவர்கள் காலத்தில் கூட திருமாலுக்குக் கோயில்கள் பல இருந்தனவாகக் கூறுவர். இளவரசன்விஷ்ணுகோபவர்மன்இரண்டாவது சிம்மவர்மன் (கி.பி.383 பகுதி) காலத்தில் உருவுபள்ளி என்னும் கிராமத்தில் உள்ள 200 நிவந்தங்கள் நிலத்தைக் கந்துகூரில் விஷ்ணுவர்மாவின் சேனைத் தலைவன் எழுப்பிய விஷ்ணுஹார கோவில் தேவ குலத்திற்காக வழங்கினான். இதனால் நான்கு, ஐந்து நூற்றாண்டுகளில் கிருஷ்ணா நதிக்குத் தெற்கே உள்ள கரையோர ஆந்திரத்தில் பாகவதமதம் பரவியிருந்தது என்றும் அரசர்கள்கூட இம்மதத்தை ஏற்றனர் என்றும் கூறுவர். [144]

இன்றைய ஆந்திர நாட்டில் விளங்கும் திருப்பதி-திருமலையைக் குறித்துப் பல்லவர் காலத்தில் தோன்றிய ஆழ்வார்கள் பலவகையில் பாடிப் போற்றியுள்ளனர். அவர்களுள் குலசேகர ஆழ்வார் திருவேங்கடவன்மீது கொண்டிருந்த பக்தி மிகவும் குறிப்பிடத்தக்கதாகும். இரண்டாவது நந்திவர்ம பல்வமல்லன் (கி. பி. 710 - 775) காலத்தவரான திருமங்கையாழ்வார் பல திருப்பதிகளுக்குச் சென்று இறைவனைத் தொழுது பாடியவராவார். இவர் திருப்பதி திருவேங்கடவனைப் பாடியதோடு ஆந்திர நாட்டில் உள்ள அஹோபிலம் (கர்னூல் மாவட்டம்) என்னும் சிங்கவேள் குன்ற நரசிம்மனையும் கண்டு பாடியுள்ளார். அவர் பாடிய ஒன்பது பாசுரங்கள் அவ்விறைவன் சிறப்பையும் அத்தலத்தின் இயற்கைச் சூழலையும் சுட்டுகின்றன.

*" எவ்வும் வெவ்வேல் பொன்பெயரோன் ஏதலன் இன்னுயிரை*
*வவ்வி ஆகம் வள்ளுகிரால் வகிர்ந்தஅம் மானதிடம்*
*கவ்வும் நாயும் கழுகும் உச்சிப்போதொடு கால்சுழன்று*
*தெய்ல மல்லால் செல்லவொண்ணாச் சிங்கவேள் குன்றமே "* 145

*" நல்லை நெஞ்சே! நாம் தொழுதும் நம்முடை நம்பெருமான்*
*அல்லி மாதர் புல்க நின்ற ஆயிரந் தோளன்இடம்*
*நெல்லி மல்கிக் கல்லுடைப்பப் புல்லிலை யார்த்து அதர்வாய்*
*சில்லு சில்லென் றொல்லறாத சிங்கவேள் குன்றமே"* 146

இன்று இத்தலம் கயா, பிரயாசிகை, காசி என்னும் இவற்றைக் காட்டிலும் மேன்மையுடன் திகழ்கிறதென்பர்.

### 1.6.5 அனந்தகோத்திரர் காலம்:

பல்லவர்கள் ஆண்டுகொண்டிருந்தபோது கி. பி. 3-வது நூற்றாண்டில் அவர்களை விரட்டிவிட்டு அனந்தகோத்திரர்கள் என்பவர்கள் குண்டூர் மாவட்டத்தையும் அதைச் சார்ந்த பகுதிகளையும் ஆண்டனர். அவர்களுள் தாமோதரவர்மன் என்ற மன்னன் " சம்யக்சம்புத்த " என்ற பெருமாள் மீது பக்தி கொண்டிருந்தான். [147]

### 1.6.6 சாலங்காயனர் காலம்:

இவர்கள் பெதவேகியைத் (வேங்கிபுரம், மேற்கு கோதாவரி மாவட்டம்) தலைநகராகக் கொண்டு கி. பி. நான்காம் நூற்றாண்டில் ஆண்டவர்கள். இவர்கள் சைவத்தையும் வைணவத்தையும் சமமாகப் போற்றினர். இவர்களுள் பரமபாகவதனான இரண்டாவது நந்திவர்மன் என்பவன் விஷ்ணுகிரகசாமிக்கு நிலத்தைத் தானமாக வழங்கியுள்ளான். [148] எனவே சாலங்காயனர் மரபினரும் வைணவத்திற்கு அரசாதரவு தந்தனர்.

### 1.6.7 விஷ்ணுகுண்டிகர் காலம்:

சாலங்காயனர்களுக்குப் பிறகு இவர்கள் கி. பி. 450 முதல் 650 வரை வேங்கி நாட்டை ஆண்டனர். இவர்கள் ஆட்சி இன்றைய விசாகப்பட்டினம், கோதாவரி, கிருஷ்ணா, குண்டூர், நல்லகொண்டா, ஐத்திராபாத்து, ரங்காரெட்டி மாவட்டம் ஆகிய பகுதிகள் வரை பரவியது.

விஷ்ணுகுண்டிகர்கள் வைணவர்கள் என்பதை அவர்கள் பெயர்களும் (மாதவர்மன், கோவிந்தவர்மன், விக்கிரமேந்திரவர்மன்) மரபும் சுட்டுகின்றன. ஆனால் இவர்களுள் சிலர் சைவர்கள் ஆவர். பௌத்த மதத்தையும் சிலர் போற்றிப் பௌத்த விகாரங்களை அமைத்துள்ளனர். தங்களை இவர்கள் "விஷ்ணுவிக்கிரம நயசம்பந்தம்" என்று அழைத்துக் கொண்டனர். இவர்கள் நாணயங்கள், முத்திரைகள், செப்புப் பட்டயங்கள் ஆகியவற்றில் திருமாலுடன் தொடர்புடைய சிம்மம் அரசுச் சின்னமாகக் காணப்படுகிறது. மேலும் விஷ்ணுகுண்டிகர் காலத்தைச் சார்ந்த நரசிம்ம சிற்பம் பெதமுடியத்தில் (கடப்பா மாவட்டம்)கிடைத்துள்ளது. அங்குள்ள தூண்களில் கண்ணன் கோவர்த்தனமலையை எடுத்தல், அனுமன் அசோகவனத்தில் சீதையை காணுதல், நரசிம்ம வடிவம் ஆகியன காணப்படுகின்றன.[149]

விஷ்ணுகுண்டிகர் காலத்தில் புத்தர் திருமாலின் அவதாரங்களில் ஒருவராகக் கருதப்பட்டார். அதனால் ஸ்ரீ பர்வதத்தில் இருக்கும் ஸ்ரீ பர்வதசாமியைப் " புத்த நாராயணன்" என்ற பெயரில் மக்கள் வணங்கினர் என்று பி. எஸ். எல். அனுமந்தராவு அவர்கள் கூறுவர்.[150]

### 1.6.8 பூர்வாங்கர்கள் காலம்:

இவர்கள் கலிங்கத்திலிருந்து ஆந்திராவின் கடற்கரைப் பகுதிகள் சிலவற்றை ஆண்டனர். கி. பி.

5-ஆம் நூற்றாண்டின் இறுதியிலிருந்து கி. பி. 1038 வரை கலிங்கத்தை ஆண்டனர்.

இவர்களுள் பலர் தங்களைச் சைவர்கள் என அழைத்துக் கொண்டாலும் திருமாலிடத்தும் சிலர் அன்பு கொண்டிருந்தனர். இரு மதங்களையும் சமமாகக் கருதினர். இவர்களுள் மூன்றாவது அரசனான அஸ்திவர்மன் கி. பி. 577-இல் திருமாலுக்குக் கலிங்கத்தில் உள்ள ரோணங்கி கிராமத்தில் ஆறு ஹலங்கள்[151] நிலத்தை இறையிலியாக வழங்கினான். கலிங்கத்தில் திருமாலுக்குக் கோயில் இருந்ததாகத் தெரிவிக்கும் முதல் சாசனம் இதுவாகும். இத்தகைய தானங்கள் மேலும் சில உள்ளனவாகக் கூறுவர். பூர்வகாங்கர்களின் கோவில் அமைப்பிலும் கலிங்கமுறை என்னும் ஒரு முறையும் இருப்பதாகஆய்வாளர்கள்கூறுவர்.[152]

### 1.6.9 கீழைச் சாளுக்கியர்கள் காலம் (கி. பி. 624 - 1076):

பாதாமி சாளுக்கியர் மரபிலிருந்து பிரிந்த மரபினர் இவர்கள். இவர்களை முற்காலச் சாளுக்கியர் என்றும் வேங்கி சாளுக்கியர் என்றும் அழைப்பர். இவர்கள் ஏறக்குறைய 500 ஆண்டுகள் வேங்கியை (கடற்கரை ஆந்திரம்) ஆண்டு பிறகு 200 ஆண்டுகள் சாளுக்கிய சோழர்களாகச் சோழர் பகுதியுடன் வேங்கியையும் ஆண்டனர். இவர்கள் ஆட்சி வல்லரசு பெற்றிருந்த காலத்தில் தெற்கில் உள்ள திருக்காளத்தி

வரை பரந்திருந்தது.

கீழைச்சாளுக்கிய மரபைத் தோற்றுவித்தவனான குப்ஜவிஷ்ணுவர்த்தனன் (கி. பி. 624 - 641) வைணவத்தைச் சார்ந்தவன். அவன் தன் கல்வெட்டுகளில் தன்னைப் பரமபாகவதன் என்று அழைத்துக் கொண்டான். அவன் மரபினர் அவனைக் ' காரணவிஷ்ணு ' என்றும் ' இதம்யுகேனவிஷ்ணு ' (இந்த யுகத்திற்கு விஷ்ணு போன்றவன்) என்றும்அழைத்தனர்.[153] அவன்தன் மகனுக்கு ' ஜெயசிம்மா ' என்றும் பெயரிட்டுள்ளான். புனிதமான ஆண் பன்றி அவர்களின் தலையணிச் சின்னமாகவும் விளங்கியது. பின்னர் வந்தவர்கள் பலர் சைவர்களாக விளங்கினர். அதனால் இவர்கள் காலத்தில் சிறப்பாக வைணவக் கோயில்கள் தோன்றியமை தெரியவில்லை.

### 1.6.9.1 மகாபாரதம்

தெலுங்கு இலக்கியத்தில் ஆதிகவியாகவும் பாரதத்தைப் பாடிய முதல் புலவராகவும் விளங்கும் நன்னயா இக்காலத்தில் தோன்றியவராவர். இவர் சாளுக்கிய மன்னன் இராஜராஜநரேந்திரனின் (கி. பி. 1019 - 1061) அவைப்புலவராவார். மன்னனின் வேண்டுகோள்படி வியாசபாரதத்தின் ஆதி, சபா பருவங்களையும் ஆரண்ய பருவத்தில் பாதியையும் தெலுங்கில் வழங்கினார். பிற பருவங்களை இயற்றுவதற்குள் இவர் மறைந்துவிட்டதாகக் கூறுவர். மற்ற பகுதிகளைத் திக்கன, எர்ரன ஆகியோர் எழுதி

பாரதத்தை முடித்தனர். இந்நூலில் திருமாலின் சிறப்பு இரண்டு மூன்று இடங்களில் மிகவும் சிறப்பாகக் கூறப்பட்டுள்ளதாக வேடூரி ஆனந்தமூர்த்தி குறிப்பிடுவர்.[154]

## 1.6.10 சோழர் காலம்:

பிற்காலச் சோழர்கள் வல்லமை பெற்று வாழ்ந்த காலத்தில் ஆந்திராவிலும் அவர்கள் ஆட்சி பரந்திருந்தது. பல்லவர் காலத்தில் மட்டுமின்றிச் சோழர் காலத்திலும் திருப்பதி சிறந்த வைணவத் தலமாக விளங்கியதால் சோழர் காலத்தில் நன்கொடைகள் பல தரப்பட்டன.[155] திருப்பதிக்கு அருகில் உள்ள திருச்சானூரும் இக்காலத்தில் சிறப்புற்று விளங்கியது.

சோழர் ஆட்சியில் இராமாநுசர் (கி. பி. 11 - 12 நூற்றாண்டு) தோன்றி விசிட்டாத்வைத நெறியைப் பரப்பியதால் வைணவம் மேலும் சிறந்து வளரத் தொடங்கியது. அதன் விளைவாக ஆந்திரத்திலும் ஸ்ரீவைஷ்ணவம் பல இடங்களில் பரவியது. இராமாநுசருக்கு முன்பே நாதமுனிகளால் தோற்றுவிக்கப்பட்ட ஸ்ரீவைணவம் ஆந்திரத்தில் பரந்திருந்ததாக பி.எஸ்.எல்.அனுமந்தராவு அவர்கள் கூறுவர்.[156] பாபட்லாவில் (குண்டூர் மாவட்டம்) இருந்த பாவநாராயண கோயில், கி. பி. 1023 -வது ஆண்டைச் சார்ந்த சாசனத்தின்படி ஸ்ரீ வைஷ்ணவர்களின் ஆதிக்கத்தில் இருந்ததாக அவர் கூறுவர். எனவே ஏறக்குறைய பத்தாம் நூற்றாண்டளவில் தமிழரின் வைணவமான ஸ்ரீ வைஷ்ணவம் ஆந்திர நாட்டில் பரந்திருந்ததைத் தக்க சான்றுடன் அறியலாம்.

இராமாநுசர் திருப்பதிக்கு மூன்று முறை வந்துள்ளார். திருமலையில் உள்ள கோயில் திருமால் கோயிலா? சிவன் கோயிலா? என்ற வாதம் ஏற்பட்டபோது அது திருமால் கோவிலே என்று நிருவிய பெருமை இவரையே சாரும். மேலும் தில்லையில் சோழனால் அகற்றப்பட்ட கோவிந்தராஜன் திருமேனியைக் கீழ்த்திருப்பதியில் (12 நூற்றாண்டு) யாதவராயன் என்ற சிற்றரசன் உதவியுடன் ஒரு கோயிலைக்கட்டி அதில் எழுப்பினார். கோவில் வழிபாட்டையும் நிர்வாகத்தையும் சீர்படுத்தியதோடு பல வழிபாடுகளுக்கு ஏற்பாடுகளையும் செய்துள்ளார்.[157]

இவற்றை நோக்கும்போது திருப்பதியை வைணவத்தின் மையமாக அவர் உருவாக்கினார் எனலாம். இங்கிருந்தே இராமாநுசரின் வைணவ தத்துவமான விசிட்டாத்வைதமும் ஆந்திராவில் பரவியது'ஸ்ரீ கூர்மத்தில் (ஸ்ரீகாகுளம் மாவட்டம்) கிடைத்த ஒரு சாசனம் "திருப்பதி ஸ்ரீவைஷ்ணவரக்ஷ" (திருப்பதி ஸ்ரீ வைஷ்ணவத்தின் காப்பகம்) என்று குறிப்பிடுவதிலிருந்து இதை அறியலாம். மேலும் ஸ்ரீகூர்மத்திற்கு முனிபண்டித ஜனார்த்தனதாசர் என்பவர் இராமாநுசரின் சேவகராக இருந்து வந்துள்ளார்'.[158]

தமிழ்நாட்டில் எழுந்த வைணவச் செல்வாக்கால் ஸ்ரீகாகுளம், ஸ்ரீகூர்மம், சிம்மாசலம்,

சர்பவரம், பாபட்லா முதலான திருமால் கோயில்களில் 11-வது நூற்றாண்டிலிருந்து திருவாய்மொழி பாராயணம் செய்யப்பட்டதோடு அதற்கு ஏற்பாடுகளும் செய்யப்பட்டன. விஷ்ணு கோயில்களில் திருச்சுற்றுத் தெய்வங்களை அமைத்ததோடு பன்னிரு ஆழ்வார்கள் திருவடிவங்களும் அமைக்கப்பட்டன.[159]

இராமநுசருக்குப் பிறகு பட்டர், கந்தாடையர், திருமலையர் என்னும் வைணவக் குடும்பத்தினர் கடற்கரை ஆந்திரத்தின்பலஇடங்களில்வாழ்ந்து ஸ்ரீவைஷ்ணவத்தைப் பரப்பினர். நெல்லூரை ஆண்டு கொண்டிருந்த தெலுங்குச் சோழர்கள் வைணவத்தை ஆதரித்தனர். மார்க்கம் பஹிண்டி முக்கல வீரத்திருப்பேங்கள குமாரர் என்ற ஆச்சாரியர் தெலுங்குப் பல்லவர் தெலுங்குச் சோழர்களுடைய ஆதரவைப் பெற்றிருந்தார். தெலுங்குச் சோழர் காலத்தில் வைணவ மையமாக நெல்லூர் விளங்கியது. மங்களகிரி, மாசெர்லா, ஸ்ரீகாகுளம், சிம்மாசலம், ஸ்ரீகூர்மம், கோபிலம் ஆகியன குறிப்பிடத்தக்க வைணவ மையங்களாக விளங்கின. இவை பிற்காலச் சாளுக்கிய சோழ மரபினர் அவர்தம் கீழ் இருந்தோர் ஆதரவைப் பெற்றிருந்தன. இராமாநுசர் கூடம் மங்களகிரியில் இருந்தது. இவ்வாறே தெலுங்கானா பகுதியிலும் உள்ள லிங்ககிரி, மக்தலம் முதலான பகுதிகளில் வைணவம் பரவியிருந்தது. ஆனால் திருப்பதி அல்லது ஸ்ரீகூர்மம் என்னும் பகுதிகளில் இருந்தன போன்ற பெரிய வைணவ

மையங்கள் தெலுங்கானா பகுதிகளில் இருந்தனவாகத் தெரியவில்லை. எனவே, இராமாநுசருக்கு பிறகும் ஆந்திராவின் பல இடங்களில் ஸ்ரீவைஷ்ணவம் பரவத் தொடங்கியது.

### 1.6.10.1 துவைதம் - நரஹரிதீர்த்தர்:

கருநாடகத்தில் (உடுப்பி - கல்யாணபுரம்) கி. பி. 1199 - இல் மத்வாச்சாரியர் (1199 - 1277) தோன்றி வைணவத்தில் துவைத தத்துவத்தைத் தோற்றுவித்து அதைத் தென்னாட்டிலும் வடநாட்டிலும் பரப்பினார். துவைதம் இராமாநுசரின் விசிட்டத்வைதத்திலிருந்து வேறுபட்டது; சங்கரரின் அத்வைதத்திற்கு மாறுபட்டது. இறைவன் குணங்கள் நிறைந்தவன்; பிரம்மம் சூட்சம் சித்அசித் விசிஸ்டமாய் உலகத்தின் தோற்றமாய் அமைந்தது: உலகம் இறைவனின் ஒரு பகுதி என்பது இராமாநுசர் கொள்கை. பிரம்மம் தனித்து நிற்பது; உலகம் தனித்து இருக்கும் ஒரு பொருள், இறைவனின் வேறானது; உயிர்கள் முக்தியடைய அவனைச் சார்ந்து நிற்கின்றன; நாராயணனே பரம்பொருள் என்பது மத்துவாச்சாரியரின் கொள்கை.

மத்வாச்சாரியர் தம் கொள்கையைப் பரப்ப கலிங்கத்திற்கும் ஆந்திரத்திற்கும் வந்தபோது கலிங்கத்தின் சியாம சாஸ்திரியையும் ஆந்திரத்தின் சோபனபட்டரையும் வென்று சீடராக்கிக் கொண்டார். அவர்கள் முறையே நரஹரி தீர்த்தராகவும்,

பத்மநாபதீர்த்தராகவும்மாறி மாத்வாச்சாரியருக்குப் பிறகு வந்த முதல் ஆச்சாரியர்களாக விளங்கினர். தம் கொள்கையைப் பரப்ப மாத்வாச்சாரியர் புகழ்பெற்ற உத்தராதி மடத்தைத் தோற்றுவித்தார். அவர் பின் வந்தோரும் தனி மடங்கள் பலவற்றை ஏற்படுத்தி துவைதக் கொள்கையைப் பரப்பினர். சிம்மாசலம், ஸ்ரீகூர்மம் ஆகிய இடங்களில் கிடைத்த கல்வெட்டுக்கள் நரஹரிதீர்த்தருக்கு ஆந்திரத்துடன் இருந்த தொடர்பைக் காட்டுகின்றன. அவர் ஸ்ரீ கூர்மத்தில் யோகநாத நரசிம்மன் திருமேனியையும் இராமன் சீதை இலக்குவன் திருமேனிகளையும் எழுப்பினார்.[160] இவ்வாறாக நரஹரிதீர்த்தர் ஆந்திரத்தில் துவைத நெறியைப் பரப்பினாலும் அது மக்களிடத்தில் எந்த அளவிற்குச் செல்வாக்கு பெற்றிருந்தது என அறிய போதிய சான்றுகள் இல்லை.

### 1.6.10.2 பிரம்ம நாயுடு - வீரவைஷ்ணவம்:

வீரசைவம் போன்று வீரவைஷ்ணவமும் ஆந்திரத்தில் பரவியது. இதைத் தலைமையேற்று இயக்கமாகச் செயல்படுத்தியவர் பல்நாட்டைச் (குண்டூர் மாவட்டம்) சேர்ந்த பிரம்ம நாயுடு (கி. பி. 1100 - 1175) என்பவராவார். இவர் வெலநாடு சோழர்களின் பாளயக்காரர்களான மாசெர்ல ஹைஹயர்களின் (Haihayas) மந்திரியாக இருந்தவர். இவர் தம் ஆட்சியில் புரட்சிகரமான சமூக சமய மாற்றங்களைக் கொண்டு வந்தார். வீரவைணவத்தை மேற்கொள்ளும் யாவரும் ஒரே

குலம் என்றார். மாசெர்லாவில் உள்ள சென்னகேசவ கோயிலைத் தம் செயல்களுக்கு மையமாகக் கொண்டார்; பஞ்சமர் என்னும் தாழ்ந்த குலத்தவர்களை வைணவர்களாக ஆக்கி அவர்கள் சென்னகேசவ கோயிலுக்குள் செல்ல அனுமதித்தார். இராமானுசர் போன்றே அவர்கள் பெயர்களை மாற்றித் தாசர் என்று வைத்துக்கொள்ளும்படி செய்தார். மேலும் சமபந்தியையும், கலப்புத் திருமணத்தையும் வலியுறுத்தினார். நான்கு வகுப்பிலிருந்து பெண்களைத் திருமணம் செய்து கொண்டதுடன் பஞ்சம வகுப்பிலிருந்து கன்னமதாசர் என்பவரைத் தம் ஏற்பு மகனாக ஏற்று வளர்த்தார்.

சிலகூரிவீரபத்திர ராவு என்பவர் பிரம்ம நாயுடு, இராமானுசரின் வைணவத்தையே ஏற்று அதை வீரவைஷ்ணவமாகப் பல்நாட்டில் பரப்பிப் புகழ் பெற்றார் என்பர்.[161] இத்தகைய புரட்சிகரமான மாற்றங்களைச் செய்தமையால் பி. எஸ். எல். அனுமந்தராவு அவர்கள் " ஆந்திராவின் இடைக்கால வைணவம் பிரம்மநாயுடுவின் வீரவைணவத்தைச் சுட்டாமல் நிறைவடையாது" என்று கூறுவர்.[162] இத்தகு சிறப்பிற்கு உரிய வீரவைஷ்ணவத்திற்கு அன்றே தீவிர எதிர்ப்பும் இருந்தது. பிரம்மநாயுடுவின் குடும்பத்தினரும் அதை எதிர்த்தனர். இவ்வெதிர்ப்பு புகழ்பெற்ற பல்நாட்போருக்கு (கி. பி. 1176 - 1182) உந்துதலாக இருந்தது. காரெம்பூடி போரில் பிரம்ம

நாயுடுவும் அவர்தம் கட்சியினரும் தோற்றனர். அதன் விளைவாக அவர்தம் நெறியும் தோல்வியுற்றது. வீரவைஷ்ணவம் தோல்வி கண்டாலும் தாழ்ந்த குலத்தவரிடையே அதன் செல்வாக்கு பரவத் தொடங்கியது.

### 1.6.11.0 காகதீயர் காலம்:

சாதவாகனர்களுக்குப் பிறகு ஆந்திராவின் பல பகுதிகளைச் சிறப்பாக ஆண்டவர்கள் காகதீயர்கள். சாளுக்கியர்களுக்குப் பிறகு அனுமகொண்டாவைத் தலைநகராகக் கொண்டு கி. பி. 1150 முதல் 1323 வரை ஆண்டனர்.

காகதீயர்களுள் முதலில் வந்தவர்கள் சமணத்தைப் போற்றினர். பின்னர் வந்தவர்கள் சைவத்தை மேற்கொண்டனர். ஆனால் இவர்கள் கீழ் ஆட்சி செய்தவர்கள் பலர் வைணவர்களாக விளங்கினர்; வைணவமும் வளர்ந்தது. ருத்திரதேவனின் (கி. பி. 1158 - 1195) மந்திரியான கங்காதரர் அனுமகொண்டாவில் பிரசன்ன கேசவ ஆலயத்தைச் சிறப்பாகக் கட்டினார். சிலுகூரு, மக்தல, மன்னாரு, அண்ணாரெட்டிகூடம், பூருகா, கட்டா, கலவகெலனு, வெல்லடூரு முதலிய பல இடங்களில் பெருமாள் கோயில்கள் எழுந்தன.[163]

காகதீயர்கள் சைவர்களாக இருந்தாலும் வைணவத்தை வெறுக்கவில்லை. கோவில் வழிபாட்டிற்கு நன்கொடைகள் தந்தனர்; சிவன், திருமால் திருமேனிகளைக்

கோவில்களில் எழுப்பினர். இராமநாதன் கோவிலுக்குப் பிரதாபருத்திரனின் (1289 - 1323) மனைவி லஷ்மிதேவியம்மா என்பவள் நன்கொடை வழங்கினாள். ருத்ரமா (கி. பி. 1262 - 1289), பிரதாப ருத்திரன் காலங்களில் இவர்தம் கீழ் இருந்தோர் பலர் திருமால் கோயில்களுக்கு நன்கொடைகள் வழங்கியுள்ளனர். அரசர்களைச்சார்ந்தவர்களேயல்லாமல் நாகூலபாடு, காத்தம்கூரு, கொப்பரம் முதலான இனத்தவர்களும் நன்கொடைகள் திருமாலுக்கு வழங்கியுள்ளனர். மக்கள் தங்கள் பெயர்களின் இறுதியில் தாசர் என்று வைத்துக் கொண்டனர். வைணவ விழாக்களும் உற்சவங்களும் விரதங்களும் இக்காலத்தில் நடைமுறையில் இருந்தன.[164]

### 1.6.11.1 வைணவ நூல்கள்:

காகதீயர் காலத்தில் வைணவம் செல்வாக்கு பெற்றிருந்ததால் அதன் பிரபத்திநெறி மக்களிடையே பரவியிருந்தது. அதை வலியுறுத்தும் பாஸ்கர ராமாயணம், ரங்கநாத ராமாயணம் ஆகியன இக்கால அளவில் தோன்றின. வீரசைவத்தின் செல்வாக்கு மிகவும் சிறந்தோங்கி ஆந்திரத்தில் பரந்திருந்ததால் மக்களிடையே மத வேறுபாடு இருந்ததை காண முடிகிறது. ஆனால் புலவர்கள் சிலர் இரண்டையும் (சைவம், வைணவம்) ஒன்றாகவே மதித்தனர். பாரதத்தை இயற்றிய திக்கன (1210 - 1290) அதை அரிஹரநாதனுக்குப் படைத்திருப்பதிலிருந்து இதை உணரலாம். இவர் நிர்வசனோத்தர ராமாயணத்தையும் இயற்றியுள்ளார். இது உத்தர ராமாயணக் கதையைக் கூறுகிறது. இரண்டாவது

பிரதாபருத்திரன் காலத்தில் (கி. பி. 1289 - 1323) இருந்த கிருஷ்ணமாச்சாரியர் என்பவர் சிம்மகிரி நரசிம்மன் மீது " சிம்மகிரி வாசனமுலு " என்னும் நூலை இயற்றினார். தெலுங்கில் தோன்றிய முதல் விசிட்டாத்வைத நூல் இதுவேயாகும்.

### 1.6.12 ரெட்டி அரசர்

காகதீயருக்குப் பிறகு ஆந்திரம் கி. பி. 1323-இல் இருந்து முகமதியர் ஆட்சிக்கு உட்பட்டுக் கலவரப்பட்டது. அவர்களால் இந்து மதத்தின் வளர்ச்சி குன்றியது. கோயில்களை அழித்து அவ்விடங்களில் தம் மசூதிகளைக் கட்டினர்; ராஜமகேந்திரவரத்தில் இருந்த வேணுகோபாலன் கோயிலை அழித்து அங்கு ஒரு மசூதியைக் கட்டினர். அவ்வாறே ஏலூரு, கொண்டபள்ளி முதலிய இடங்களிலிருந்த கோயில்களை அழித்து அவ்விடங்களில் மசூதிகளைக் கட்டினர். அவர்கள் கோயில்கள் பல கொள்ளையிடப்பட்டன. இந்நிலையே தமிழ்நாட்டிலும் நிலவியதை முன்னர் கூறப்பட்டது.

முகமதியர்களின் பிடியிலிருந்து ஆந்திரத்தைக் காக்க ரெட்டி அரசர்களும் தெலுங்கு நாயக்கர்களும் ஒன்றுபட்டு நின்றனர். இவர்கள் காகதீயர் ஆட்சியில் சிற்றரசர்களாகவும் அதிகாரிகளாகவும் இருந்தவர்களாவர்.

ரெட்டி அரசர்கள் முதலில் அத்தங்கியையும் பிறகு கொண்டவீட்டையும் தலைநகராகக் கொண்டு

கி. பி. 1324 முதல் 1424 வரை ஆண்டனர். கோருகொண்டா, ராஜமகேந்திரவரம், கந்துகூரு ஆகிய பகுதிகளும் இவர்கள் ஆட்சியில் இருந்தன. தெலுங்கு நாயக்க அரசர்கள் ராசகொண்டா, தேவரகொண்டா என்னும் பட்டினங்களைத் தலைநகராகக் கொண்டு கி. பி. 1330 - 1430 வரை ஆந்திராவின் கடற்கரைப் பகுதிகளை ஆண்டனர்.

இவ்விரு மரபினரும் பழைய இந்துமதப் பண்பாட்டைக் காத்தவர்கள். தென்னாட்டில் இந்து மதத்தின் சிறப்பு அழியாமல் அன்று நிலைத்து இருந்ததற்குக் காரணமானவர்கள் இவர்கள் என்று சிலர் கூறுவர்.[165]

ரெட்டி அரசர்கள் சைவத்தினர் மக்களும் சைவத்தைக் கடைபிடித்தனர். ரெட்டி அரசர்கள் வைதிக தர்மத்தின்மீது அதிக பற்று கொண்டவர்கள். அதனால் சைவர்கள் யோகமார்க்கத்தையும் தந்திரமுறையையும் சிறப்பாகக் கடைபிடித்தனர். அம்முறையில் விளக்கும் நூல்களும் பல எழுந்தன. சைவத்துடன் வைணவத்திற்குகூட ரெட்டி அரசர்களின் ஆதரவு கிடைத்தது. இக்கால அளவிலேயே தமிழ்நாட்டில் வேதாந்த தேசிகர் முதலானவர்கள் தோன்றி வைணவத்தை வைதிக முறையில் கொண்டு வந்தனர். வைணவம் வடகலை தென்கலை எனப் பிரிந்து பரவத் தொடங்கியது.

ஸ்ரீரங்கம் பட்டர் மரபில் வந்த பராசரபட்டர்

என்பவர் ரெட்டி அரசர்கள் காலத்தில் ஆந்திராவிற்குச் சென்று வைணவத்தைப் பரப்பினார். அரசர்களும் அவர் போதனைகளை ஏற்று மாணவர்களாயினர். கோருகொண்டா (கோதாவரி மாவட்டம்) பகுதியை ஆண்டுகொண்டிருந்த மும்முடிநாயக்கன் (1353-1388) வைணவத்தை ஏற்றதோடு பட்டருக்குக் கொத்தலபர்ரு என்ற ஊரையும் நன்கொடையாகத் தந்தான். அவரும் இறுதிவரை இருந்து அங்கு வைணவத் தொண்டாற்றினார்.[166] இப்பராசரபட்டர் வழியில் வந்த ஐந்தாவது பராசரபட்டர் என்று என். ஜெகதீசன் அவர்கள் கருதுவர்.[167] இவர் நினைவாக லஷ்மி நரசிம்மன் கோயிலும் கட்டப்பட்டது.

தமிழ்நாட்டிலிருந்து கந்தாடை மரபைச் சேர்ந்தவர்களும் ஆந்திரத்தில் வைணவத்தைப் பரப்ப முயற்சி மேற்கொண்டனர். மேல் வகுப்பினருக்கு அவர்கள் அவ்வப்போது சமய வழிகாட்டிகளாகவும் விளங்கினர். பராசரபட்டரின் மறைவிற்குப்பிறகு கந்தாடை மரபினர் மும்மடி நாயக்கனின் குருவாக விளங்கினர். திருமலை மரபினரும் ஆந்திரத்தில் வைணவத் தொண்டாற்றினர். அவர்களுள் முதலாமவர் திருமலை நல்லான் சக்ரவர்த்தியாவார். அவரும் மற்ற புலவர்களும் ஆந்திரம் முழுவதும் பயணம் மேற்கொண்டு வைணவக் கோட்பாடுகளை எடுத்துரைத்தனர். அவ்வப்போது அரசவைப் புலவர்களுடன் வாதப்போரிட்டு வைணவத்தின்

சிறப்பை நிலைநாட்டினர். வேதாந்த தேசிகர் மட்டுமல்லர் அவர்தம் திருமகனாரான வரதாச்சாரியரும் (நாயனாச்சாரியர்) ராசகொண்டாவை ஆண்டுகொண்டிருந்த சைவனான இரண்டாம் சிங்கமபூபாலனின் (கி. பி. 1384 - 1399) அவைக்குச் சென்று சைவவாதிகளுடன் வாதிட்டு வைணவத்தை நிலை நாட்டினார்; சிங்கமனையும் வைணவத்தை ஏற்கச் செய்தார்.

அவனுக்குப் பிறகு பத்ம நாயக்க அரசர்கள் வைணவ பக்தர்களாயினர். இப்புதிய மாற்றம் கொண்டவீடு ரெட்டியார் ஆட்சியிலும் பரவியது. அங்கு குமரகிரி (1386-1402), கோமடிவேமாரெட்டி (1402-1420) ஆகியோர் வைணவத்தை ஏற்றனர்.[168] மேற்கூறியவற்றிலிருந்து ஆந்திரத்தில் இராமாநுசருக்குப்பிறகு பிரிந்த வடகலை தென்கலை வைணவங்கள் ஆச்சாரியர்கள்வழி மிகவும் சிறந்த அளவில் பரவினஎனக்கருதலாம்.

### 1.6.12.1 வைணவ நூல்கள்:

இக்காலத்தில் மக்களிடையே வைணவத்தின் வளர்ச்சியால் பாரதமும் இராமாயணமும் நல்ல வரவேற்பைப் பெற்றன. அதன் விளைவாகச் சைவர்களான சிலரும் பாரதம் இராமாயணம் முதலிய வைணவ நூல்களைத் தெலுங்கில் இயற்றினர். எர்ரனா (கி. பி. 1280 - 1364) சைவரானாலும் வைணவத்தின்மீதும் பற்றுகொண்டனர். நன்னயா விட்டுச் சென்ற ஆரணிய பருவத்தின் மறு பகுதியை நிறைவு செய்து

மகாபாரதத்தை முழுமையாக்கினார். அரிவம்சம், நரசிம்மபுராணம் என்னும் நூல்களையும் இயற்றினார். இராமாயணமும் இவர் எழுதியதாகக் கூறுவர். ஆனால் அது இன்று கிடைக்கவில்லை. அரிஹரநாதன் பக்தரான நாசனசோமநாதர் (கி. பி. 1300 -1380) உத்தர அரிவம்சத்தை இயற்றினார். வைணவரான போத்தனா ( கி. பி. 1420 - 1480) தெலுங்கில் மகாபாகவதத்தைத் தந்தவர். இந்நூலைத் தெலுங்கர் மிகவும் போற்றுவர். இதில் விசிட்டாத்வைத கருத்துகளும் உள்ளன என்று வேடூரி ஆனந்தமூர்த்தி அவர்கள் கூறுவர்.[169] நாராயண சதகத்தையும் இயற்றியுள்ளார் இவர். மடிக்கி சிங்கானா (1420) என்பவர் இராமாயணப் பாகவத கதைகளைக் கூறும் பத்மபுராணத்தையும்வாஸிஸ்டி இராமாயணத்தையும் இயற்றினார். கி. பி. 1380-வது ஆண்டில் பசுபதி நாகநாதன் என்பவர் விஷ்ணு புராணத்தை இயற்றினார். ஆனால் இந்நூல் கிடைக்கவில்லை.

### 1.6.13.0 விஜயநகர ஆட்சிக் காலம்:

தென்னாட்டில் ஏற்பட்ட ஆட்சிகளுள் விஜயநகர ஆட்சி மிகவும் சிறப்பானது. இதைப் பற்றிய செய்திகள் முன்னரே கூறப்பட்டன. இவ்வாட்சியின் விளைவால் ஆந்திரத்தில் ஏற்பட்ட வைணவத்தின் வளர்ச்சி மட்டும் இங்குக் கூறத் தக்கது.

கி. பி. 1336-இல் ஆந்திராவில் தோன்றிய இவ்வாட்சி 1652-இல் பீஜபூர், கோல்கொண்டா

சுல்தான்களின் படையெடுப்பால் வீழ்ச்சியடைந்தது.

சங்கமமரபினருக்குப்பிறகு விஜயநகரத்தை ஆண்ட சாளுவ, துளுவ, ஆரவீடு மரபினர் வைணவர்களானாலும் சைவத்தையும் போற்றியவர்கள். சாளுவ நரசிங்கராயன் பரம வைணவன். திருவேங்கடவனிடத்தில் மிகுந்த பக்தி கொண்டவன். சாளுவ மரபினர் காலத்திலிருந்து திருப்பதி வைணவத்திற்குச்சிறந்தமையமாகவிளங்கியது. இக்காலத்தில் திருமலை - திருப்பதி பெருமாள் கோவில்களில் ஏற்பட்ட வழிபாடுகள் உற்சவங்கள் பல . அவற்றுக்கு மன்னர்களும் அவர் தம் அதிகாரிகளும், நிலக்கிழார்களும் அளித்த நன்கொடைகள் பல. கோயில் மண்டபங்களும் பல இக்காலத்தில் கட்டப்பட்டன. பிற இடங்களில் உள்ள திருமால் கோயில்களுக்கும் நன்கொடைகள் அளிக்கப்பட்டு வழிபாடுகள்செய்யப்பட்டன. மேலும் இக்காலத்தில்தான் திருமால் கோயில்களில் நடக்கும் பூசைகள் விழாக்கள் முதலியன வைணவ ஆச்சாரியர்களின் ஆணைப்படி வைகானச நெறியில் இருக்குமாறு ஏற்பாடு செய்யப்பட்டன.

கிருஷ்ணதேவராயர் திருவேங்கடவனிடத்தில் மிகுந்த பக்தி கொண்டவர். தம் ஆட்சியில் திருப்பதிக்கு ஏழு முறை வந்து திருவேங்கடவனை வணங்கி நன்கொடைகள் பலவற்றைத் தந்துள்ளார். இன்றும் திருமலை கோயிலில் கிருஷ்ணதேவராயர் தம் இருமனைவியருடன் ( திருமலம்பா, சின்னம்பா ) இருக்கும் தாமிர வடிவம் உள்ளது.

விஜயநகர மன்னர்கள் தம் ஆட்சியில் ஆந்திரத்தில் உள்ள திருப்பதி, திருக்காளத்தி, நாகலாபுரம், தாடிபத்திரி, மங்களகிரி, அகோபிலம், புஷ்பகிரி முதலிய சைவ வைணவத் திருப்பதிகளில் உள்ள கோயில்களில் பிரகாரங்களை அமைத்தனர். அவை ராயர் கோபுரங்கள் என்று அழைக்கப்பெறுகின்றன.

ஸ்ரீவைஷ்ணவ ஆச்சாரியர்கள் பலர் விஜயநகர மன்னர்களால் நன்கு கௌரவிக்கப்பட்டனர். சிலர் அவர்களின் குருவாகவும் விளங்கினர். உத்தமநம்பி குடும்பத்தைச் சேர்ந்த 79-வதாக வந்த கிருஷ்ணராயா (கி.பி. 1371 அளவில்) விஜயநகருக்குச் சென்று முதல் புக்கராயரிடமும் (கி.பி. 1355- 1377) இரண்டாவது அரிஹரராயரிமும் (கி.பி. 1377- 1404) திருவரங்கக் கோயிலுக்காக அதிக அளவில் நன்கொடைகளைப் பெற்றார். பஞ்சமத பஞ்ஜனம் தாதாச்சாரியர் என்பவர் முதல் வெங்கடராயருக்கும் குருவாக இருந்தனர்.[170]

விஜயநகர ஆட்சியில் ஸ்ரீவைஷ்ணவ ஆச்சாரியர்களேயல்லாமல் மத்வாச்சாரியருக்குப் பின் வந்த துவைத ஆச்சாரியர்களும் சிறந்து விளங்கியுள்ளனர். ஸ்ரீபாதராய மடத்தின் தலைவரான ஸ்ரீபாதராயர் சாளுவ நரசிம்மரால் கௌரவிக்கப்பட்டார். கிருஷ்ணதேவராயர் காலத்தில் வியாசராயர் என்ற மத்வ சமயத்தலைவர் பெரும் சிறப்புற்று விளங்கினார்.

வல்லபாச்சாரியரால் (1478-1531) தோற்றுவிக்கப்பட்ட

வல்லப இயக்கமும் விஜயநகரப் பேரரசில் ஓங்கி வளர்ந்தது. விஷ்ணுவே முழுமுதற்கடவுளென்றும் அவன் அவதாரமான கிருஷ்ணனை இராதையின் கணவனாகவும் ஆசை நாயகனாகவும் வழிபடவேண்டும் என அவர் போதித்தார். இவர் தம் கொள்கையைச் "**சுத்தாத்வைதம்**" என்றார். இவர் கிருஷ்ணதேவராயர் அவையில் இருந்த மத்வ சமய ஆச்சாரியரான வியாசராயதீர்த்தருடன் வாதம் செய்து வென்றதாகவும் கிருஷ்ணதேவராயர் அவருக்குக் கனகாபிஷேகம் செய்ததாகவும் கூறப்படுகிறது.[171] பிறகு இவர் வடநாட்டில் தங்கிச் சமயத்தொண்டாற்றினார்.

அன்றைய வைணவம் இராமானுசர் நெறியாகவும் மத்வாச்சாரியர் நெறியாகவும் இருந்து விஷ்டாத்வைதமாகவும் துவைதமாகவும் வளர்ந்திருந்தது. இராமானுசர் நெறியில் ஆசாரங்கள் குறைவாக இருந்தமையால் அது மக்களிடையே அதிக செல்வாக்கைப் பெற்றது. மத்வரின் நெறி மிகுந்த ஆசாரங்களுடன் இருந்ததால்அதை அந்தணர்களே பெருமளவில் கடைபிடித்தனர். அதனால் மற்றவர்களிடம் அதன் செல்வாக்கு பெருமளவில் இல்லை. கிருஷ்ணதேவராயர் இரண்டையும் சமமாகப் போற்றினார். அவருக்குப்பின் துவைத நெறி செல்வாக்கை இழந்தது. அச்சுதராயர், சதாசிவராயர், ராமராயர், அவர்தம்கீழ் இருந்தோர் ஆகியோர் ஸ்ரீவைணவத்தையே பெருமளவில் ஆதரித்தனர் என்று கூறுவர்.[172] இதிலிருந்து ஸ்ரீவைஷ்ணவமே மக்களிடமும் அரசர்களிடமும் செல்வாக்கு பெற்றிருந்தது எனக் கூறலாம்.

### 1.6.13.1 வைணவ நூல்கள் :

இரட்டைப்புலவர்களான நந்திமல்லனா - கண்டசிங்கனா (1450 - 1520 ) என்னும் இருவரும் வராகபுரத்தை இயற்றியுள்ளனர். இதில் தசாவதாரத்துதிகளும் நோன்புகள் பற்றிய குறிப்புகளும் உள்ளன. சைவராக இருந்து வைணவரான தெனாலி இராமகிருஷ்ணர் (1485 - 1575 ) பாண்டுரங்க மகாத்மியம், கடிகாசல மகாத்மியம் என்னும் இரு நூ! ல்களைப் பாடியுள்ளார். சிந்தலபூடி எல்லனார்யுடு என்பவர் இராமன் சிறப்பைக் கூறும் தாரக பிரம்மராஜ்யமு என்ற நூலையும் விஷ்ணுவின் சிறப்பைக்கூறும் விஷ்ணுமாயா நாடகத்தையும் இயற்றியுள்ளார். "**ராமாப்யுதயமு**" என்னும் பெயரில் இராமன் கதையைப் பாடியவர் அய்யலராஜு (1510 - 1518 ) என்பவராவார். வைணவத்தொண்டாற்றி அதன் மூலம் பல நூல்களைப் படைத்தவர்களும் வாக்கேயகாரர்களுமான தாள்ளபாக்கம் புலவர்கள் விஜயநகர ஆட்சியில் குறிப்பிடத்தக்கவர்களாவர். அன்னமாச்சாரியர் என்பவர் (1424 - 1503 ) ஆழ்வார்களுக்கு இணையாகத் திருவேங்கடவன் மீதும் அகோபிலம் நரசிம்மன் மீதும் பல சங்கீர்த்தனங்கள் பாடியுள்ளார். திம்மக்கா, பெத்த திருமலாச்சாரியர், சின்ன திருமலய்யா, சின்ன திருவெங்களநாதர், திருவெங்கலப்பா ஆகியோர் இம்மரபினர். இவர்களும் பல வைணவ நு!ல்களைப் படைத்துள்ளனர். கிருஷ்ணதேவராயர் ஆண்டாள் கதையையும் பெரியாழ்வார் கதையையும் கூறும் **ஆமுக்தமால்யதா** என்னும் நூலை இயற்றியுள்ளார்.

அரிபட்டு (1475 - 1535 ) என்பவர் வைணவ புராணங்கள் எழுதிப் புகழ் பெற்றவர். வராகபுராணம், மச்ச புராணம் , நரசிம்மபுராணம் ஆகியவற்றை இவர் தெலுங்கில் தந்தார். தோனூரி கோனேரு நாதகவி என்பவர் பாலபாகவதத்தை இயற்றியுள்ளார். இந்நூலில் விசிட்டாத்வைதக் கருத்துக்களும் ஆங்காங்குக் காணப்பெறுகின்றன.[173]

இவ்வாறாக, வைணவ நூல்கள் பல இவ்வாட்சிக் காலத்தில் தோன்றியுள்ளன. அவை வைணவ மதம் மக்களிடையே ஊடுருவிப் பெரும் இலக்கியங்களாகவும் சிற்றிலக்கியங்களாகவும் வெளிப்பட்டமையைக் காட்டுகின்றன.

### 1.6.14.0 குதுப்பாகியர் காலம் (கி.பி. 1512 - 1687 )

விஜயநகர ஆட்சிக்குப்பிறகு ஆந்திராவை ஆண்ட குதுப்பாகியர்களின் ஆட்சி மிகவும் குறிப்பிடத்தக்கதாகும். கி.பி. 1512 - இல் இருந்து 175 ஆண்டுகள் வரை ஆண்ட இவர்கள் ஆந்திர மக்கள் அனைவரையும் ஒன்று சேர்த்த பெருமைக்கு உரியவர்கள்; ஆந்திரச்சுல்தான்களாகச் சிறப்புற்றனர்.

குதுப்பாகியர் காலத்தில் எல்லா மதத்தினரும் சுகமாக இருந்தனர். அக்காலத்தில் மத வேற்றுமை சிறிதும் இல்லை. இச்சுல்தான்கள் மக்கள் அனைவரையும் சமமாக ஆதரித்தனர் என்று மாரேமண்ட ராமாராவு அவர்கள் கூறுவர்.[174] இதிலிருந்து அவர்கள்

மதப்பற்றற்ற ஆட்சியை மேற்கொண்டு ஆந்திராவை அமைதியுற ஆண்டவர்கள் எனக் கூறலாம். சுல்தான்களும் அவர்களைச் சார்ந்தவர்களும் கோயில்களுக்குக் கொடுத்த நன்கொடைகள் பலவாகும். வைணவக் கோயில்களுக்கு இவர்கள் ஆற்றியுள்ள தொண்டு குறிபிடத்தக்கதாகும். கி.பி. 1652-இல் எழுப்பப்பட்ட பத்ராசலம் ராமதாஸ் கோயிலுக்கு அபுல்ஹாசன் (1672 - 1687) என்பவன் பத்ராசலம், சங்கரகிரி, பால்வஞ்சலம் என்ற கிராமங்களை நன்கொடையாகத் தந்தான். அப்துல்லா குதுப்ஷா (1626-1672) என்பவன் கந்துகூரு சீமையில் உள்ள கோயில்களைப் பழுதுபார்க்க ஒரு வால்மீகி குலத்தினருக்குச் சண்டி கிராமத்தில் ஒரு ஹலம் நிலம் கொடுத்தான். மஹமத்கூலி (1580 - 1612) யின் சேனைத்தலைவன் அஸ்வாராவு சுல்தான் ஸ்ரீகூர்மநாதன் கோயிலுக்கு ஸ்ரீகூர்மம் என்ற கிராமத்தை நன்கொடையாகத் தந்தான். அவன் மகன் ஹசன் பேக் சலிவெல கோவிலின் கோனேரிக்குப் படிகளையும் நீர்வருவதற்குக் கால்வாயையும் கட்டினான்; பணந்தோட்டமும் அமைத்தான்.[175]

மேற்கண்டவற்றை நோக்கும்போது இவர்கள் முகமதியர்களாக இருந்தாலும் பிற மதத்தினரை வெறுக்கவில்லை எனத் தெரிகிறது. ஆனால் மக்களிடையே அவ்வொற்றுமை இருந்ததா? என்று அறிய முடியவில்லை. சைவர்களும் வைணவர்களும் ஒருவரையொருவர் வாதம் புரிந்துகொண்டதாகத் தெரிகிறது. அவர்களிடையே இருந்த போட்டிகளையும் - நடக்கும் வாதங்களையும் அக்காலத்தில் தோன்றிய **வைஜயந்தி விலாசம்** முதலான நூல்கள் தெரிவிப்பதாகக் கூறுவர்.[176]

### 1.6.14.1 வைணவ நூல்கள்

இக்காலத்தில் வாழ்ந்தவரான கந்துகூரிருத்ரகவி (1480 - 1560 ) சுக்ரீவ விஜயம் என்னும் யக்ஷ கானத்தையும் ஜனார்த்தனாஷ்டகம் என்னும் அஷ்டகத்தையும் பாடியுள்ளார். இவர்தம் வைணவ பக்திக்கு எடுத்துக்காட்டாக ஜனார்த்தனாஷ்டகம் விளங்குகிறது. கந்துகூரில் உள்ள ஜனார்த்தனனை நாயகன் நாயகி பாவத்தில் இவர் பாடியுள்ளார். சாரங்குதம்மையா என்பவர் தொண்டரடிப்பொடியாழ்வார் கதையைக் கூறும் வைஜயந்தி விலாசம் என்னும் சிருங்கார காவியம் பாடியுள்ளார். அன்னமாச்சாரியர் போன்றே இசைப்பாடல்களைப்பாடி வைணவத்தைப் பரப்பியவர்களான க்ஷேத்ரய்ய நாயகன் நாயகி பாவத்தில் தம் ஊரான முவ்வா (கிருஷ்ணா மாவட்டம்) கிராமத்தில் எழுந்தருளியிருக்கும் கோபாலசாமி மீது பல பதங்கள் பாடியுள்ளார். இராமபக்தியில் ஈடுபட்ட பக்தராமதாசு தாசரதி சதகம் என்னும் பெயரில் இராமன் மீது பல கீர்த்தனைகள் பாடினார்.

### 1.6.15.0 ஐரோப்பியர் காலம்

முகமதியர் காலத்திலேயே வியாபாரத்தில் ஈடுபட்ட ஐரோப்பியர்கள் அவர்கள் ஆட்சி வீழ்ச்சி அடைந்ததும் செல்வாக்கு பெற்றனர். அதன் விளைவாகத் தமிழகம் போன்று ஆந்திராவும் ஐரோப்பியர் ஆட்சிக்கு உட்பட்டது. 18-ஆம் நுாற்றாண்டிலிருந்து கிறித்தவம் மிகவும் செல்வாக்கு பெற்று வளர்ந்தது. அதன் விளைவாக இசுலாமியமும்

இந்து மதமும் போட்டி இட வேண்டிய நிலைக்கு ஆட்பட்டன. மேலைநாட்டின் பண்பாட்டு மாற்றத்தாலும் இந்துமதம் மாற்றங்களுக்கு உரியதானது. ஆனாலும் தன் பழமையின் சிறப்பால் அது மக்களிடையே நிலவியபடியே இருந்தது. சைவமும் வைணவமும் தம் செல்வாக்கை இழக்கவில்லை. திருப்பதி, அகோபிலம் ஆகிய இடங்களில் உள்ள வடகலை மடங்கள் வைணவத்தைப் பரப்புவதிலும் கல்வியைப் பரப்புவதிலும் சிறந்த இடத்தை வகித்தன.

### 1.6.15.1 வைணவ நூல்கள்

இக்காலத்தில் இருந்த கங்கண்டி பாபராஜு (1750 - 1800) என்பவர் **விஷ்ணு** மாயாவிலாசமு என்ற யக்ஷகானத்தையும் உத்தரராமாயணம் என்னும் பெருங்காவியத்தையும் பாடியுள்ளார். சைவரானாலும் புறச்சமய வெறுப்பற்ற கூசிமஞ்சி திம்மகவி (1690 - 1756) என்பவர் ருக்குமணி பரிணயமு, அச்சதெலுகு இராமாயணம் முதலிய வைணவ நூல்களைப் படைத்துள்ளார். இராமன், கண்ணன், நரசிம்மன் என்னும் திருமால் மீது பாடிய சதகங்கள் பல இக்காலத்தில் தோன்றின. அவ்வாறே யக்ஷ கானங்களும் பல இக்கால அளவில் தோன்றின. இவை திருமால் வடிவமான இராமன், கண்ணன், நரசிம்மன் ஆகிய கடவுளர் மீது ஆந்திரமக்கள் கொண்டிருந்த பக்தியையும் அவர்கள் கதைகள் மக்களிடையே பெற்றிருந்த செல்வாக்கையும் காட்டுகின்றன.

### 1.6.16.0 இக்காலம்

இருபதாம் நூற்றாண்டின் இக்காலத்திலும் முன்னர்த் தமிழ் நாட்டின் வைணவ நிலையைக் கூறியது போன்றே ஆந்திர நாட்டிலும் வைணவம் பல நிலைகளில் நிலைத்து வருகிறது. வைணவச்சார்புடைய நூல்கள் வெளியிடப்படுகின்றன; ஆராய்ச்சிகளும் மேற்கொள்ளப்படுகின்றன. கோயில்களில் விழாக்களும் வழிபாடுகளும் மேற்கொள்ளப்பெற்றுப் பழமையிலிருந்து வழுவாது வைணவம் நிலவுகிறது.

சுருங்கக் கூறினால், ஆந்திர நாட்டில் இராமன் வழிபாடும் கண்ணன் வழிபாடும் இல்லாத ஊர் இல்லை எனலாம். அவ்வாறே இராமன் கோயில்களும் இல்லாத ஊர் இல்லை எனலாம். ஆந்திர நாட்டில் உள்ள ஒவ்வொரு இந்துவின் வீட்டிலும் இராமாயணமோ மகாபாரதமோ பாகவதமோ இல்லாமல் இருப்பதில்லை. இராமாயண அல்லது பாரதச் சொற்பொழிவுகளைக் கேட்பதையும் அந்நூல்களைப் படிப்பதையும் அவர்கள் வாழ்க்கைக்கு நல்லது என்றும் புனிதமானது என்றும் கருதுகின்றனர்.

### 1.6.16.1 வைணவ நூல்கள்

சிலர்வைணவபக்திப்பாடல்களைஇக்காலத்திலும் தெலுங்கில் பாடியுள்ளனர். இக்காலக் கவிஞர்களின் பக்திப்பாடல்களில் தலைவன், தலைவி பக்தியைக் காட்டும் மதுரபக்திப் பாடல்கள் தெலுங்கில் அதிகம்

உள்ளன என்று சி.நாராயணரெட்டி அவர்கள் கூறுவர். இப்பாடல்கள் தோன்றுவதற்கு ஆந்திர பாகவதம், க்ஷேத்திரய்யபதங்கள், கீதாகோவிந்தம், கிருஷ்ண கானாம்ருதம் ஆகிய நூல்கள் மூலகாரணம் என்றும் இப்பாடல்களில் தாகூரின் கீதாஞ்சலி, வங்காள வைணவம் (சைதன்யர்மதம்) ஆகியவற்றின் செல்வாக்கும் உள்ளது என்று அவர் கூறுவர்.[177] விஸ்வநாதரின் சிருங்காரவீதி, கிருஷ்ண சாஸ்திரியின் **அன்வேஷனமு**, கருணஸ்ரீயின் கருணாமய, குருஜாடராகவசர்மாவின் கோபிகா ஹ்ருதயமு, பசவராஜு அப்பாராவுவின் கோபிகாகீதமுலு முதலியன கண்ணன் - ராதை, கண்ணன் - கோபியர் காதல் உணர்வுகளை வெளிப்படுத்தும் மதுரபக்திப் பாடல்களாகும்.

இக்காலத்தில் வைணவச் சார்புடைய ஆய்வு நூல்களும் கட்டுரைகளும் தெலுங்கில் எழுந்தவண்ணம் உள்ளன. முன்னர்க் குறிப்பிட்டது போன்று திருமலை - திருப்பதி தேவத்தானம் தெலுங்கில் ' ஸப்தகிரி ' என்ற பெயரில் சமயத் திங்கள் இதழை வெளியிடுகின்றது; இந்துமதம் சார்ந்த குறிப்பாக வைணவ நூல்களை வெளியிட நிதியுதவியும் செய்கிறது.

### 1 . 6 . 17 தமிழ் வைணவ சம்பிரதாயச் சொற்கள்:

தமிழ் நாட்டுச் சைவ சமயத்தின் தாக்கம் ஆந்திர நாட்டிலும் தெலுங்கு இலக்கியங்களிலும் இருந்தாலும் ஸ்ரீவைணவத்தின் தாக்கம் பெருமளவில் உள்ளது

எனலாம். இதுகுறித்து குறிப்பிடும்போது வேதம் வெங்கடராய சாஸ்திரி,

தமிழ்ச் சைவம் தெலுங்கிலும் கன்னடத்திலும் சமயச்சிந்தனைகளை வழங்கியதேயன்றி மொழியையும் சமயச் சொற்களையும் வழங்கவில்லை என்பதை நான் இறுதியாகஅறிந்தேன். தமிழிலிருந்து மொழிபெயர்ப்பதைத் தெலுங்கு மொழி மட்டும் முழுமையாகப் பயன்படுத்திக் கொண்டது. ஆனால் வைணவத்தில் இத்தன்மை மாறுபட்டுள்ளது. வைணவச் சமயச் சொற்களைத் தெலுங்குக்கு நிரம்பத் தந்து தமிழ்நாட்டைத் தெலுங்கு வைணவர்கள் மெக்கா நகரமாகக் கருதச்செய்தது[178] என்று கூறுவர்.

தெலுங்கில் தோன்றிய முதல் வைணவ ஆச்சாரியரான கிருஷ்ணமாச்சாரியர் முதற்கொண்டு இக்காலத்தவர்கள் வரை உள்ள பலர் தம் நூல்களிலும் பாடல்களிலும் தமிழ் வைணவச் சம்பிரதாயச் சொற்களைப் பெருமளவில் கையாண்டுள்ளனர். தாள்ளபாக்கம் கவிஞர்கள் இலக்கியங்களிலும் அன்றைய சாசனங்களிலும் உள்ள தமிழ்ச் சொற்கள் குறித்துக் குறிப்பிடும்போது வேடூரி ஆனந்தமூர்த்தி தெலுங்கில் ஓர் அகராதி வெளியிடும் அளவிற்குத் தமிழ்ச் சொற்கள் உள்ளதாக்க் கூறுவர். [179]

தெலுங்கில் உள்ள நூல்களில் **ஸ்ரீ** என்ற வடமொழிச் சொல்லுக்கு நிகரான **திரு** என்னும் சொல்

பல இடங்களில் வருகின்றது. வைணவர்கள் **திரு** என்னும் சொல்லை மிகவும் புனிதமாகக் கருதுவர். தமிழிலிருந்து சென்ற சொற்களில் இது மிகவும் குறிப்பிடத்தக்கதாகும்.

இதன் தொடர்பாகத் **திருமண்ணு** (திருமணி), **திருபோனமு** (உணவு), **திருச்செவி** (திருச்செவிசாத்து), **திருக்காவேரி** (புனித நீர் உள்ள பாத்திரம்), **திருமஞ்சனம்** (புனித நீர்), **திருமாளிக** (வைணவர் வீடு), **திருபுட்டமு** (திருவடி), **திருவரங்கம்**, **திருபதி** (திருப்பதி), **திருமல** (திருமலை) முதலான சொற்கள் தெலுங்கு வைணவ நூல்களிலும் வைணவர் பேச்சு வழக்கிலும் பெருமளவில் காணப்படுகின்றன.

இவற்றோடு **நம்பி**, **நாஞ்சாரு** (நாச்சியார்), பல்லாண்டு, **பெருமாளு** (பெருமாள்), **அடியாரு** (அடியார்), **ஆளுவாரு** (ஆழ்வார்), **அருளுபாடு** (அருளப்பாடு), **தளிகலு** (தளிகை) முதலான சொற்களும் தெலுங்கு இலக்கியங்களில் காணப்படுகின்றன. **பத்மாவதி** என்னும் வடமொழிச் சொல்லுக்கு நிகரான **அலர்மேல்மங்கை** என்னும் தமிழ்ச் சொல் தெலுங்கில் **அலமேலுமங்க, அலமேலுமங்கம்மா, அலமேலுமங்கதாய், அலர்மேலுமங்க, மங்கம்மா** என்று பலவாறாக உள்ளன.

இன்றும் தெலுங்கு வைணவர்கள் சிலர் வைணவத்தின் செல்வாக்கால் திருநாராயணசாமி, பாஷ்யம், அழகசிங்கரி, ரங்கராமானுஜம், திருமல என்று தம் பெயர்களை வைத்துக்கொள்கின்றனர்.

ஆழ்வார்களின் பாடல்களுக்கு என்றுமே ஏற்றம் இருப்பதால் அவற்றைத் தெலுங்கில் எழுத்துப்பெயர்ப்பு செய்து கொண்டு இன்றும் வைணவக் கோயில்களிலும் தம் வீடுகளிலும் பாராயணம் செய்கின்றனர்.

எனவே, தமிழர் வைணவத்தால் தெலுங்கு மொழியும் தெலுங்கு வைணவ இலக்கியங்களும் பெற்ற பயன் அதிகம் எனக் கூறலாம்.

### 1.7.0 ஒப்பீடு:

இங்குத் தமிழ் - ஆந்திர மாநிலங்களில் நிலவிய வைணவம் அதன் வளர்ச்சி ஆகியன ஒப்பிட்டு ஆயப்பெறுகின்றன.

வடநாட்டில் கி.மு. ஐந்தாம் நூற்றண்டளவில் விளங்கிய வாசுதேவ வழிபாடும் பலதேவன் வழிபாடும் தொல்காப்பியர் காலத்திலேயே தமிழகத்தில் நிலவியதை அறிகிறோம். கி.மு. இரண்டாம் நூற்றாண்டளவில் வாசுதேவனுடன் வேதகால விஷ்ணு, நாராயணன், கோகுலகிருஷ்ணன் என்னும் தெய்வங்கள் ஒன்றிய ஏகதெய்வக்கொள்கையுடன் வைணவம் பாகவத மதமாக வளர்ந்திருக்கிறது. அதன் எதிரொலியைச் சங்க இலக்கியங்களில் குறிப்பாகப் பரிபாடல் சிலப்பதிகார நூல்களில் காண்கிறோம். எனவே, கி.பி. இரண்டு மூன்று நூற்றாண்டுகளில் தமிழ் நாட்டில் வைணவம் வளரத் தொடங்கியது. திருவரங்கம், திருவேங்கடம்,

திருமாலிருஞ்சோலை, திருவெஃகா, இருந்தையூர் ஆகிய இடங்களில் வழிபடும் இறைவனாகத் திருமால் விளங்கியுள்ளான்.

இவ்வாறே, ஆந்திரத்திலும் கி.மு. மூன்றாம் நூற்றாண்டுக்கு முன்பு திருமால் வழிபாடு நிலவியதற்கான சான்றுகள் காணப்படவில்லையென்றாலும் அதற்குப் பின் ஏறக்குறைய சங்க காலத்துடன் பொருந்திவரும் சாதவாகனர் காலத்தில் (கி.மு. 3 நூற்றாண்டு) சங்கர்சனவாசுதேவ வழிபாட்டுடன் கூடிய பாகவதமதம் இருந்ததை அறிகிறோம். அதனால் கி.பி. முதல் நூற்றாண்டின் தொடக்கத்தில் தொகுக்கப்பட்ட காதாசப்தசதியில் கண்ணன், கோபியர், இராதை, வாமன அவதாரம், திருமகள், நாராயணன் பற்றிய செய்திகள் காணப்படுகின்றன. அரசர்களும் அரசியர்களும் திருமால் மீது பற்றுடன் காணப்பெற்றனர்.

சாதவாகனர்களுக்குப் பிறகு வந்த இக்சுவாகர்கள் (கி.பி. 130 - 300) காலத்தில் நாகார்ஜுன பள்ளத்தாக்கில் வைணவம் நிலவியிருக்கிறது. இவர்கள் காலத்தில் எழுப்பப்பட்ட அஷ்டபுஜ நாராயணன் கோயில் போன்று பல்லவர்காலத்தில்காஞ்சிபுரத்தில்எழுப்பப்பட்டிருக்கிறது. தமிழ் இலக்கியங்கள்வழி இன்று ஆந்திராவில் உள்ள திருப்பதி வைணவ தலமாகவும் அங்குத் திருவேங்கடவன் நின்று அருள் புரிவதையும் அறியலாம்.

தமிழகத்தில் இருண்டகாலமாகக் கருதப்படும்

களப்பிரர், முற்காலப் பல்லவர் காலத்தில் பௌத்தமும் சமணமும் செல்வாக்கு பெற்றிருந்தும் பல்லவர்கள் சிலர் பரமபாகவதர்களாக விளங்கியுள்ளனர். பல்லவர் ஆட்சி ஆந்திராவிலும் பரவியிருந்ததால் அங்கும் இந்நிலையே இருந்தது.

பின்னர், பல்லவர்கள் ஐந்து ஆறு நூற்றாண்டளவில் வலிமையுற்ற போது முதலாழ்வார்கள் வைணவ சமயத்தின் விடிவெள்ளியாகத் தோன்றியுள்ளனர். பல்லவர்களும் தமிழகத்திலும் ஆந்திராவிலும் கோயில்களை எழுப்பியும் அவற்றுக்கு நன்கொடைகள் தந்தும் போற்றியுள்ளனர். முதல் ஆழ்வார்களுக்குப் பின் தோன்றிய ஏனைய ஆழ்வார்கள் வைணவத்தை வளர்த்ததோடு ஆந்திராவில் உள்ள திருப்பதியையும் பாடியுள்ளனர். திருமங்கையாழ்வார் அகோபிலம் நரசிம்மனைப் பாடியுள்ளார். இதனால் ஆழ்வார்கள் சிலர் ஆந்திராவிலும் பயணம் செய்து தங்கள் நெறியைப் பரப்ப முயன்றனர் எனலாம்.

பல்லவர் காலத்தில் ஆந்திரத்தின் வடபகுதியை ஆண்டு கொண்டிருந்த அனந்தகோத்திரர்கள், சாலங்காயனர்கள், விஷ்ணுகுண்டிகர்கள், பூர்வ காங்கர்கள், கீழைச்சாளுக்கியர்கள் ஆகியோருள் சிலர் வைணவர்களாக இருந்ததோடு வைணவக் கோயில்களுக்கு நன்கொடைகளையும் வழங்கியுள்ளனர்.

பிற்காலச் சோழர்கள் காலத்தில் தமிழகத்தில் ஆச்சாரியர்கள் தோன்றித் தத்துவங்களை வகுத்து வளர்த்துள்ளனர். இராமாநுசர் விசிட்டாத்வைத நெறியை இந்தியா முழுவதும் பரப்பிய காலத்தில் ஆந்திரத்திலும் அதன் செல்வாக்கைக் காணமுடிகிறது. அவர் திருப்பதிக்கு மூன்றுமுறை வந்துள்ளார். அங்கிருந்தே ஸ்ரீவைஷ்ணவம் ஆந்திராவில் பரவியது. அவருக்கு முன்பும் (10-ஆம் நூற்றாண்டு) ஸ்ரீவைஷ்ணவம் பாபட்லாவில் பரவியிருந்தது. மங்களகிரி, மாசெர்லா, ஸ்ரீகாகுளம், சிம்மாசலம், ஸ்ரீகூர்மம் , அகோபிலம் ஆகிய இடங்கள் வைணவ மையங்களாக விளங்கியிருக்கின்றன.

இராமாநுசருக்குப் பின் வந்த மத்வாச்சாரியரின் (13-ஆம் நூற்றாண்டு) துவைத நெறியும் ஆந்திராவில் விளங்கியிருந்தது. இராமாநுசரின் வைணவச் செல்வாக்கால் பிரம்ம நாயுடு (12 -ஆம் நூற்றாண்டு) நடத்திய வீர வைணவ இயக்கத்தையும் காணலாம். இவ்வாறு இராமாநுசருக்குப் பிறகும் மத்வாச்சாரியருக்குப் பிறகும் வைணவம் ஆந்திராவிலும் நன்கு வளரத் தொடங்கியதால் வைணவ நூல்கள் பல தோன்றின. காகதீயர் காலத்தில் அவற்றைக் காணலாம்.

காகதீய மன்னர்களும் அவர்கள்கீழ் இருந்தவர்களும் பல திருமால் கோயில்களைக் கட்டி நன்கொடைகள் தந்துள்ளனர். பாஸ்கர ராமாயணம் , ரங்கநாத ராமாயணம் எனும் நூல்கள் தோன்றின. அக்காலத்தில் ஆந்திராவில் வீரசைவத்தின் செல்வாக்கு மிகுந்திருந்தாலும் திக்கனா

முதலானவர்கள் இரண்டையும் ஒன்றாகவே கருதியுள்ளனர். ஆந்திர நாட்டு ஸ்ரீவைஷ்ணவச் சார்புடைய நூல்களுள் குறிப்பிடத்தக்கதும் முதலாவதுமானதும் கிருஷ்ணமாச்சாரியரின் சிம்மகிரி வசனங்களாகும்.

தமிழ் நாட்டில் சோழர்களுக்குப் பிறகு விஜயநகர ஆட்சிவரை பிற்காலப் பாண்டியர்கள் செல்வாக்கு பெற்று வைணவக்கோயில் திருப்பணிகள் பலவற்றைச் செய்துள்ளனர். அப்பொழுது நிகழ்ந்த முகமதியர் கொள்ளைக்கு ஆந்திரமும் தமிழகமும் சிதைவுற்றன; வைணவக் கோயில்களும் சிதைந்தன. ஆந்திரத்தில் ரெட்டி அரசர்களும் தெலுங்கு நாயக்கர்களும் அவர்களை விரட்டிச் சில இடங்களில் தங்கள் ஆட்சியை அமைத்தனர்கள். பட்டர், கந்தாடை, திருமலை ஆகிய மரபினரும் வேதாந்த தேசிகரின் திருமகனார் நாயனாச்சாரியரும் ஆந்திரத்தில் அரசாதரவுடன் வடகலை தென்கலை வைணவத்தைப் பரப்பினர்.

தமிழகத்திலும் ஆந்திராவிலும் விஜயநகர ஆட்சி நிலவியபோது வைணவத்தில் குறிப்பிடத்தக்க வளர்ச்சியைக் காணலாம். அம்மன்னர்கள் இரு மாநிலங்களிலும் கோயில் திருப்பணிகள் பல செய்துள்ளனர்; மண்டபங்களையும் கோபுரங்களையும் எழுப்பியுள்ளனர்; சாளுவ , துளுவ, ஆரவீடு மரபினர் வைணவர்களாக விளங்கியிருக்கின்றனர்; ஆந்திரத்தில் துவைத நெறி ஆச்சாரியர்களான ஸ்ரீபாதராயர்,

வியாசராயர் ஆகியோர் கௌரவிக்கப்பட்டனர்.

15, 16 -ஆம் நூற்றாண்டுகளில் தோன்றிய வல்லபாச்சாரியர் இயக்கமும் ஆந்திரத்தில் பரவியதைக் காண்கிறோம். தமிழகத்தில் துவைத நெறி, வல்லபர்நெறி இருந்தனவாகக் கூறினாலும் அவை செல்வாக்கு பெறவில்லை. ஆழ்வாராச்சாரியர் வைணவ நெறியே இதற்குக் காரணம். அன்றைய வைணவத்தில் விசிட்டாத்வைதமும் துவைதமும் ஆந்திரத்தில் இருந்தனவென்றாலும் விசிட்டாத்வைதமே மக்கள் ஆதரவைப் பெற்றிருந்தது. வைணவ நூல்கள் பல தோன்றின. தாள்ளபாக்கம் கவிஞர்கள் தோன்றி வைணவத்தைத் தம் பக்திக் கீர்த்தனைகளால் வளர்த்தனர்.

தமிழகத்தில் நாயக்கர்கள் வைணவர்களாக இருந்ததோடு கோவில் திருப்பணிகள் பலவற்றைச் செய்துள்ளனர். மதுரை நாயக்கரின் பணி இதில் குறிப்பிடத்தக்கதாகும். தஞ்சை மராட்டியர்கள் சைவர்களாக விளங்கினாலும் வைணவக் கோயில்களுக்குப் பல திருப்பணிகள் செய்துள்ளனர்.

தமிழகத்தில் நாயக்கர் மராட்டியர் ஆட்சி நிலவிய கால அளவில் ஆந்திரத்தில் குதுப்பாகியர்கள் தோன்றியுள்ளனர். அவர்கள் முகமதியர்களாக இருந்தாலும் சமயச் சார்பின்றி வைணவக் கோயில்களையும் போற்றியுள்ளமை தெரிகிறது.

க்ஷேத்ரய்யர, பக்த ராமதாஸ் ஆகியோர் கீர்த்தனைகளைப் பாடியுள்ளனர்.

ஐரோப்பியர் காலத்தில் இரு மாநிலங்களிலும் இந்து சமயத்தில் ஏற்பட்ட மாற்றங்களைக் காண்கிறோம். கிறித்தவ மதமும் இசுலாமிய மதமும் நன்கு பரவியமையால் மதச்சார்பற்ற எண்ணம் அறிஞரிடையே நிலவியது; வைணவம் சைவம் என்ற பாகுபாடும் மறைந்தது; ஐரோப்பியர் செல்வாக்கால் ஆய்வு மனப்பான்மை தோன்றியது. சைவர் வைணவ நூல்களையும் வைணவர் சைவ நூல்களையும் இயற்றினர்; பதிப்பித்தனர்; ஆய்ந்தனர் எனலாம்.

இக்காலத்திலும் இந்நிலையே தொடர்ந்து இருமாநிலங்களிலும் நிலவுகிறது. இந்துமதம் என்னும் பொது நிலையிலும் அதில் ஒன்றாகவும் இன்று வைணவம் ஆந்திரரிடத்தும் தமிழரிடத்தும் நிலவி வருகின்றது.

முடிபுகள்:

வடநாட்டில் தோன்றிய பாகவதமதம் தமிழகத்திலும் ஆந்திரத்திலும் பரவத் தொடங்கியதைத் தொடக்கத்தில் காண்கிறோம். ஒவ்வொரு காலத்திலும் சைவத்திற்கு இருந்ததுபோன்றே அரசின் ஆதரவு வைணவத்திற்கும் இருந்துள்ளது. ஆந்திரத்திலும் ஆழ்வார்கள் அடிச்சுவடு காணப்பட்டாலும்

ஆச்சாரியர்கள் காலத்தில் வைணவம் செல்வாக்கோடு விளங்கியது எனலாம். ஆழ்வார்கள் தொடக்கத்தில் தம் பாடல்கள்வழி வைணவத்தை நிறுவியதுபோன்று தெலுங்கில் தாள்ளபாக்கம் கவிஞர்கள் முதலானோர் தம் கீர்த்தனைகள்வழி வைணவத்தை நிலைநாட்டியுள்ளனர். இன்றும் இரு மாநிலங்களிலும் வைணவம் மக்கள் வாழ்விலிருந்தும் இலக்கியகளிலிருந்தும் பிரிக்கமுடியாத ஒன்றாக நிலைத்து நிலவி வருகிறது.



# குறிப்பெண் விளக்கம்

1. அ. ச. ஞானசம்பந்தன்; " தமிழும் சமயமும் "; **உலகத் தமிழ் மாநாடு விழா மலர்;** சென்னை; 1968; சமயம் பிரிவு; ப. 1.
2. வ. அ. தேவசேனாதிபதி; " சமயம் " ; **கலைக்களஞ்சியம்;** தொகுதி நான்கு; ப. 452.
3. தி. சேஷாத்திரி; **ஹிந்து மதம் ஓர் அறிமுகம்;** ப.3.
4. K. K. Pillai; **A social History of Tamils;** Vol. I; P. 465.
5. வ. அ. தேவசேனாதிபதி; " சமயம் " ; **கலைக்களஞ்சியம்;** தொகுதி நான்கு; ப. 452.
6. அரங்க சீனிவாசன்; **வைணவ சமய அடிப்படைகள்;** ப. 9.
7. மேற்படி; ப. 10.
8. மேற்படி; பப. 11 - 12.
9. கி. லக்ஷ்மணன்; **இந்திய தத்துவ ஞானம்;** ப. 340.
10. ஆர். இராமஸ்வாமி ராமாநுஜதாசர்; **ஸ்ரீவைஷ்ணவம்;** ப. 25.
11. மேற்படி; ப. 26.
12. பொய்கையாழ்வார்; **முதல் திருவந்தாதி;** பா. எ.25.
13. கு. அருணாச்சலக் கவுண்டர்; **தமிழ்ப் பண்பாட்டில் வைணவம்;** ப.ப. 2-3.
14. மேற்படி; பப. 4 - 10.

15. மேற்படி; பப. 10 - 13.
16. மேற்படி; பப. 13 - 15.
17. மேற்படி; ப. 16.
18. R. G. Bhandarkar; **Vaisnavism, Saivism and minor Religious Systems**; PP. 142 - 143.
19. Om Prakash; **Religion and Society in Ancient India**; P. 57.
20. S. R. Goyal; **A Religious History of Ancient India**; P. 235.
21. தொல்காப்பியம்; அகத்திணையியல்; நூ. எண்.5.
22. உ. வே. சாமிநாதையர்; சங்கத் தமிழும் பிற்காலத் தமிழும்; ப. 69.
23. தொல்காப்பியம்; பொருளியல்; நூ. எ. 60.
24. மேற்படி; மரபியல்; நூ. எ. 615.
25. ம. ராதாகிருஷ்ணபிள்ளை; பிற்கால வைணவம்; ப. 14.
26. மு. இராகவையங்கார்; ஆராய்ச்சித் தொகுதி; ப. .53
27. கு. அருணாசலக் கவுண்டர்; மு. கூ. நூ.; ப. 18.
28. தொல்காப்பியம்; எழுத்ததிகாரம்; நூ. எ. 285.
29. புறநானூறு; வ. எ. 56:5.
30. முல்லைப்பாட்டு; வ. எஎ. 1-3.
31. பதிற்றுப்பத்து; வ. எஎ. 4: 1-8.
32. பெரும்பாணாற்றுப்படை; வ. எஎ. 372-373.
33. மேற்படி; வ. எஎ. 403-404.
34. மதுரைக்காஞ்சி; வ. எஎ. 590-591, 461-466.

35. புறநானூறு; வ. எ. 58:14.
36. மேற்படி; வ. எஎ. 55:3-6.
37. மேற்படி; வ. எஎ. 58:14-17.
38. நற்றிணை; வ. எஎ. 3:1-2.
39. Om Prakash; Op. cit.; P. 56.
40 முல்லைப் பாட்டு; வ. எஎ. 1-3.
41. அகநானூறு; வ. எஎ. 51:3-6.
42. புறநானூறு; வ. எஎ. 174:1-5.
43. மேற்படி; பா. எஎ. 18, 22.
44. அகநானூறு; வ. எஎ. 60:8-10.
45. பெரும்பாணாற்றுப்படை; வ. எஎ. 29-31.
46. பதிற்றுப்பத்து; வ. எ. 7:8.
47. R. Sarangapani; A Critical Study of Paripadal; PP. 118-119.
48. பரிபாடல்; வ. எ.3:6.
49. மேற்படி; வ. எ. 1:14.
50. மேற்படி; வ. எ. 3:2.
51. மேற்படி; வ. எஎ. 2: 20 - 21.
52. மேற்படி; வ. எஎ. 13: 26- 29.
53. மேற்படி: வ. எஎ. 81 - 82.
54. மேற்படி; வ. எஎ. 2:16-17.
55. மேற்படி; வ. எஎ. 3: 26-28.
56. மேற்படி; வ. எஎ. 2: 22-25.
57. மேற்படி; வ. எஎ. 4:10-20.
58. மேற்படி; வ. எஎ. 3: 63-68.
59. மேற்படி; வ. எஎ. 15: 13-14.

60. **பரிபாடல் புறத்திரட்டு**; வ. எ. 23.5.
61. **சிலப்பதிகாரம்**; வ. எ. 17:37:5.
62. ராஸலீலை என்பது கண்ணன்திருவுருவங்கள் பலகொண்டு ஆய்ச்சிரிடையே நின்று ஒருவரோடு ஒருவராகக் கைகோர்த்து வட்டமிட்டு வளைந்து நிமிர்ந்து குனிந்து பாடியாடும் ஒருவகை கூத்து.
63. கு. அருணாசலக் கவுண்டர்; மு. கூ. நூ.; ப. 28.
64. மேற்படி; ப. 33.
65. **மணிமேகலை**; வ. எஎ. 27:98-99.
66. **சிலப்பதிகாரம்**; வ. எஎ.11:35-40.
67. மேற்படி; வ. எஎ. 11:41-51.
68. **பரிபாடல்**; வ. எஎ. 15:13-14.
69. **பெரும்பாணாற்றுப்படை**; வ. எஎ. 371-373.
70. மேற்படி; வ. எஎ. 23-25.
71. **சிலப்பதிகாரம்**; 5:171-172; 14:8-9.
72. ஈ. எஸ். வரதராஜ ஐயர்; **தமிழ் இலக்கிய வரலாறு**; ப. 221.
73. மது. ச. விமலானந்தம்; **தமிழ் இலக்கிய வரலாற்றுக் களஞ்சியம்**; பகுதி ஒன்று; ப. 8.
74. ஆ. வேலுப்பிள்ளை; **தமிழ் இலக்கியத்தில் காலமும் கருத்தும்**; ப. 75.
75. D. Mohanarangaswamy; Contact, **Relationship and Mutual contributions of the Tamils and the Telugus through the ages upto 1530 A. D.**; PP. 92-93.

76. பேயாழ்வார்; மூன்றாம் திருவந்தாதி; பா. எ. 63.
77. காரைக்காலம்மையார்; அற்புத திருவந்தாதி; பா.எ.41.
78. ப. கிருஷ்ணன்; தமிழ் நூல்களில் தமிழ் மொழி, தமிழ் இனம், தமிழ்நாடு; ப. 137.
79. மு. வரதராசனார்; தமிழ் இலக்கிய வரலாறு; ப. 97.
80. நம்மாழ்வார்; திருவாய்மொழி; பா. எ. 3:7:9.
81. பின்பழகிய பெருமாள் ஜீயர்; குருபரம்பராப் பிரபாவம்; பப. 81-85.
82. திருமங்கையாழ்வார்; பெரிய திருமொழி; பா. எஎ.2:1:5, 2:1:6, 2:6:5,5:6:8, 7:4:5, 9:7:9.
83. தொண்டரடிப்பொடியாழ்வார்; திருமாலை; பா.எ.8.
84. மா. இராசமாணிக்கம்பிள்ளை; பல்லவர் வரலாறு; பப. 86-87.
85. மேற்படி; பப. 94-169.
86. மேற்படி; பப. 186-187.
87. மேற்படி; ப. 208.
88. மேற்படி; ப. 274.
89. மது. ச. விமலானந்தம்; மு. கூ. நூ.; பப. 178-180.
90. ஆ. வேலுப்பிள்ளை; மு. கூ. நூ.; ப. 113.
91. ம. ராதாகிருஷ்ணபிள்ளை; பிற்கால வைணவம்; ப.29.
92. இந்தப் பீடத்தின்தலைவரான ஆச்சாரியர்களின் சொல்லே சமய வழிபாட்டு முறைகளில் சட்டமானது. அவர்களுடைய வாழ்க்கையும் உபதேசங்களும் ஆலயங்களுக்கும் பொதுமக்களுக்கும் வழிகாட்டியாக விளங்கின. ஆசாரிய பீடத்தின் தலைமையுடன் இணைந்திருந்தது

திருவரங்க கோயில் நிர்வாகம் அங்கிருந்தே ஆலய ஒழுக்கங்கள் மற்றைய வைணவ ஆலயங்களுக்குப் பரவின.

93. அக்னிஹோத்ரம் ராமாநுஜதாதாசாரியர்; **வரலாற்றில் பிறந்த வைணவம்**; பப. 249-251.
94. மேற்படி; ப. 251.
95. மா. இராசமாணிக்கம்; **சோழர் காலம்**; ப. 139.
96. K. A. Neelakanda Sastri; **The Cholas**; PP. 639-640.
97. கே.கே. பிள்ளை; **தமிழக வரலாறு - மக்களும் பண்பாடும்**; பப. 355-356.
98. டி. வி. சதாசிவ பண்டாரத்தார்; **பிற்காலச் சோழர் சரித்திரம்**; பகுதி இரண்டு; பப. 47-48.
99. மேற்படி: ப. 163.
100. திரு. வ. பொன்னுசாமிபிள்ளை; **குலோத்துங்கர் மூவர்**; பப. 62-65.
101. வி. ரா. இராமச்சந்திர தீக்ஷிதர்; **மூன்றாம் குலோத்துங்க சோழன்**; ப. 81.
102. கே. கே. பிள்ளை; மு. கூ.. நூ. ; ப.350.
103. மேற்படி; ப. 350.
104. டி. வி. சதாசிவப் பண்டாரத்தார்; மு. கூ. நூ.; பகுதி இரண்டு; பப. 111 - 112.
105. மு. இராகவ ஐயங்கார்; "**சாசனத் தமிழ்க் கவிதை சரிதம்**" ; மானாமதுரை;எம். ஆர். நாராயண ஐயங்கார்; 1958; பப. 81-85.
106. D. Mohanarangaswamy; Op. cit.; PP. 233-247.
107. Ibid.; PP. 247-250.

108. என். சேதுராமன்; **பாண்டியர் வரலாறு**; ப. 5.
109. மேற்படி; ப. 5.
110. மேற்படி; பப. 42-43.
111. மேற்படி; பப. 92-93.
112. ஏ.சுவாமிநாதன்; **தமிழக வரலாறும் பண்பாடும்**; ப.247.
113. என். சேதுராமன்; மு. கூ. நூ.; பப. 124-125.
114. மேற்படி; பப. 156-157.
115. மேற்படி; பப. 166-167.
116. மேற்படி; ப. 167.
117. மேற்படி; ப. 218.
118. N. Jagadeesan; **History of Sri Vaishnavism in the Tamil Country**; P. 182.
119. Ibid.; P. 187.
120. Ibid.; P. 138.
121. அ. கிருஷ்ணசாமி; **விஜயநகரப் பேரரசின் வரலாறு**; ப. 296.
122. மேற்படி; பப. 296-298.
123. K. A. Neelakanda Sastri; **The Culture and History of Tamils**; P. 117.
124. அ. கிருஷ்ணசாமி; மு. கூ. நூ.; ப. 310.
125. மு. அருணாசலம்; **தமிழ் இலக்கிய வரலாறு**; 16 நூ. பாகம் ஒன்று; ப. 409.
126. அ. கிருஷ்ணசாமி ; மு. கூ. நூ.; ப. 338
127. கே. கே. பிள்ளை; மு. கூ. நூ.; ப. 387.
128. ஆ. இராமகிருட்டினன்; **தமிழக வரலாறும் தமிழர் பண்பாடும்**; பப. 277-282.

129. கே. கே. பிள்ளை; மு. கூ. நூ. ; ப. 389.
130. அ. கி. பரந்தாமனார்; **மதுரை நாயக்கர் வரலாறு**; பப. 99, 118, 201.
131. கே. எம். வேங்கடராமையா; **தஞ்சை மராட்டியர் கால அரசியலும் சமுதாய வாழ்க்கையும்**; ப. 185.
132. சக்கரம் என்பது தஞ்சை மராட்டியர் காலத்தில் இருந்த ஒரு வகைநாணயம். 32 காசு ஒரு பணம்; 10 பணம் ஒரு சக்கரம். எனவே ரூபாய் 3.20 காசு ஒரு சக்கரம் என்பர்.
133. கே. எம். வேங்கடராமையா; மு. கூ. நூ.; பப. 188-207.
134. N. Jagadeesan; loc.cit.; PP. 203-206.
135. கோ. க. அ. ரங்கராஜன்; முன்னுரை; **ஸ்ரீகாஞ்சி பிரதிவாதி பயங்கரம் அண்ணங்காராச்சாரிய சுவாமிகளும் வைணவமும்**; ப. 3.
136. வேடூரி ஆனந்தமூர்த்தி; **வைஷ்ணவாந்திர வாங்மயமு**; ப. 59.
137. ஆசார்ய கண்டவல்லி லக்ஷ்மி ரஞ்சனம்; ஸ்ரீகண்டபல்லி பாலேந்து சேகரம்; அந்துருவ சரித்ர - சமஸ்க்ருதி; ப. 90.
138. வேடூரி ஆனந்தமூர்த்தி; மு. கூ. நூ.; ப. 60.
139. B. S. L. Hanumantha Rao; Religion in Andhra; P. 240.
140. Ibid.; P. 240.
141. T. Venkatamuni; The Satavahanas - A Socio-Religious Study; PP. 68-69.

142. கம்பம் பாடி சத்திய நாராயண; **ஆந்த்ருல சம்ஸ்க்ருதி - சரித்ர**; ப. 138.
143 B. S. L. Hanumantha Rao; Op. cit.; PP. 247-248.
144. மல்லம்பள்ளி சோமசேகரசர்மா; **"வைஷ்ணவமு"; தெலுகு விக்ஞானசர்வஸ்வமு**; தொகுதி மூன்று; ப. 561.
145. திருமங்கையாழ்வார்; **பெரிய திருமொழி**; பா. எ. 7:4.
146. மேற்படி; பா. எ. 7:9.
147. B. S. L. Hanumantha Rao; Op. cit.; P. 248.
148. மல்லம்பல்லி சோமசேகர சர்மா; மு. கூ. நூ.; தொகுதி மூன்று; ப. 561.
149. B. S. L. Hanumantha Rao; Op. cit.; PP. 249-250.
150. Ibid.; PP. 250-253.
151. ஹலம் என்பது ஒரு ஜோடி எருதுகளின் உழவிற்குச் சரியாகும் நிலம்.
152. சி. வி. ராமச்சந்திர ராவு; பி. பாஸ்கர சௌத்ரி; **தெலுகு சரித்ர சமஸ்க்ருதி**; ப. 52.
153. மல்லம்பள்ளி சோம சேகர சர்மா; மு. கூ. நூ. ; தொகுதி மூன்று; ப. 561.
154. வேடூரி ஆனந்தமூர்த்தி; மு. கூ. நூ.; பப. 74-75.
155. எஸ். கிருஷ்ணசாமி ஐயங்கார்; **வெங்கடேச தேவஸ்தான வரலாறு**; டி. வி. எஸ். ராகவன் (மொ. பெ. ஆ.): முதற்பாகம்; பப. 124-136.
156. B. S. L. Hanumanatha Rao; Op. cit.; P. 255.
157. எஸ். கிருஷ்ணசாமி ஐயங்கார்; மு. கூ. நூ. ;

முதற்பாகம்; பப. 139-172.

158. B. S. L. Hanumantha Rao; Op. cit.; P. 256.

159. Ibid.; P. 257.

160. மல்லம்பள்ளி சோமசேகரசர்மா; மு. கூ. நூ.; ப. 645.

161. சிலகூரி வீரபத்திர ராவு; ஆந்த்ருல சரித்ரமு; ப. 209.

162. B. S. L. Hanumantha Rao; Op. cit.; P. 257.

163. சி.வி. ராமச்சந்திர ராவு; பி. பாஸ்கர சௌத்ரி; மு. கூ. நூ. ; ப. 94.

164. B. S. L. Hanumantha Rao; Op. cit.; P. 259.

165. கண்டவல்லிலக்ஷ்மிரஞ்சனம், கண்டவல்லி பாலேந்து சேகரம்; மு. கூ. நூ.; ப. 277.

166. K. Balendusekaram; **The Andhras through the ages**; P. 118.

167. N. Jagadeesan; **History of Sri Vaishnavism in Tamil Country**; P. 106.

168. K. Balendusekaram; Op. cit.; PP. 118-119.

169. வேடூரி ஆனந்தமூர்த்தி; மு. கூ. நூ.; ப. 146.

170. N. Jagadeesan; Op. cit.; PP. 70-82.

171. அ. கிருஷ்ணசாமி; மு. கூ. நூ. ; ப. 286.

172. கம்பம்பாடி சத்ய நாராயண; மு. கூ. நூ.; ப. 233.

173. து. சேதுபாண்டியன்; எஸ். ஜெயப்பிரகாஷ்; தெலுங்கு இலக்கியம் ஓர் அறிமுகம்; ப. 80.

174. மாரேமண்டராமா ராவு; ஆந்த்ர தேச சரித்ர; ப. 80.

175. கம்மபம்பாடி சத்ய நாராயண; ஆந்திர சம்ஸ்க்ருதி- சரித்ர; பகுதி இரண்டு; மு. கூ. நூ.; ப. 302.

176. சி. வி. ராமச்சந்திர ராவு; பி. பாஸ்கர ராவு;

மு. கூ. நூ.; ப. 177.
177. சி. நாராயண ரெட்டி; ஆதுநிகாந்திர கவித்வமு சம்பிதாயமுலு பிரயோகமுலு; ப. 463.
178. Vedam Venkataraya Sastry; "**The influence of Tamil on Kannada and Telugu**"; Proceedings of the fifth International Conference Seminar of Tamil Studies; Madurai; Vol. II; P. 8-69.
179. வேடூரி ஆனந்தமூர்த்தி; மு. கூ. நூ.; ப. 401.



## ②

# தெலுங்கு இலக்கியங்களில் ஆழ்வார்கள்

②

# 2.0 தெலுங்கு இலக்கியங்களில் ஆழ்வார்கள்

இந்த இயலில் தெலுங்கு வைணவ இலக்கியங்களின் முன்னோடிகளான கிருஷ்ணமாச்சாரியார், தாள்ளபாக்கம் கவிஞர்கள் ஆகியோரிடத்தில் ஆழ்வார்கள் செல்வாக்கு ஆழ்வார்களின் கதைகளும் அருளிச் செயல்களும் தெலுங்கில் உள்ளமை, அவர்களிடத்தில் தெலுங்கர் கொண்டுள்ள பக்தியும் பற்றும் ஆகியன விளக்கப்பெறுகின்றன. ஆழ்வார்களுக்கு உள்ள ஏற்றம்ஆச்சாரியர்களுக்கும் இருப்பதால் அவர்களுடன் ஆச்சாரியர்களின் கதைகள், அருளிச் செயல்கள்

தெலுங்கில் வந்துள்ளமையும் அவர்கள்மீது தெலுங்கர் கொண்ட பக்தியும் சுருக்கமாக இவ்வியலில் கூறப்பெறுகின்றன.

ஸ்ரீவைஷ்ணவம் தமிழ் நாட்டில் மட்டுமின்றி ஆந்திர நாட்டிலும் பரவியதால் தெலுங்கில் அதன் செல்வாக்கையும் அதன் விளைவாக எழுந்த நூல்களையும் காணலாம்.

**2.1.0 ஆழ்வார்கள் செல்வாக்கு:**

கன்னட நாட்டில் எழுந்த வீர சைவத்தின் செல்வாக்கால் தொடக்கத்தில் ஆந்திரத்தில் சைவ இலக்கியங்களே பால்குரிகி சோமநாதர் முதலான வீர சைவப் பெரியோரால் தோன்றின. அதன் பிறகே வைணவ இலக்கியங்கள் ஏறக்குறைய கி. பி. 1350-க்குப் பிறகு தெலுங்கில் தோன்றத் தொடங்கின. அவ்வாறு தோன்றிய வைணவ இலக்கியங்களிலும் தமிழ் வைணவ இலக்கியக் கருத்துகள் உள்ளன என்று சி. ஆர். சர்மா குறிப்பிடுவர்.[1]

இதைக்கொண்டு நோக்கும்போது தெலுங்கு வைணவ இலக்கியங்கள் குறிப்பாக ஸ்ரீவைஷ்ணவ இலக்கியங்கள் தோன்றுவதற்குத் தமிழ் வைணவ இலங்கியங்களும் ஆச்சாரியர்களின் மதக்கோட்பாட்டுக் கருத்துகளும் வழிகாட்டியாகவும் உந்துதலாகவும் அமைந்தன எனலாம்.

**2.1.1 கிருஷ்ணமாச்சாரியர்:**

தெலுங்கு வைணவ இலக்கியத்தின் தந்தை என்று போற்றப் பெறுபவர் இவர்.[2] இவர் இராமாநுசரின் சமகாலத்தவர் என ஆச்சார்ய சூக்திமுக்தாவளி கூறும். அதை மறுத்து அவர் காகதீய மன்னனான பிரதாபருத்திரன் (கி. பி. 1254 - 1323) காலத்தவர் என்றும் கி. பி. 13-ஆம் நூற்றாண்டின் இறுதியிலும் 14-ஆம் நூற்றாண்டின் தொடக்கத்திலும் வாழ்ந்தவர் என்றும் ஆருத்ரா[3]; எம். குலசேகரராவு[4] ஆகியோர் நிறுவியுள்ளனர்.

கிருஷ்ணமாச்சாரியர் "சந்தபூர்" (மஹபூப் நகர் மா.வ) என்று இன்று அழைக்கப் பெறும் சந்தூரில் தோன்றியவராவார். சிம்மகிரியில் உள்ள நரசிம்மப்பெருமான் அருளால் பாடும் ஆற்றல் பெற்று அவ்விறைவன்மீது நான்கு லட்சம் வசனங்கள் பாடி அவற்றைத் தாமிரத் தகடுகளில் பொறித்து வண்டியில் ஏற்றிக் கொண்டு திருவரங்கம் சென்று அரங்கனை வணங்கினார். அவற்றுள் இன்று சில வசனங்களே கிடைத்துள்ளன. அவற்றைத் தொகுத்து எம். குலசேகர ராவு என்பவர் **சிம்ஹகிரி வசனமுலு** என்னும் பெயரில் (1968-இல்) வெளியிட்டுள்ளார்.

அந்த வசனங்கள் பக்தியின் மேலீட்டால் தம்மை மறந்து உணர்ச்சி வசப்பட்டு இறைவனைப் போற்றி உரைப்பன. இவற்றில் சந்த ஒழுங்கு உள்ள உரைநடை அமைப்பு இடம் பெற்றிருக்கும். இவற்றைக்

கிருஷ்ணமாச்சாரியரின் **சங்கீத்தனங்கள்** என்றும் கிருஷ்ணமாச்சாரியரின் **பதங்கள்** என்றும் அழைப்பர். இவ்வசனங்கள் தெலுங்கில் தோன்றிய முதல் வசன நூலாகவும் சங்கீர்த்தன மாகவும் இருப்பதால் வசன இலக்கியத்தின்முதல் ஆசிரியர் என்றும் கிருஷ்ணமாச்சாரியரைப் போற்றுவர்.[5]

ஒவ்வொரு வசனத்தின் இறுதியிலும் சம்போதனையுடன்கூடிய மகுடம் இருக்கும்; வசனத்திற்கு வசனம் பொருள் வேறுபாட்டுடன் இருக்கும். இனிமையானபொருளுடன் பாடுவதாகவும், பக்தி சிறப்பாக அமைந்திருப்பதாகவும் இருக்கும். இவை வசனத்தின் இயல்புகளாகும்.

இவர்தம் வசனங்கள் சங்கீர்த்தனைகள் என்று அழைக்கப்பெறுவதால் அவை அன்று இராக தாளங்களுடன் பாடப்பட்டிருக்கவேண்டும்.

கிருஷ்ணமாச்சாரியர் வசனங்களை மட்டுமல்லாமல் **துளசி மஹாத்யமு, நரசிம்ம நாமமுலு, ராமநாமகீர்த்தனமு, ராமாநாமாலு** என்னும் சிறு நூல்களையும் கீர்த்தனை வடிவில் இயற்றியுள்ளதாக வேடூரி ஆனந்தமூர்த்தி கூறுவர்.[6] இவை துளசியின் பெருமையையும் நரசிம்மன், இராமன் இவர்களின் பெருமைகளையும் போற்றித் துதிப்பனவாகும்.

**2.1.1 கிருஷ்ணமாச்சாரியரும் ஆழ்வார்களும்:**

இராமாநுசர் ஸ்ரீரங்ககத்யம், சரணாகதிகத்யம், ஸ்ரீவைகுண்டகத்யம் என்னும் மூன்று கத்தியங்களை (வசனங்கள்போன்றது) வடமொழியில் இயற்றியுள்ளார். இவற்றைக்"கத்யதிரயம்" என்பர். இவை மக்களிடையே குறிப்பாக வைணவர்களிடையே சிறந்த வரவேற்பைப் பெற்றமையால் அவற்றின் செல்வாக்கு ஆந்திர நாட்டிலும் பரவியது. அதன் விளைவாகவே இச்சிம்மகிரி வசனங்கள் தோன்றின என்று எம். குலசேகரராவு அவர்கள் கூறுவர்.[7] எனவே இராமாநுசரின் கத்யதிரயம் சிம்மகிரி வசனங்களுக்கு வழிகாட்டியாக அமைந்தன எனக் கூறலாம்.

கிருஷ்ணமாச்சாரியரைத் தாள்ளபாக்கத் திருவேங்களநாதர்குறிப்பிடும்போது அவர்சடகோபரின் வேதத்தைத் தெலுங்கில் கொண்டு வந்ததாகக் கூறுவர்.[8] கிருஷ்ணமாச்சாரியரும் தம் வசனம் ஒன்றில் அகோபிலத்திலிருந்து வந்த பொதகமூர் பாகவதர்கள் தமக்குத் திருவாய் மொழியைப் படித்துக் காட்டினர் என்று குறிப்பிட்டுள்ளார்.[9] இவற்றை நோக்கும்போது கிருஷ்ணமாச்சாரியர்நம்மாழ்வாரின்திருவாய்மொழியைத் தெலுங்கில் உருவாக்கியிருக்கலாம் என்றும் கருதலாம்.

கிருஷ்ணமாச்சாரியர் ஆழ்வார்களிடத்தும் ஆச்சாரியர்களிடத்தும் மிகுந்த பக்தியும் பற்றும் கொண்டவர். இதை அவர்தம் வசனங்களில் காணலாம்.

இராமானுசரிடத்தும் அவர்தம் சித்தாந்தத்திலும் மிகுந்த பற்று கொண்டவர். ஸ்ரீவைஷ்ணவத்தை இராமானுசர் அருளிய வரம் என்று போற்றுவர். சில வசனங்கள், "**மா யதிராமானுஜமுனி வரமு, தாதாரு, சிம்ஹகிரி நரஹரி நமோ நமோ தயாநிதி**" என்ற மகுடத்தையும் பெற்று வருகின்றன.

> **"தேவா! ஸ்ரீராமானுஜ சித்தாந்தமுனகு**
> **தேவதாந்தரமே ஹானி"** [10]

> *(தேவா! ஸ்ரீராமானுச சித்தாந்தத்திற்கு*
> *மற்ற தெய்வ (வணக்கமே) தீங்கு)*

> **"தேவா! ஸ்ரீ ராமானுஜ சித்தாந்தமுனுபோலு**
> **மறி சித்தாந்தமு லேது"** [11]

> *(தேவா! ஸ்ரீராமானுசர் சித்தாந்தம் போன்ற*
> *வேறு சித்தாந்தம் இல்லை)*

என்னும் வசனத் தொடர்கள் இராமானுசரின் விசிட்டாத்வைத நெறியைப் போற்றுவனவாகும்.

வைஷ்ணவ சிகாமணி என்னும் சிறப்பைப் பெற்ற கிருஷ்ணமாச்சாரியரைக் காண அகோபிலம் இறைவன் மீது பக்தி கொண்ட பொதகமூர் பாகவதர்கள் அறுவர் (நாராயணய்ய, ஔபளய்ய, அச்சுதய்ய,

லக்ஷ்மய்ய, ஸ்ரீசென்னமய்ய) வந்தபோது அவர்களின் திருவுருவங்களைக் கண்ட அவர் அவர்கள் ஆழ்வார்கள் வடிவம் போன்று இருந்தனர் என்று கூறுவர்.[12] இதிலிருந்து அவர் ஆழ்வார்கள்மீது கொண்டிருந்த ஆழ்ந்த பக்தியையும் பற்றையும் அறியலாம். மேலும் ஆழ்வார்கள் திருமாலின் அபிநவதசாவதாரங்களாக (மற்றொரு பத் து பிறவிகளாக) விளங்குதல் போன்றே கிருஷ்மாச்சாரியரும் திருமாலின் பதினோராவது அவதாரமாகக் குறிப்பிடப்பெறுகிறார்.[13] ஆழ்வார்களின் அருளிச் செயல்கள் ஐந்தாவது வேதமாக விளங்குவது போன்றே தம் சங்கீர்த்தனைகளையும் ஐந்தாவது வேதம் என்று கொள்கிறார்.[14]

இவ்வாறாக ஆழ்வார்களுக்கு நிகராக விளங்கும் கிருஷ்ணமாச்சாரியரின் வசனங்களிலும் ஆழ்வார்களின் கடவுட்கொள்கையையும் அருளிச்செயல்களின் செல்வாக்கையும் காணலாம்.

> **"உயிர்கள் அனைத்தும் நீயாகி, ஏகமாகி,**
> **அனேகமாகி,**
> **ஆகாயமாகி, வெளியாகி, நிலையானதாகி,**
> **நிலையற்றதாகி,**
> **வியப்புறச் செய்தும், இந்திரஜாலம்**
> **மகேந்திரஜாலம்**
> **விந்தைகள் செய்தும், விலங்குகள்,**
> **மனிதர்கள், கிருமிகள்,**

பூச்சிகள், எறும்புகள் முதலிய உயிர்கள்
அனைத்தும் நீயாகியும்
உள்ள உன் ஏற்றத்தை அறியாத பிரமன்
சிவன் முதலானவர்களும்
பிரகலாதன், நாரதன், ...................
விபீடணன் முதலான
பாகவதர்களும் உன்னைப் போற்றி
உரைக்க முடியாது.........." [15]

என்னும் வசனம் இறைவனின் பரத்துவத்தை விளக்கும். இவ்வசனம்,

"நீயே உலகெல்லாம்; நின்னருளே
நிற்பனவும்
நீயே தவத்தேவ தேவனும்" [16]

"தேருங்கால் தேவன் ஒருவனே என்றுரைப்பார்
ஆரும் அறியார் அவன் பெருமை" [17]

என்ற திருமழிசையாழ்வாரின் கருத்தையும்,

"இவையும் அவையும் உவையும்
இவரும் அவரும் உவரும்
எவையும் எவரும்தன் னுளே
ஆகியும் ஆக்கியும் காக்கும்
அவையுள் தனிமுதல் எம்மான்" [18]

என்னும் நம்மாழ்வாரின் கருத்தையும் தழுவியிருத்தலைக் காணலாம்.

ஆழ்வார்கள் பாடிய திருப்பதிகளுள் முதன்மையானது திருவரங்கமாகும். பக்தி வளத்திற்குச் சிறந்த இப்பகுதியைப் பூலோக வைகுந்தம் என்பர். "தென்னாடும் வடநாடும் தொழநின்ற திருவரங்கம்"[19] என்று பெரியாழ்வார் போற்றுவர்.

"குலையெ டுத்த கதலிப் பொழிலூடும்
வந்துநீதிமுன்
அலையெ டுக்கும் புனற்கா விரிசூழ்தென்
னரங்கமே"[20]

என்று திருமங்கையாழ்வார் பாடுவர். இன்று பழமையும் சிறப்பையும் கொண்டதாக விளங்குவது திருமலை-திருப்பதியாகும். இதையும் ஆழ்வார்கள் பலவாறு போற்றியுள்ளனர். கிருஷ்ணமாச்சாரியரும் இவ்விரு திருப்பதிகளைக் குறித்தும் சிம்மகிரி நரசிம்மனைப் போற்றும் வகையில் போற்றுவர்.

"தேவா! இந்த உலகத்தின்
சேஷாசலத்தில் வேங்கடவன் எனப்
பெயர் பெற்றாய்; ...................... தேவா!

பூலோகத்தின் வைகுண்டம் என்னும்
இருகாவேரி நடுவிலும் விபீடணின்
வரதனாகி ஸ்ரீரங்கசாயி ஆனாய்" [21]

என்பது அவ்வசனம். இத்தகைய வசனங்கள் சில ஆங்காங்குக் காணப்படுகின்றன.

பக்தித் திறமும் இறைஞானமுமே சாதியைக் காட்டிலும் சிறந்ததென்பது ஆழ்வார்களின் தலையாய கொள்கையாகும். பல சாதியினர் ஆயினும் திருமால் அடியவர்களாயின் அனைவரும் ஒரே குலத்தவர் என்று போற்றுவர் ஆழ்வார்கள். இக்கொள்கையைக் கிருஷ்ணமாச்சாரியரிடத்தும் காணலாம்.

"அமரஓர் அங்கம் ஆறும்
வேதம் ஓர் நான்கும் ஓதித்
தமர்களில் தலைவர் ஆய
சாதிஅந் தணர்க ளேனும்
நுமர்களைப் பழிப்ப ராகில்
நொடிப்பதோர் அளவில் ஆங்கே
அவர்கள்தாம் புலையர் போலும்
அரங்கமா நகரு ளானே" [22]

"பழுதிலா ஒழுக லாற்றுப்
பலசதுப் பேதி மார்கள்

இழிகுலத் தவர்க ளேனும்
எம்மடி யார்க ளாகில்
தொழுமினீர் கொடுமின் கொள்மின்" 23

என்றும் தொண்டரடிப்பொடியாழ்வார் பாடல்களின் வெளிப்பாடாகக் கிருஷ்ணமாசசாரியரின் வசனமும் அமைந்துள்ளது.

"தேவா! விஷ்ணுபக்தி இல்லாத கற்றவரைவிட
அரிகீர்த்தனை
செய்பவரே உயர்ந்த குலத்தோர்,
புலையனானாலும் என்ன ?
எந்த வருணத்தைச் சார்ந்தவனானாலும் என்ன?
அந்தணனைவிட
அவனே உயர்ந்த குலத்தோன்.......................
சிம்மகிரியை எண்ணிய அவனே
சிறந்த குலத்தோன். சந்தியா
முதலிய அன்றாட
கர்மானுஷ்டானங்களைத் தவறாமல்
செய்வதால் என்ன? சதுர்வேதம்
ஆறு சாத்திரங்கள் படித்தாலும்
என்ன? எம் சிம்மகிரி
நரஹரிதாசர்களுக்குத் தாசர்கள்
ஆனால் தவிர இல்லை
(அவர்களுக்குப்) புகலிடம்........" 24

மேலும் அவர் "ஸ்ரீவைஷ்ணவர்களே அந்தணர்கள், ஸ்ரீவைஷ்ணவர்களே பரம சாதகர்கள், ஸ்ரீவைஷ்ணவர்களே சோபிதசுபதாயர்கள்(நற்பயன்பெற்றோர்)உங்கள்குலகோத்திரம் என்னஎன்பது எதற்கு?" [25] என்றும் கூறுவர்.

திருமால் தவிரப் பிற தெய்வம் இல்லை என்பது ஆழ்வார்கள் வாக்கு. இதை,

**"மற்றுமோர் தெய்வம் உண்டோ**

**..........................................**

***அவனல்லால் தெய்வம் இல்லை"*** [26]

என்று தொண்டரடிப்பொடியாழ்வாரும்,

"தேருங்கால் தேவன் ஒருவனே
என்றுரைப்பர்
ஆரும் அறியார் அவன்பெருமை" [27]

என்று திருமழிசையாழ்வாரும் கூறுவர். அவ்வாறே கிருஷ்ணமாச்சாரியரும், திருமாலின் அவதாரமாக விளங்கும்,

**"அநாதபதி சுவாமி நரஹரி போன்ற வேறு தெய்வம் இல்லை"** [28]

என்று கூறுவர்.

திருமால் தொண்டர்களுக்குத் தொண்டராக விளங்கவேண்டும் என்பதைக் குலசேகராழ்வார்,

"ஆடிப்பாடி அரங்கவோ என்று
அழைக்கும்தொண்ட ரடிப்பொடி
ஆடநாம்பெறில் கங்கைநீர்குடைந்து
ஆடும்வேட்கையென்னாவதே" [29]

என்று பாடுவர். "நாராயணா என்றழைத்து மெய்தழும்பத் தொழுது ஏத்தி இன்புறும் தொண்டர்சேவடி ஏத்தி வாழும் என் நெஞ்சமே"[30] என்றும் அவர் கூறுவர். நம்மாழ்வாரும்,

"குலந்தாங்கு சாதிகள் நாலிலும்
கீழிழிந்து எத்தனை
நலந்தான் இலாதசண்டாளசண்
டாளர்கள் ஆகிலும்
வலந்தாங்கு சக்கரத் தண்ணல்
மணிவண்ணற்கு ஆளென்றுஉள்
கலந்தார், அடியார் தம்அடி
யார்எம் அடிகளே" [31]

என்று கூறுவர். அவ்வாறே கிருஷ்ணமாச்சாரியரும்,

> ***"பலகல்வி கற்றவனாகச் செய்து பல உருவங்களை உள்ளவனாகச் செய்யாதே! எந்த வருணமானாலும் என்ன? உன் திவ்விய நாமப் பெருமையை அறியச் செய்து உன் தாசனுக்குத் தாசனாகச் செய்வாயாக. கருணாம்பூதி, ஸ்ரீகிருஷ்ண குவ்வாருசுவாமி, சிம்மகிரி நரஹரி, நமோநமோ தயாநிதி!"[32]***

என்று இறைவனிடம் வேண்டுவர். இங்கு ஆழ்வார்கள் போன்றே கிருஷ்ணமாச்சாரியரும் திருமாலடியார்க்கு அடியாராய் இருக்கவேண்டும் என்று விரும்புதலைக் காணலாம்.

நம்மாழ்வார் திருமாலின் சிறப்பைக் கூறுமிடத்தில் "கேட்பவர்கள் கேசவன் கீர்த்தியன்றிப் பிற தெய்வக்கீர்த்தியைக் கேட்கமாட்டார்கள். ஒருவேளை அவர்கள் பிற தெய்வக்கீர்த்தியைக் கேட்டால் அவை செவியைச்சுடும் கீழ்மையான வசவுகளாகவே இருக்கும்"[33] என்று கூறுவர். கிருஷ்ணமாச்சாரியர் "திருமாலைப் போற்றும்அரிகீர்த்தனைவெறுக்கத்தக்கது என்றுஎண்ணிப் பிற தெயவக் கீர்த்தனைகளைக் கேட்ட மனிதன் மறுபிறவியில் செவிடனாகப் பிறப்பான்" [34] என்று வன்மையாகவே கூறுகிறார்.

ஆழ்வார்கள் திருமால் அவதாரங்களுள் கண்ணன் இராமன் அவதாரங்களையே மிகுந்த பற்றுகொண்டு அனுபவித்தவர்கள். பிற்காலத்தில் கண்ணன் இராமன் பக்தி சிறப்புற்று விளங்க இவர்களும் ஒருவகையில் உந்துதல்களாக இருந்தவர்கள். கண்ணன் சிறப்புகளையும் கதைகளையும்தன்சங்கீர்த்தனைகளில் குறிப்பிட்டிருந்தாலும் ராமநாமத்தையே இவர்போற்றி சங்கீர்த்தனைகள் பாடியுள்ளார். அக்காலத்தில் இராமபக்தி சிறந்து வளர்ந்திருந்ததையே இது காட்டுகிறது.

"திவ்விய மந்திரம் ராமநாமம்
புண்ணிய மந்திரம் ராமநாமம்
முக்தியருள் ராமநாமம்
பக்தியருள் ராமநாமம்" 35

என்று ராமநாமத்தின் பெருமையை கிருஷ்ணமாச்சாரியர் பாடுவர்.

இவ்வாறாக "வாய் அவனை அல்லது வாழ்த்தாது,கை உலகம் தாயவனை அல்லது தாம்தொழா பேய்முலை நஞ்சு ஊணாக உண்டான் உருவொடு பேரல்லால் காணாகண் கேளா செவி" 36 என்னும் கொள்கையுடன் விளங்கிய ஆழ்வார்கள் போன்று கிருஷ்ணமாச்சாரியரும் விளங்கியதால் ஆந்திர நாட்டில் தோன்றிய முதல் தெலுங்கு ஆழ்வார் என்று கூறலாம். ஆழ்வார்களின் பாடல்களுக்கு இறைவன் மகிழ்ந்தது போன்றே

கிருஷ்ணமாச்சாரியரின் சங்கீர்த்தனங்களுக்கும் சிம்மகிரி இறைவன் மகிழ்ந்தான். அவர் பாடும்போது சிறுவனாக வந்து அவர்தம் மடியில் அமர்ந்து கேட்டு இன்புற்றதாக அவர்தம் வசனம் ஒன்று குறிப்பிடுகின்றது.[37]

கிருஷ்ணமாச்சாரியருக்குப் பிறகு வந்தவர்கள் அவரைப் பின்பற்றியே வெங்கடேஸ்வர வசனமுலு, சடகோப விண்ணப்பமுலு முதலியவற்றை இயற்றியுள்ளனர். செய்யுள் வசனம் என்னும் இரண்டையும் கொண்ட சம்பு காவிய ஆசிரியர்களும் இவர் வசனத்தின் தாக்கம் பெற்றவர்களோயாவர். தெலுங்கில் பாகவதத்தை இயற்றிய போதனாவின் காப்பியத்திலும் கிருஷ்ணமாச்சாரியரின் வசனம் போன்ற வசனங்கள் உள்ளதாக எம். குலசேகரராவு கூறுவர்.[38]

கிருஷ்ணமாச்சாரியருக்குப் பிறகு அவரைப் பின்பற்றி இராகதாளங்களுடன்கூடிய சங்கீர்த்தனங்களைப் பாடி மிகுந்த செல்வாக்கைப் பெற்றவர்கள் தாள்ளபாக்கம் கவிஞர்களாவார்.

### 2.1.2 தாள்ளபாக்கம் கவிஞர்கள்

15, 16-ஆம் நூற்றாண்டுகளின் இடையில் வாழ்ந்த தாள்ளபாக்கம் கவிஞர்கள் வைணவ இலக்கியங்கள் இயற்றி ஆந்திரநாட்டில் வைணவத்திற்கும் வைணவ இலக்கிய வளத்திற்கும்

சிறந்த தொண்டாற்றினர். வைணவத்திற்கு ஆற்றிய இவர்களின் பங்கு மிகப் பெரியது. இவர்கள் எந்த அரசவைக்கும் செல்லாமல் கோயில்களிலேயே இருந்து இசையுடன்கூடிய பக்திப் பாடல்களைப் பாடினர். [39] அண்ணமாச்சாரியர் (கி. பி. 1424 - 1503), திம்மக்கா (அண்ணமாச்சாரியரின் மனைவி), பெத்ததிருமலாச்சாரியர்(1458- 1554), சின்னதிருமலய்யா (1488-1562), சின்னதிருவெங்களநாதர் (1500-1550), திருவெங்கலப்பா (1515-1565) முதலானோர் குறிப்பிடத்தக்க தாள்ளபாக்கம் கவிஞர்களாவர். இவர்களுள் முதலாமராகவும் தாள்ளபாக் மரபை தோற்றுவித்தவராகவும் விளங்குபவர் அன்னமாச்சாரியராவார். "இந்து சமயம் மெலிந்து கொண்டிருந்த அந்த நாளில்தான் (முகமதியர்களின் படையெடுப்பும் கோவில் கொள்ளையும் நிலவிய காலம்) மீண்டும் ஒரு பக்தி இயக்கம் இந்திய மண்ணில் உருவாகித் தென்னகத்தே மலர்ந்தது. அம்மலர்ச்சி தமிழகத்தே வேதாந்த தேசிகர், பிள்ளைலோகாச்சாரியர் என்பார் மூலம் கமழத்துவங்கியது. கன்னட தேசத்தில் வியாசராயர்,புரந்தரதாசர் முதலியோராய் முகிழ்ந்தது; தெலுங்குநாட்டில் அன்னமய்யாவாக அவதரித்தது" [40] என்று கூறுவர். எனவே ஆந்திர நாட்டில் எழுந்த வைணவ மறுமலர்ச்சிக்கு மூலகாரணமானவர் அன்னமாச்சாரியர் எனலாம்.

தமிழில் வேத வேதாந்தங்களின் சாரத்தைப்

பராங்குசர் (நம்மாழ்வார்) முதலான ஆழ்வார்கள் தமிழ்ப்படுத்தித் தமிழ் வேதச்சக்ரவர்த்திகளாக விளங்கத் தெலுங்கிலும் கிருஷ்ணமாச்சாரியர், அன்னமாச்சாரியர், பெத்ததிருமலாச்சாரியர் மூவரும் வேதத்தைத் தெலுங்குபடுத்திய காரணத்தால் **ஆந்திர வேதாந்த ஆசிரியர்கள் என்றும் பஞ்ச மாகமச் சக்கரவர்த்திகள்** என்றும் பெயர் பெற்றனர். [41]

தாள்ளபாக்கம் கவிஞர்களுள் அன்னமாச்சாரியர், பெத்ததிருமலாச்சாரியர், சின்னதிருமலாச்சாரியர் என்னும் மூவரும் வாய்ப் பாடகர்கள். மற்ற மூவரும் இசையறிவு பெற்றவர்கள். இவர்கள் அனைவரும் கலந்தே தம் சங்கீர்த்தனைகளை நாட்டின் பல பகுதிகளில் பரப்பினர்.

அவர்கள் வைணவத்தைப் பரப்புவதற்காகக் கடப்பா, கர்னூல், பள்ளாரி, அனந்தபுரம், சித்தூர், நெல்லூர், குண்டூர் முதலிய ஆந்திர மாவட்டங்களுக்கும் தமிழ்நாட்டில் உள்ள செங்கல்பட்டு, ஆற்காடு, தஞ்சாவூர், திருச்சிராப்பள்ளி முதலிய பகுதிகளுக்கும் சென்றுள்ளனர். [42]

அவர்களுக்குச் சாளுவ நரசிம்மராயர் முதலான விஜயநகர அரசர்கள் ஆதரவும் இருந்தது; அவர்கள் தாள்ளபாக்கர்களுக்குப் பல அக்கிரகாரங்கள் (அந்தணர் வாழும் பகுதி) தந்துள்ளனர். அவற்றை அந்தந்த இடங்களிலுள்ள கோயில் வழிபாடுகளுக்காக விட்டுக்

கொடுத்தனர்.[43]

அவர்கள் தம் சங்கீர்த்தனங்களைச் செப்புத்தகடுகளிலும் பனையோலைகளிலும் எழுதிப்பாதுகாத்தனர். தஞ்சாவூர் பகுதிகளிலும் அவர்கள் கீர்த்தனங்களும் நூல்களும் நிலைத்து நின்றன. தென்னாட்டு ஆந்திர மன்னர்களுக்கு இருந்த பற்றே அவற்றைக் காப்பாற்றின என்று வேடூரி ஆனந்தமூர்த்தி கூறுவர்.[44]

அன்னமாச்சாரியர் ஒருவரே 32,000 கீர்த்தனங்கள் இயற்றியுள்ளார். அவற்றுள் இன்று 14,358 கீர்த்தனங்கள் கிடைத்துள்ளன. மற்ற இருவரும் பாடிய கீர்த்தனங்களுள் இன்று பெத்ததிருமலாச்சாரியரின் 1,062-உம் சின்னதிருமலாச்சாரியரின் 120-உம் கிடைத்துள்ளன.[45] அவற்றைத் தொகுத்து திருமலை-திருப்பதி தேவத்தானத்தினர் பல தொகுதிகளாக வெளியிட்டுள்ளனர். இவர்கள் கீர்த்தனைகளை மட்டுமல்லாமல் வேறு சில வைணவ நூல்களையும் இயற்றியுள்ளனர்.[46]

இவர்கள் பாடிய கீர்த்தனங்களைப் பொருள் அடிப்படையில் அத்யாத்மக சங்கீர்த்தனங்கள் (தத்துவச் சங்கீர்த்தனங்கள்) என்றும் சிருங்கார சங்கீர்த்தனங்கள் (அகப்பொருள் சார்புடைய சங்கீர்த்தனங்கள்) என்றும் வகைப்படுத்தியுள்ளனர். தாள்ளபாக்கர்களின்

அகத்திணைச் சங்கீர்த்தனங்களில் திருவேங்கடவனே தலைவன் அலர்மேல்மங்கையே தலைவி திருமகள், பூமகள், நீளா ஆகியோர் தோழியர்கள். சில பாடல்களில் கவியே தலைவியாகவும் பிரிவால் வருந்துபவராகவும் இருப்பார்.

**2.1.2.1 ஆழ்வார்கள் - அன்னமாச்சாரியர் முதலானோர்**

முன்னர்க் குறிப்பிட்டது போன்றே தாள்ளபாக்கக் கவிஞர்களான அன்னமாச்சாரியரும் பெத்ததிருமலாச்சாரியரும் ஆழ்வார்கள் ஐந்தாவது வேதச் சக்கரவர்த்திகளாக விளங்கியது போன்று விளங்கியவர்களாவர். மேலும்அவர்கள்ஆழ்வார்களையும் அவர்தம் அருளிச் செயல்களையும் அறிந்தவர்கள். இதுகுறித்து ஆருத்ரா கூறியது இங்குக் குறிப்பிடத்தக்கது.

“வைணவத்தை அன்னமய்யா பதகவிதைகளாக உருவாக்கினார். விசிட்டாத்வைதத்தை ஏற்றுக் கொண்டதனாலேயே அவர் இந்தச் சாகசத்தைச் செய்தார். தமிழ் வேதாந்தத்துடன் - தமிழ்ப் பாடல்களுடன் நேரடியான தொடர்புடைய விசிட்டாத்வைதத்தை ஏற்று அன்னமய்யா அந்த மொழியில் உள்ள மதுரபக்தியையெல்லாம் அனுபவித்து அத்தகைய பாடல்களைத் தெலுங்கில் செய்தார்.” [47]

எனவே, ஆழ்வார்கள் அன்னமய்யா முதலானோர் இசைப்பாடகர்களுக்கு வழிகாட்டியாக விளங்கியவர்கள் என்றால் அதில் மிகையில்லை. ஆழ்வார்களுக்கும் அன்னமாச்சாரியர் முதலானோர்களுக்கும் அவரவர்களின் படைப்புகளுக்கும் இடையே ஒற்றுமைகள் பல உள்ளன. இவற்றைக் குறித்து ஸ்ரீபிரபாகசாஸ்திரி அவர்கள் இவ்வாறு கூறுவர்.[48]

"தமிழ் வேதப்படைப்புக்கு நம்மாழவார் தோன்றியது போன்றே ஆந்திர வேதப்படைப்புக்கு அன்னமாச்சாரியர் தோன்றினார்."

"நம்மாழ்வார் வைகாசி மாதம் விசாக நட்சத்திரத்தில் தோன்ற அன்னமாச்சாரியரும் வைகாசி மாதம் விசாக நட்சத்திரத்தில் தோன்றினார். நம்மாழ்வார் 16 வயதில் அனைத்து கலைகளையும் கற்றுத் தமிழ்ப் பாடல்களை இயற்றும் இறையருள் பெற அன்னமாச்சாரியரும் அவ்வாறே 16 வயதில், இறைவன் தோன்றி அருள சங்கீர்த்தனங்களைப் பாடினார். நம்மாழ்வார் திருவேங்கடவன்மீதும் பல திருத்தலமூர்த்திகள் மீதும் பாடல்களைப்பாட அன்னமாச்சாரியரும் சிறப்பாக (அதிகமாக) திருவேங்கடவன்மீதும் வேறு திருப்பதிகளில் உள்ளமூர்த்திகள் மீதும் பாடல்களைப் பாடினார். நம்மாழ்வார் இறைவனின் கௌஸ்துபத்தின்[49] அம்சமாகப் பிறந்ததாக அறிஞர்கள் கூறுவதுபோன்று அன்னமாச்சாரியரும் இறைவனின் நந்தகத்தின் (கத்தி) அம்சமாகப் பிறந்ததாக அறிஞர்கள் கூறுவர்."

"பெரியாழ்வார் துளசிவனத்தில் கிடைத்த ஆண்டாளைத் திருவரங்கனுக்குக் கொடுத்து மாமனார் ஆனார். அன்னமாச்சாரியரும் தாமரைக்குளத்தில் கிடைத்த மங்காம்பிகையைத் திருவேங்கடவனுக்குக் கொடுத்து மாமனார் ஆனார்."

"பன்னிரு ஆழ்வார்கள் பாடிய பாசுரங்கள் 4000, அன்னமாச்சாரியர் ஒருவரே பாடிய கீர்த்தனங்கள் 32000. ஆழ்வார்களின் பாடல்களைத் தழுவியே பத்னிபாவம், நாயகன் நாயகி பாவம் ஆகியவற்றை இறைவனுக்கும் உயிர்களுக்கும் கற்பித்தும் பல திருக்கோயில்களிலும் உள்ள திருமூர்த்திகளை வருணித்தும் சரணாகதி நெறியைப் புகட்டியும் இன்னும் பலவற்றையும் கூறுவனவாகவும் ஆந்திர வேதம் உள்ளது."

அன்னமாச்சாரியர் பாடல்களையும் ஆழ்வார்கள் பாடல்களையும் ஒப்பிட்டுத் தெலுங்கில் ஓர் ஆய்வேட்டை வெளியிட்ட ஜே. முனிரத்தினம் என்பவர் இரு மொழியினருக்கும் உள்ள மேலும் சில ஒற்றுமைகளைக் கூறுவர்.

பெத்த திருமலாச்சாரியரும் திருமங்கையாழ்வார் போன்று தாம் பெற்ற செல்வமனைத்தையும் திருமால் தொண்டிற்காக செலவிட்டார். ஆழ்வார் பாடல்கள் நாலாயிரத்தில் நம்மாழ்வார் பாடல்களே எண்ணிக்கையில் அதிகம், அடுத்து திருமங்கையாழ்வார்

பாடல்கள் எண்ணிக்கையில் அதிகமாக உள்ளன. அவ்வாறே தாள்ளபாக்கர்களின் சங்கீர்த்தனங்களிலும் அன்னமாச்சாரியரின் சங்கீர்த்தனங்களே எண்ணிக்கையில் அதிகமாகும். அடுத்து பெத்ததிருமலாச்சாரியரின் சங்கீர்த்தனங்கள் அதிகமாகவுள்ளன.[50]

இவ்வாறாகத் தாள்ளபாக்கர்களின் வரலாறுகள் ஆழ்வார்கள் சிலருடன் ஒத்திருத்தலைக் காணலாம். தாள்ளபாக்கர்களின் சங்கீர்த்தனங்கள் சிலவும் ஆழ்வார்களின் அருளிச் செயல்களின் சாயலைக் கொண்டுள்ளன: சில அவர்கள் நெறியைப் பின்பற்றிச் செல்கின்றன.

தம் முன்னோர்களான ஆழ்வார்களைத் தாள்ளபாக்கர்கள்,

"வாடே வேங்கடேசுடு அனேவாடே வீடு"[51]

என்னும் கீர்த்தனையில் போற்றுவர்

"திரலி வேடுகதோ திருமங்கயாளுவாரி
ஆரடிமுச்சி மிகூடிகி ஆசபட்டவாடு
...... ............ ..........
பெரியாளுவாரி பிட்ட பிஸிகி பைவேசின
விருலதண்டெல மெட வேசினவாடு"

(தீராத ஆசையுடன் திருமங்கையாழ்வாரின்
நிந்தை கொண்ட கள்ள உணவுக்கு ஆசை
கொண்டவன்
பெரியாழ்வாரின் பெண்பிள்ளை
களைந்துமேலிட்ட
மலர் மாலைகளைக் கழுத்தில் அணிந்தவன்)

என்னும் கீர்த்தனை வரிகளில் திருமங்கையாழ்வாரையும் ஆண்டாளையும் சுட்டியிருத்தலைக் காணலாம்.

தாள்ளபாக்கர்களின் கீர்த்தனைகள் பல தமிழ்ப் பாசுரங்கள் போன்றே உள்ளன. அவற்றைப் பின்வருமாறு ஒப்பிட்டுக் கூறலாம்.

திருப்பதிகள் பலவற்றைப் பாடிய ஆழ்வார்கள்[52] திருமலை திருவேங்கடவனையும் 213 பாசுரங்களில் பலவாறு போற்றிப் பாடியுள்ளனர். அவ்வாறே தாள்ளபாக்கர்களும் திருவேங்கடவன் சிறப்பையும் திருமலையின் சிறப்பையும் போற்றிப் பாடியவர்களாவர்; திருவேங்கடவனுக்கு "ஒழிவில் காலமெல்லாம் உடனாய் மன்னி வழுவிலா அடிமை செய்ய வேண்டும் நாம்" என்ற நம்மாழ்வாரின் வாக்கிற்கு இணங்க அவர்கள் திருவேங்கடவன் தொண்டில் ஈடுபட்டுப் பாடியவர்களாவர்.

திருமலையின் சிறப்பைக் கூறுமிடத்தில்,

.................................... பரன்
சென்று சேர்திரு வேங்கட மாமலை
ஒன்று மேதொழ நம்வினை ஓயுமே" [53]

என்று நம்மாழ்வாரும்,

"வினைச்சுடரை நந்துவிக்கும்
வேங்கடமே வானோர்
மனச்சுடரைத் தூண்டும் மலை" [54]

என்று பேயாழ்வாரும்,

"................ தண்ணருவி வேங்கடமே
வானோர்க்கும் மண்ணோர்க்கும் வைப்பு" [55]

என்றுதிருமழிசையாழ்வாரும்பாடுவர். தாள்ளபாக்கர்களும், அவ்வாறே திருமலையைக் குறித்து,

"கட்டெதுர வைகுண்டமு காணா சய்நகொண்ட
தெட்டலாய மஹிமலே திருமலகொண்ட
வேதமுலே ஷிலலை வெலஷினதி கொண்ட
ஏதேச புண்யராஸுலே ஏருலைனதி கொண்ட
காதிலி பிரம்மாதி லோகமுல கோணலகொண்ட
ஸ்ரீதேவுடு உண்டேடி சேஷாத்ரி கொண்ட" [56]

(கண்ணெதிரில் வைகுண்டமாய் நிலைபெற்ற
மலை
நிறைந்த பெருமைகள் கொண்ட திருமலை
மறைகளே கற்களாகி அமைந்த மலை
அனைத்துதிசை புண்ணியங்களும் ஆறுகளான
மலை
பிரமன் முதலானோர் உலகங்களே
காடுகள்ஆன மலை
திருமால் இருக்கும் சேஷாத்ரி மலை)

என்று பாடுவர். திருவேங்கடவன் அருந்திறத்தைப் பாடுமிடத்தில் குலசேகராழ்வார், "செடியாய் வல்லினைகள் தீர்க்கும் பெருமாள்; நெடியோன் வேங்கடவன்" [57] என்று போற்றுவர். "எங்கும் வானவர் தானவர் நிறைந்தேத்தும் வேங்கடம்மேவி நின்றருள் அங்கண் நாயகன்" [58] என்றும் தாமரையோனும் ஈசனும் அமரர்கோனும் நின்றேத்தும் திருவேங்கடத்து ஆடுகூத்தன் [59] என்றும் திருமங்கையாழ்வார் போற்றுவர். அத்தகைய திருவேங்கடவனிடத்து, "எந்தாய்! இனியான் உன்னை என்றும் விடேன்" [60] என்று வேண்டுவர். நம்மாழ்வார் "வேதியர் முழுவேதாந்தமுதம் என்று அவனைக்கூறி சோதியாகி எல்லா உலகும் தொழும் ஆதிமூர்த்தி என்றால் அளவாகுமோ" என்று கேட்பார். [61]

தாள்ளபாக்கர்களும்,

“வாடே வெங்கடாத்ரி மீதி வரதைவமு
பொடிமிதோ பொடரூபே பொடவைன தேஹமு
............ ................ ......................
பக்கனனு தனலோனி பதுநாலுகு லோகாலு
தொக்கி பாதானகொலிசே தொட்ட தைவமு”[62]

(அவனே வேங்கடமலை மீதிருக்கும் வரமருள்
தெய்வம்
ஓங்கிய உருக்கொண்ட நீண்ட மேனியன்
புறத்திலும் தன்னுள்ளும் இருக்கும்
பதினான்கு
உலகங்களையும் மிதித்து பாதத்தால் அளக்கும்
சிறந்த தெய்வம்)

“வேரொக்கரு லேரு விஸ்வமந்தா நீ மஹிமே
ஏர்திநீவே கலவு இதரமு லேது
ஸ்ரீவேங்கடேஸ நீவே சித்தமுலோன உண்டி
ஈவல வைகுண்ட மித்து விந்தா நீமஹிமயே” 63

(வேறொருவர் இல்லை, உலகமெல்லாம் உன்
மகிமையே, எங்கும் நீயே உள்ளாய்
(நீ இல்லாத) மற்றவை இல்லை,
திருவேங்கடவா! நீயே மனத்தில் இருந்து
இப்பக்கம் வைகுண்டம் கொடுக்கும் விந்தை
உன் மகிமையே)

என்றும்

"சேரி கொல்வரோ இதடு ஸ்ரீதேவுடு
ஈரீதி ஸ்ரீவேங்கடாத்ரி இரவைனதேவுடு" [64]

(சேர்ந்து வணங்கடா இவன் ஸ்ரீதேவன்
இவ்வாறு திருவேங்கடத்தில் நின்ற தேவன்)

என்றும் திருவேங்கடவனையும் அவன் அருள் திறத்தையும் பாடுவர். "**இவியே கொல்லிடிவாரு யென்சி நடசின சாந்தி**"[65] என்ற கீர்த்தனையில் மனச்சுமையை திருவேங்கடவன் மீது வைத்தால் அமைதி கிடைக்கும் (பாரமுனு ஸ்ரீவேங்கடேசுனி பை பெட்டிதே சாந்தி), என்று கூறுவர்; உறுதியாகத் திருவேங்கடவன் கைங்கரியமே செய்து பிற செயல்கள் செய்யாதிருத்தலே தகுந்த உண்மையான பக்தி என்றும் கூறுவர்.[66]

இறைவனைத் தவிர மனிதரை ஆழ்வார்கள் பாடமாட்டார்கள். இது குறித்து நம்மாழ்வார்,

"என்னாவில் இன்கவி யானொரு வர்க்கும்
கொடுக்கிலேன்
தென்னா தெனாவென்று வண்டு முரல்திரு
வேங்கடத்து

**என்னானை என்னப்பன் எம்பெரு மான்உள**
**னாகவே"** 67

என்றும் தன்னை "வாய்கொண்டு மானிடம் பாடவந்த கவியேன் அல்லேன்"[68] என்றும் கூறுவர். திருமழிசையாழ்வாரும் "நாக்கொண்டு மானிடம் பாடேன்"[69] என்றும் "மாமேனி மாயவனை அல்லாதொன்று ஏத்தாது என் நா"[70] என்றும் கூறுவர். அவ்வாறே அன்னமாச்சாரியரும்,

**"நரஹரி கீர்த்ன நாநினஜிஹ்வ**
**பருல நுதிம்பக ஓபதுஜிஹ்வ"** 71

*(நரஹரி கீர்த்தனை ஊறிய வாய்,*
*பிறரைப் போற்ற விரும்பாத வாய்)*

என்று கூறுவர். மேலும்,

**"ஹரி புட்டின்சினதேஹி ஹரினே கொலுவக**
**நருல கொல்சுட அந்நியாயமய்யா"** 72

*(திருமால் பிறப்பித்த மனிதன் திருமாலை*
*வணங்காமல், பிற மனிதரை வணங்குதல் அநீதி*
*ஐயா!)*

என்றும் கூறுவர். டங்குடூரு மன்னன் நரசிங்கராயரைப் பாடாததால் அன்னமாச்சாரியர் சிறையில் அடைக்கப்பட்டதையும் அவர் வரலாற்றில் அறியலாம்.[73]

இவ்வாறாக ஆழ்வார்கள் போன்றே தாள்ளபாக்கர்களும் மனிதனைப் பாடுவதை விட்டு இறைவனையே பாடினர்.

"கொன்சமுனு கனமுகனு கொனனேல
ஹரிதலன்சு
பஞ்ச மஹா பாதகுடைன ப்ராம்ஹோத்தமுடு
பரமமகு வேதாந்த படன தொரிகியு ஸதா
ஹரி தலசலேனி சன்யாசிகண்டே
மரிகி பஸுரமு தினெடி மாலயைனனு வாடே
பரமாத்மு கொலிசினனு ப்ராம்ஹோத்தமுடு"[74]

(சிறிதாவது பெரிதாவது தொழுதால் திருமாலை
நினைக்கும்
பஞ்சமகாபாதகன் (சண்டாளன்) ஆனாலும்
உயர்ந்த அந்தணன் ஆவான்.
புனிதமான வேதாந்தம் பயின்றும் என்றும்
திருமாலை நினைக்காத துறவியைவிட இழிந்த
மாட்டிறைச்சி உண்ணும் புலையனானாலும்
அவனே
இறைவனைத் தொழுதால் உயர்ந்த அந்தணன்)

என்று தாள்ளபாக்கர் பாடுவர். அவர்கள்,

"குலந்தாங்கு சாதிகள் நாலிலும் கீழிழிந்து எத்தனை
நலந்தான் இலாத சண்டாளசண் டாளர்க ளாகிலும்
வலந்தாங்கு சக்கரத் தண்ணல் மணிவண்ணற்
காள்என்றுஉள்
கலந்தார், அடியார்தம்அடி யார்எம் அடிகளே" 75

என்ற நம்மாழ்வாரின் பாடலையும்,

"அமரவோ ரங்கம் ஆறும்
வேதமோர் நான்கும் ஓதித்
தமர்களில் தலைவர் ஆய
சாதியந் தணர்க ளேனும்
நுமர்களைப் பழிப்ப ராகில்
நொடிப்பதோர் அளவில் ஆங்கே
அவர்கள்தாம் புலையர் போலும்
அரங்கமா நகரு ளானே" 76

என்னும் தொண்டரடிப்பொடியாழ்வாரின் பாடலையும் பின்பற்றிப் பாடியிருத்தலைக் காணலாம்.

திருமால் அடியார்க்கு அடியராய் இருந்து சேவை செயவதைத் தொண்டர்பக்தி என்பர். அதனைப் போற்றியவர்கள் ஆழ்வார்கள்,

"அரங்கன்எம் மானுக்கே
காதல்செய்தொண்டர்க் கெப்பிறப்பிலும்
காதல்செய்யுமென் னெஞ்சமே!" [77]

என்று குலசேகராழ்வார் பாடுவர். நம்மாழ்வார், "பாற்கடல் சேர்ந்த பரமனைப் பயிலும் திருவுடையார் எவரேலும், அவர் கண்டீர் பயிலும் பிறப்பிடைதோறும் எம்மையாளும் பரமரே" [78] என்றும் "எம் பிறப்பிடைதோறும் எம் தொழுகுலம் அவர்களே" [79] என்றும் கூறுவர். தாள்ளபாக்கக் கவிஞர்களும்,

"மாபுதாகா நினுகொல்சி மந்தமேள மௌகண்டே
தாபகு நீதாசுலசேஷத்வ மெக்குடு
.......... .............. ..............
ஹரி நீ ப்ரபாதஜீவினந கர்வின்சு டகண்டெ
அரயு நீதாசுல லெங்கெல டெக்குடு" [80]

(இரவுவரை உன்னைத் தொழுது
இன்புறுவதைவிட
வேண்டும் உன்அடியார்க்குச் செய்யும்
தொண்டு சிறந்தது.
அரி! உன் அருள் உயிராகி இறும்பூது
கொள்வதைவிட
தேடும் உன் அடியவர்க்குத் தொண்டன் ஆவது
சிறந்தது)

என்று பாடுவார்கள். "இத்தனை பிறவிகள் எதற்கு ? திருமால் தொண்டர் வாழும் ஊரில் இருந்தால் போதும், பரமபாகவதர் வீடுகளில் இழிவான புழுவாக பிறந்தால் போதும், திருவேங்கடவனைக் கண்டவர்களின் திருவடித் தொண்டனாகி இருந்தால் போதும்,இந்த அடியார்களின் திருப்பாதத்துகள் (பொடி) புனிதமாகப் பட்டு வாழ்ந்தால் போதும்" [81] என்று அவர்கள் பாடுவது "ஆடிப்பாடி அரங்கவோ என்றழைக்கும் தொண்டரடிப்பொடி ஆடநாம் பெறில் கங்கைநீர் குடைந்தாடும் வேட்கை என்னாகுவதே" [82] என்று கூறும் குலசேகராழ்வாரின் பாடல் வரிகளுடன் பெரிதும் ஒத்திருத்தலைக் காணலாம்.

திருமாலே உலக நாயகன்,அவனே உலகை உய்விக்கவந்த உத்தமன். அவன் திருநாமம் பேசினால் அனைத்தும் கிட்டும் என்பது ஆழ்வார்கள் கொள்கை. தாள்ளபாக்கர்களும் இதையே வலியுறுத்துகின்றனர்.

*"எண்ணிப் பாருங்கள் பெரியாரே!*
*தாமரைக்கண்ணன்; காக்கும் கடவுள்*
*முழுவதும் அவனை சரணடைதலே பல்பயன் தரும்*
*அனைவருக்கும்"* [83]

என்று கூறி, திருமாலைத் தொழாத வழிபாடு காட்டில் ஒளிரும் முழுநிலவு போன்று பயனற்றது; அச்சுதனின் கதைகளெல்லாக் கதைகளைக் கேட்டல் குளிக்கச் சென்ற

யானை சேற்றைப் பூசிக்கொண்ட யானைக்குளியல் போன்றது; பரமனுக்கு அல்லா முயற்சிகள் பாதாளத்தில் உள்ள புதையல் போன்று பயனற்றது; திருமாலுக்கல்லா பூப்பூசைகள் கணவன் இல்லாத பெண் செய்து கொள்ளும் ஒப்பனை போன்றது என்று மேலும் பலவாறு அவர்கள் கூறுவர்

உலகம் அனைத்தும் திருமாலே என்னும் ஆழ்வார்களுக்கு அவனே தாயும் தந்தையும் மற்ற சுற்றமும் ஆவான். இதை.

> "தாயும் தந்தையு மாய்இவ் வுலகினில்
> வாயும் ஈசன் மணிவண்ணன் எந்தையே" [84]

என்று நம்மாழ்வாரும்,

> "எம் பிரான் எந்தை என்னுடைச் சுற்றம்
> எனக்கரசு என்னுடை வாணாள்" [85]

என்று திருமங்கையாழ்வாரும் கூறுவர். இவ்வாறே தாள்ளபாக்கக் கவிஞர்களும் கூறுகின்றனர்.

> "தாயாகிக் காப்பாற்றுவாய் தந்தையாகிப் போற்றுவாய்
> மனைவியாகி இன்பம் தருவாய் எனக்கு
> உடலாகி வளர்வாய் வினையாக இருப்பாய்

வீட்டின் முற்றமுமாகி இருப்பாய் விந்தை உன் மகிமையே" [86]

என்பது அக்கீர்த்தனை.

தொண்டரடிப்பொடியாழ்வார் திருவரங்கன்மீது அருளிய திருப்பள்ளியெழுச்சி போன்ற கீர்த்தனைகளையும் தாள்ளபாக்கம் கவிகள் அருளியுள்ளனர். சிலகீர்த்தனைகள்திருப்பள்ளியெழுச்சியைப் பின்பற்றிப்பாடபட்டனவாகவே காணப்பெறுகின்றன.

'விண்ணபாலு விவைலெ விந்த விந்தலு' [87]

என்ற கீர்த்தனையில்,

"தெல்லவாரெ ஜாமெக்கெ தேவதலு முனுலு
அல்லநல்ல அந்தநிந்த அதிவோ வாரே
சல்லனி தம்மிரேகுல ஸாரஸபு கண்ணுலு
மெல்ல மெல்லென விச்சி மேலுகொனவைய்யா!
கருட கின்னர யக்ஷகாமிநுலு கமுலை
விரஹபு கீதமுல விந்தாலபால
பரிபரிவிதமுல பாடேரு நின்னதிவோ
விரிமொகமு தெரசி சித்தகின்ச வேலவய்யா"

(பொழுது விடிந்தது காலம் கடந்தது
தேவர்கள் முனிகள்

மெல்லமெல்ல அங்குமிங்கும் அதோ
உள்ளனர் அவர்கள்
குளிர்ந்த தாமரையிதழ்க் கண்களை
மெல்லமெல்லத் திறந்து எழுந்தருள்வாயே!
கருடர், கின்னரர், யக்ஷர், காமினியர் கூடிப்
பிரிவுத்துயர் கீதங்களின் ஆலாபனைகள்
பலவாறாகப் பாடினர் உன்னையங்கே,
திருமுகம் திறந்து எழுந்தருள்வாயய்யா)

என்னும் இக்கீர்த்தனைத் தொண்டரடிப்பொடியாழ்வாரின் பாசுரங்களை அடியொற்றிருத்தலைக் காணலாம்.

"கதிரவன் குணதிசைச் சிகரம்வந் தணைந்தான்
கனையிருளகன்றது காலையம் பொழுதாய்
மதுவிரிந் தொழுகின மாமல ரெல்லாம்
வானவர் அரசர்கள் வந்துவந் தீண்டி
எதிர்திசை நிறைந்தனர்.............................
...... ................. ..................
அரங்கத்தம் மாபள்ளி யெழுந்தரு ளாயே" 88

"ஏதமில் தண்ணுமை எக்கம் மத்தளி
யாழ்குழல் முழவமோடு இசைதிசை கெழுமி
கீதங்கள் பாடினர் கின்னரர் கெருடர்
கந்தருவர்......... .......... ..............." 89

இத்தகுப்பள்ளியெழுச்சிக் கீர்த்தனைகளேயல்லாமல் திருப்பாவையில் மார்கழி நோன்பு நோற்பதற்காக இறைவனைப் பள்ளி எழுமாறு வேண்டும் பாசுரங்கள் போன்ற கீர்த்தனைகளையும் தாள்ளபாக்கர்கள் பாடியுள்ளனர். இவ்வாறாக, திருப்பள்ளியெழுச்சி, திருப்பாவை ஆகியவற்றில் உள்ள பாசுரங்கள் போன்ற கீர்த்தனங்களைத் தெலுங்கில் தந்ததுடன் அவற்றை அந்தந்த வழிபாடுகளிலும் பாடவும் செய்தனர்.

பெரியாழ்வார் பாடிய 'பல்லாண்டு' போன்ற கீர்த்தனைகளையும் தாள்ளபாக்கம் கவிஞர்கள் படியுள்ளனர்.

"குட்டுன கோரிகலெல்ல கொல்லவட்டே நீ
பட்டபுதேவிகி பல்லாண்டு பல்லாண்டே

பச்சலஸந்தி தண்டலு பாஹுபுருலு மெறய
எச்செரினப மேனுசோக நிலுசுண்டி
பச்சவிலுகானி தல்லி பங்காரு தேஸிடிநீபை
பச்சகப்புரமுசல்லெ பல்லாண்டு பல்லாண்டே"[90]

(மறைமுகமாகவே விருப்பங்கள்
அனைத்தையும்
கொள்ளைகொள்ளும் உன் பட்டத்து அரசிக்குப்
பல்லாண்டு பல்லாண்டு

பச்சை மணி பொருந்திய கையணிகள் விளங்க
உடல் உரச நின்றவாறு மன்மதன் தாய்
உன்மேல் பச்சைக் கற்பூரத்தை வாரி
இறைக்கின்றாள் பல்லாண்டு பல்லாண்டு)

இக்கீர்த்தனம் அலர்மேல்மங்கைக்குப் பாடப்பட்டதாகும்.

ஆழ்வார்கள் - அன்னமாச்சாரியர் பாடல்களில் காணப்பெறும் கண்ணன் - பிள்ளைத் திருவிளையாடல்களை ஒப்பாய்வு செய்த ஆ. சுதாகர் என்பவர் ஆழ்வார்கள் பாடிய கண்ணன் வெண்ணெய் உண்ணல், மருதிறுத்தல், துகில்கவர்தல், கோவர்த்தனம் எடுத்தல், மல்லடர்தல், கம்சன் வதை, குருவின் பிள்ளைகளை மீட்டல் என்னும் திருவிளையாடல்களை முழுவதும் ஒத்தும் மிகையாகவும் அன்னமாச்சாரியர் பாடியிருப்பதாகக் கூறுவர்.[91]

இவ்வாறாகத் தாள்ளபாக்கர்கள் தம் முன்னோர்களான ஆழ்வார்களின் பாசுரங்களை அறிந்து அவற்றைத் தம் சங்கீர்த்தனங்களில் தந்தனர். அவர்கள் கடைபிடித்த ஸ்ரீவைஷ்ணவ நெறியே இதற்குக் காரணம் எனலாம். இதுகுறித்து வேடூரி ஆனந்தமூர்த்தி குறிப்பிடும்போது, "திராவிட வேதமே ஆந்திர வேதாந்தமாகித் தாள்ளபாக்கர் இலக்கியங்களாகத் தோன்றியது. மேலும் ஆழ்வார்களும் ஆச்சாரியர்களும் வைணவத்திற்கும் வைணவ இலக்கியங்களுக்கும் செய்த தொண்டை அன்று தாள்ளபாக்கக்கவிகள் செய்தனர்

என்பதில் உயர்வு நவிற்சி இல்லை" [92] என்று கூறுவர்.

மேலும், "இன்று சிறப்புற்று விளங்கும் சங்கீர்த்தனங்கள் பதங்கள் ஆகியவற்றின் படைப்பிற்கு அன்னமாச்சாரியரே முதன்மையானவர் என்று கருதுவதற்குக் காரணம் அவர் அவற்றுக்கு ஒரு சிறந்த முறையையும் பரவலையும் ஏற்படுத்தியதேயாகும். அவர் பதங்கள் மீதுள்ள மதிப்பே அவருக்குச் சிறந்த செல்வாக்கைத் தந்தது. அவர் பதங்களில் உள்ள பக்தி, சிருங்காரம் ஆகியன படிப்படியாக இராமதாசர் முதலானவர்களை அடைந்து பஜனை நெறியாகவும், சேஷத்திரய்யா முதலானவர்களை அடைந்து நாட்டிய அபிநய நெறியாகும் தியாகராசரை அடைந்து சங்கீத நெறியாகவும் வளர்ந்தன" என்று அவர் குறிப்பிடுவர். [93]

ஆழ்வார்கள் போன்று விளங்கியதால் தாள்ளபாக்கர்களைத் தெலுங்கு ஆழ்வார்கள் எனக் குறிப்பிடலாம்.

ஆழ்வார்களின் அருளிச் செயல் கருத்துகளையும் வைணவ நெறிகளையும் கிருஷ்ணமாச்சாரியரும் தாள்ளபாக்கர்களும் தெலுங்கில் தம் கீர்த்தனைகளாலும் வசனம் முதலான நூல்களாலும் கொண்டு வர, ஆழ்வார்கள் சிறப்பு தெலுங்கரிடையே பரவியது. அதன் விளைவாக அக்கால கட்டத்திலேயே ஆழ்வார்கள் பற்றிய

நூல்களும் அவர்களின் அருளிச்செயல்களும் தெலுங்கில் எழலாயின. அன்று முதல் இன்று வரை அந்நூல்கள் தெலுங்கில் பல வடிவங்களில் தோன்றி வருகின்றன.

### 2.2.0 ஆழ்வார்களின் கதை கூறும் முதல் தெலுங்கு நூல்கள்

ஆழ்வார்கள் ஆச்சாரியர்கள் கதைகளைக் கூறும் முதல் நூல்களாகத் தெலுங்கில் விளங்குவன "ஆமுக்தமால்யத", "பரமயோகி விலாசமு" என்னும் இரு நூல்களாகும்.

### 2.2.1 ஆமுக்தமால்யத

தாள்ளபாக்கம் கவிஞர்கள் தம் இலக்கியங்களால் வைணவத்தைத் தெலுங்கு நாட்டில் செழிப்புறச் செய்து கொண்டிருந்தாலும் முதன் முதலில் தமிழ் வைணவத்தின் விசிட்டாத்வைத கொள்கையை அமைத்து ஆமுக்தமால்யத என்னும் ஒரு சிறந்த காவியத்தை இயற்றியவர் விசயநகர மாமன்னர் கிருஷ்ணதேவராயராவார். இவர் கி. பி. 1509 முதல் 1530 வரை ஆட்சியில் இருந்தவர்.

ஆமுக்தமால்யத என்னும் வடமொழித்தொடர் சூடிக்கொடுத்தாள் என்னும் பொருளைத் தருகிறது. அதனால் சூடிக்கொடுத்த சுடர்கொடியாளான ஆண்டாளின் கதையைக் கொண்டது இந்நூல். ஆண்டாள் கதையுடன் விஷ்ணு சித்தரான பெரியாழ்வாரின்

கதையையும் உட்கொண்டிருப்பதால் இந்நூலை **விஷ்ணுசித்தீயமு** என்றும் அழைப்பர்.

பெரியாழ்வார், ஆண்டாள் ஆகியோரின் கதையுடன் யமுனாச்சாரியரின் (ஆளவந்தாரின்) கதையும் கிளைக்கதையாக இந்நூலில் இடம்பெற்றுள்ளது. இந்நூல் ஆந்திர நாட்டில் ஸ்ரீவைஷ்ணவத்தை நிலைநாட்ட - பரப்ப எழுந்த காவியம் என்று ஆய்வாளர்கள் கூறுவர்.[94]

நூலின் சில இடங்களில் தமிழ்நாட்டு அந்தணர்களின் பழக்கவழக்கங்களும் வெளிப்படுகின்றன. பெரியாழ்வாரின் சிறப்பைக் கூறுமிடத்தில் அவர் திருமாளிகையில் நடு இரவில்கூடத் திருமால் கதைகளும் திவ்வியபிரபந்தமும் பாராயணம் செய்யப்படும் ஒலிகள் கேட்டுக்கொண்டே இருக்கும் என்று ராயர் கூறுவர்.[95] வேறொரு இடத்தில் திவ்வியபிரபந்தம் பாடிவரும் பெண்களைக் குறிப்பிடுவர்.[96] பசி, ஏத்துதல், விளங்காய், வெண்திருவடி, பெரிய திருவடி முதலான தமிழ்ச்சொற்களும் சில இந்நூலில் உள்ளன.[97]

**2.2.2 பரமயோகி விலாசமு:**

பொய்கையாழ்வார் முதற்கொண்டு இராமாநுசர் வரை வாழ்ந்த ஆழ்வாராச்சாரியர்களில் கதைகள் இந்நூலில் உள்ளன. பரமயோகிகளான அவர்களைப் பற்றிக் கூறுவதால் இந்நூலுக்கு **பரமயோகி விலாசமு**

எனப் பெயர் அமைந்தது. இதை இயற்றியவர் தாள்ளபாக்கம் கவிஞர்களுள் ஒருவரான திருவேங்களநாதர் (கி. பி. 1500 - 1558) என்பவராவார்.

இந்நூலைத் திராவிட பிரபந்தம் பார்த்து இயற்றியதாகத் திருவேங்களநாதரே குறிப்பிடுவதால்[98] அவருக்குத் தமிழில் உள்ள திவ்வியப் பிரபந்தமும் குருபரம்பராப் பிரபாவமும் மூலநூல்களாக அமைந்தன எனலாம்.

மூலநூலைப் நேரடியாக மொழிபெயர்க்காமல் மாற்றங்கள் சில செய்து ஒரு தழுவலாகவே இந்நூலைப் படைத்துள்ளார். ஆழ்வார்கள் கதைகளும் அவர்கள் அருளிய - கதை நிகழ்ச்சியுடன் தொடர்புடைய பாசுரங்கள் பலவும் தழுவலாக இதில் உள்ளன.

பொய்கையாழ்வாரின் "வையகம் தகளியா வார்கடலே நெய்யாக" என்னும் பாடலையும், பூதத்தாழ்வாரின் "அன்பே தகளியா" என்னும் பாடலையும், பேயாழ்வாரின் "திருக்கண்டேன்" என்னும் பாடலையும் தழுவல்களாகத் தெலுங்கில் தந்துள்ளார்.[99] அவ்வாறே தொண்டரடிப்பொடியாழ்வாரின் திருப்பள்ளியெழுச்சியையும் தெலுங்கில் தந்துள்ளார்.[100] இவற்றில் பாசுரங்களின் கருத்தமைந்திருத்தலுடன் அவற்றின் உயிரோட்டமும் இடம்பெற்றிருத்தல் குறிப்பிடத்தக்கதாகும்.

திருவேங்கள நாதரின் தெலுங்காக்கம் பற்றிக் கூறும்போது, தமிழில் ஆழ்ந்த புலமையும் தெலுங்கில் கவி படைக்கும் ஆற்றலும் பெற்ற சின்னன்ன (திருவேங்கள நாதர்) இவ்வாறு உள்ளவாறே (ஆழ்வார்களின் பாசுரங்களை) மொழிப்பெயர்திருந்தால் தெலுங்கிலும் "திராவிடவேதம்" (தமிழ் வேதம்) தோன்றியிருக்கும் [101] என்று சி. ஆர். சர்மா கூறுவர். இதிலிருந்து அவரின் மொழிபெயர்ப்புத் திறனையும் அதன் சிறப்பையும் நன்கு உணரலாம்.

### 2.2.3 ஆழ்வார்களின் கதை கூ.றும் பிற நூல்கள்

ஆமுக்தமால்யத, பரமயோகவிலாசம் என்னும் நூல்களின் வழியாக ஆழ்வார்கள் கதைகள் தெலுங்கரிடையே பரவியதன் விளைவாக அன்றிருந்து இன்றுவரை மேலும் பல நூல்கள் தோன்றியுள்ளன. அவை, ஆழ்வார்கள் அனைவரின் கதைகளையும் கூறும் நூல்களாகவும் ஒவ்வொரு ஆழ்வாரை மட்டும் கூறும் தனித்தனி நூல்களாகவும் உள்ளன.

#### 2.2.3.1 அனைவரின் கதை கூறும் நூல்கள்

16-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த சித்திராஜு திம்மராஜு என்பவர் "பரமயோகி விலாசமு" என்னும் பெயரில் ஒரு சம்புகாவியம் படைத்துள்ளார். தாள்ளபாக்கத் திருவெங்களநாதரின் பரமயோகி விலாசத்திற்குப் பிறகு எழுந்தது இந்நூல். அடுத்ததாகக்

குறிப்பிடத்தக்க நூல் ஆசார்ய ஸூக்தி முக்தாவளி என்பதாகும். செய்யுள் வடிவில் உள்ள இந்நூலை இயற்றியவர் 18-ஆம் நூற்றாண்டின் இறுதியில் தோன்றிய நம்பூரி கேசவாச்சாரியார் என்பவராவார். மேலும், ஆழ்வார்கள் கதைகளைக் கொண்ட பல நூல்கள் 19-ஆம் நூற்றாண்டிலிருந்து இன்றுவரை தோன்றியுள்ளன. அவற்றுள் பல நூல்கள் இன்று கிடைப்பதில்லை. சில சிதைந்தும் காணப்படுகின்றன. மேலும் அவற்றுள் ஏறக்குறைய 19 நூல்கள் காணப்படுகின்றன.[102]

தமிழ் அறிந்த தெலுங்கர்களும் படித்தறிவதற்காகத் தமிழில் மணிப்பிரவாள நடையில் உள்ள பின்பழகிய பெருமாள் ஜீயரின் ஆறாயிரப்படி குருப்பரம்பராப்ரபாவம் தெலுங்கில் எழுத்துப் பெயர்ப்பு (Transliteration) செய்யப்பட்டுள்ளது. ஸ்ரீவைஷ்ணவ கிரந்த முத்ராபக சபையினர் இதைச் செய்துள்ளனர்.

### 2.2.3.2 ஒருவரின் கதை கூறும் நூல்கள்:

ஒவ்வொரு ஆழ்வாரின் ஏற்றத்தாலும் கதைத் தன்மையாலும் அவர்களின் கதை இடம்பெற்ற தனித்தனி நூல்களும் பல தெலுங்கில் எழுந்துள்ளன. அவை, ஒவ்வொரு ஆழ்வாரையும் தெலுங்கர்கள் எந்த அளவுக்கு விரும்புகின்றனர் என்பதை எடுத்துக் காட்டுகின்றன.

**2.2.3.2.1 ஆண்டாள்:**

கிருஷ்ணதேவராயரின் ஆமுக்தமால்யதாவுக்குப் பிறகு ஆண்டாள் கதை தெலுங்கரிடையே சிறப்புற்று விளங்கியதால் ஆண்டாளின் கதையைக் கூறும் நூல்கள் இன்று வரை பல இலக்கிய வடிவங்களில் தோன்றியுள்ளன. அவை சிறு காப்பியங்களாகவும் பெருங்காப்பியங்களாகவும் உள்ளன. அவற்றுள் பன்னிரண்டு நூல்கள் குறிப்பிடத்தக்கன. ஆண்டாள் திருமாலின் பிராட்டியாக விளங்குவதும் இத்தகைய நூல்கள் பல தோன்றுவதற்குக் காரணமாகக் கொள்ளலாம்.

**2.2.3.2.2 தொண்டரடிப்பொடியாழ்வார்:**

ஆண்டாளுக்குப் பிறகு தெலுங்குக் கவிஞர்களின் பெரும் விருப்பத்திற்கு உள்ளானவர் தொண்டரடிப்பொடியாழ்வாராவார். தேவதேவி என்னும் வேசியின் வலையில்பட்டு இறுதியில் திருமாலால் ஆட்கொள்ளப்படுவதாகத் தொண்டரடிப்பொடியாழ்வாரின் கதை இருப்பதே இதற்குக் காரணம் எனலாம். மேலும் உவகைச்சுவையும் பக்திச்சுவையும் இணைந்த காவியம் படைக்க இக்கதை ஏதுவாக உள்ளது. அதற்கேற்றாற்போல் இக்கதை பல இலக்கிய வடிவங்களில் இன்று உலவுகின்றது.

தொண்டரடிப்பொடியாழ்வாரின் கதையைக் காவியவடிவில் தந்த -முதல் மனிதர் சதுலவாடமல்லன

என்பவராவார். இவர் 16-ஆம் நூற்றாண்டினர். "விப்ரநாராயண சரித்ரமு" என்னும் இந்நூல் ஐந்து காண்டங்களாகச் செய்யுள் வடிவில் உள்ளது. விப்ரநாராயணர் என்பது ஆழ்வாரின் இயற்பெயராகும். சிருங்காரரசம் என்னும் உவகைச்சுவை இந்நூலில் மிகுந்துள்ளது. அடுத்து அதே நூற்றாண்டினரான சாரங்குதம்மய்ய என்பவரும் வைஜெயந்தி விலாசமு என்னும் பெயரில் ஒரு காவியம் இயற்றியுள்ளார். மேலும் பல இலக்கிய வடிவங்களில் ஒன்பது நூல்கள் காணப்படுகின்றன.[103] அவற்றுள்சில வெளியிடப்பட்டுள்ளன.

இக்காலப் புலவரான தேவுலபல்லி கிருஷ்ணசாஸ்திரி என்பவர் "விப்ரநாராயண" என்னும் பெயரில் ஒரு வானொலி நாடகம் இயற்றியுள்ளார். இந்நாடகம் 6.05.1977 அன்று ஐத்திராபாத்து வானொலியில் ஒலிபரப்பட்டுள்ளது. இராமகிருஷ்ணன் என்பவர் இயக்கத்தில் பாரதி பிக்சர்ஸார் "விப்ரநாராயண" என்னும் திரைப்படத்தை 1955-இல் வெளியிட்டுள்ளார். சிறந்த திரைப்படத்திற்கான ஜனாதிபதி விருதையும் இது பெற்றுள்ளது.[104]

இவ்வாறு காப்பியம், நாடகம், உரைநடை, யக்ஷகானம், ஹரிகதை, திரைப்படம் எனும் வடிவங்களில் தொண்டரடிப்பொடியாழ்வாரின் கதை தெலுங்கரிடையே மிகுந்த வரவேற்பைப் பெற்றுள்ளது.

பல வடிவங்களில் பல கால இடைவெளிகளில் தொண்டரடிப்பொடியாழ்வாரின்கதை இயற்றப்பட்டிருப்பதால் கதை அமைப்பில் சில மாற்றங்கள் உள்ளன என்றும், அவை அந்தந்தக் காலத்தில் நிலவிய சமூகச் சூழலைக் காட்டுகின்றன என்றும் ஈ. பாலகிருஷ்ணாரெட்டி அவர்கள் கூறுவர்.[105]

தெலுங்கில்உள்ளதொண்டரடிப்பொடியாழ்வாரின் கதைகள் தமிழில் உள்ள கதைகளுடன் ஒப்பிட்டு ஆய்வதற்கு ஏற்றவையாகும்.

### 2.2.3.2.3 குலசேகராழ்வார்

17-வது நூற்றாண்டின் இறுதியில் வாழ்ந்தவராகக் கருதப்பெறும் சேலம் ரகுநாதாச்சாரியர் என்பவர் "குலசேகர மஹிபால சரித்ரமு" என்னும் பெயரில் ஒரு காப்பியத்தை இயற்றியுள்ளார். இந்நூல் குலசேகராழ்வாரின் கதையை நான்கு காண்டங்களில் கூறுகிறது. தொண்டரடிப்பொடியாழ்வாருக்குப் பிறகு தெலுங்கு கவிஞர்களிடையே குலசேகராழ்வாரின் கதை சிறப்புற்றதாகத் தெரிகிறது.[106]

### 2.2.3.2.4 திருமங்கையாழ்வார்:

திருமங்கையாழ்வாரின்கதையைத் "திருமங்கயாள்வாரு சரித்ர" என்னும் பெயரில் கோவெல திருவேங்கடதாசு என்பவர் ஒரு யக்ஷகானமாகப் படைத்துள்ளார். இந்நூல் கி. பி. 1800-1850 இன் இடைபட்ட

காலத்தில் தோன்றியுள்ளதாகக் கருதப்படுகிறது.[107] அதே பெயரில் பராசரம் சேக்ஷாச்சாரியர் என்பவரும் ஒரு யக்ஷகானத்தை இயற்றியுள்ளார். இந்நூல் 1907-இல் வெளிவந்துள்ளது. என். வெங்கடநரசிம்மம் என்பவர் 1900-இல் திருமங்கயாள்வாரு சரித்ரமு என்ற பெயரில் ஒரு நூலை இயற்றி வெளியிட்டுள்ளார்.

### 2.2.3.25 ஆழ்வார்கள் பிறர்

இக்காலத்தவரான நல்லான்சக்ரவர்த்தி கிருஷ்ணமாச்சாரியர் என்பவர் நம்மாழ்வாரின் கதையைக் கூறும் "சடகோப சரித்ரமு" என்னும் நூலை காப்பிய வடிவில் இயற்றியுள்ளார். கே. டி. எல். நரசிம்மாச்சாரியர் "வகுளபூஷணநாயகி" என்னும் பெயரில் ஒரு நூலை 1971-இல் இயற்றியுள்ளார். இந்நூலின் முதற்பகுதியில் நம்மாழ்வாரின் கதை உரைநடை வடிவில் அமைந்துள்ளது. ஆழ்வார்களுள் பெரும் சிறப்புக்குரிய நம்மாழ்வாரின் கதை பல நூல்களாகத் தெலுங்கில் வரவில்லையென்றாலும் அவர்தம் "திருவாய்மொழி" பலரால் தெலுங்கில் மொழிபெயர்க்கப்பட்டுள்ளது. இக்காலத்தில் வாழ்ந்த சிந்தா தீக்ஷிதர் என்பவர் திருப்பாணாழ்வாரின் கதையைத் தெலுங்கில் தந்துள்ளார். கொலகலூரி ஈனாக் என்பவர் திருப்பாணாழ்வாரின் கதையையே "முனிவாஹனடு" என்னும் பெயரில் நாடகமாக ஆக்கியுள்ளார். இந்நூல் 1985-இல் வெளியிடப்பட்டுள்ளது.

இவ்வாறாக ஆழ்வார்களின் கதைகள் ஒருபுறம் பலநூல்களாகத் தோன்றியிருக்க மறுபுறம் அவர்களின் அருளிச்செயல்களும் தெலுங்கில் பலவாறாக ஆக்கம் செய்யப்பட்டுள்ளன.

**2.3.0 தெலுங்கில் ஆழ்வார்கள் அருளிச் செயல்கள்**

தமிழ் வேதமான நாலாயிரத் திவ்விய பிரபந்தத்தின்மீது தெலுங்கருக்கு மிகுந்த பற்று உண்டு. அவர்கள் தங்களுடைய வைணவ நூல்களிலும் சங்கீர்த்தனங்களிலும் நாலாயிர திவ்விய பிரபந்தப் பாசுரங்களைத் தழுவி இருந்ததைத் தெலுங்கு வைணவ இலக்கியத்தின்முன்னோடிகளானகிருஷ்ணமாச்சாரியரிடமும் தாள்ளபாக்கம் கவிஞர்களிடமும் காணலாம். 17-வது நூற்றாண்டிற்கு முன்பு வாழ்ந்நதவராகக் கருதப்பெறும் புசுலூரி சோமராஜகவி என்பவர் "பாலகோபாலசதகம்" என்னும் நூலில் வால்மீகி இராமாயணம், வியாசர் பாரதம், நாரதர் இசை ஆகியவற்றிற்கு ஈடாகத் திராவிடவேதமான ஆழ்வார் பாசுரங்களை (நாலாயிர திவ்விய பிரபந்தத்தை) கூறுவதாகச் சி. ஆர். சர்மா அவர்கள் கூறுவர்.[108] இத்தகைய ஏற்றம் ஆழ்வார் பாடல்களுக்கு இருந்ததால் அவை பலரால் தெலுங்காக்கம் செய்யப்பட்டுள்ளன: சிலர் உரைகளையும் இயற்றியுள்ளனர்.

**2.3.1 திருவாய்மொழி**

ஆழ்வார்களின் அருளிச்செயல்களுள் பெருஞ்

சிறப்புக்குரியதாகத் திருவாய்மொழி விளங்குவதால் அதைப் பலர்தெலுங்காக்கம் செய்துள்ளனர்.

காண்ட்ரவேடி இராமானுஜாச்சாரியர் என்பவர் 16-ஆம் நூற்றாண்டினராவார். இவர் துவிபதயாப்பில் திருவாய்மொழியைத் தெலுங்காக்கம் செய்துள்ளார்.[109] இந்நூலின் ஐந்து பதிகங்கள் 1910-இல் வெளியிடப்பட்டுள்ளன. அதைத் தொடர்ந்து ஸ்ரீமாந்நல்லான் சக்ரவர்த்தி வேங்கடராகவாச்சாரியர், "சடகோபகீதாம்ருதமு" (1942) என்னும் பெயரிலும் பச்சுபாபய்ய ஸ்ரேஷ்டி என்பவர் "ஸ்ரீமுக ஸூக்தி" (1948) என்னும் பெயரிலும் மேடேபல்லி வேங்கட ரமணாச்சாரியர் என்பவர் "ஆந்திர கீர்வான சடகோப ஸஹஸ்ரமு" (1949) என்னும் பெயரிலும் செய்யுள் வடிவில் தெலுங்காக்கம் செய்துள்ளனர். இக்கால ஆய்வாளர்கள் பலர் மேற்கூறிய மூவரின் தெலுங்காக்கங்களைத் தம் ஆய்வுக்கு மேற்கோள்களாகப் பயன்படுத்துகின்றனர்.

சிலர் திருவாய்மொழிக்கு உரைகளையும் வகுத்துள்ளனர். மாடபூசி ராமானுஜாச்சாரியர் என்பவர் பெரியவச்சான்பிள்ளைமுதலானவர்களின்வியாக்கியானங்கள் அடிப்படையில் திருவாய்மொழிக்குத் தெலுங்கில் உரை வகுத்துள்ளார். இந்நூல் 1902-இல் வெளிவந்துள்ளது. இன்றைய நூற்றாண்டில் வாழ்ந்த ஸ்ரீமான்பாலவன்ச திருமலகுடிமெல்ல வேங்கடலக்ஷ்மி நரசிம்மாச்சாரியர் என்பவர் திருவாய்மொழிக்குத் தெலுங்கில் தெளிவுரை

தந்து மூன்று பகுதிகளாக வெளியிட்டுள்ளார். கே.டி.எல்.நரசிம்மாச்சாரி என்பவர் "வகுளபூஷணநாயகி" என்னும் பெயரில் (1971-இல்) ஒரு நூலை இயற்றியுள்ளார். இந்நூலில் நம்மாழ்வாரின் கதையும் நல்லான்சக்ரவர்த்திவேங்கடராகவாச்சாரியர் தெலுங்காக்கம் செய்த "சடகோபகீதாம்ரதத்தின்" பாடல்கள் சிலவற்றிற்கு விளக்கங்களும் உள்ளன.

**2.3.2 ஆண்டாள் அருளிச்செயல்கள்:**

திருவாய்மொழிக்கு அடுத்தபடியாக ஆண்டாளின் அருளிச் செயல்களான திருப்பாவை நாச்சியார் திருமொழி என்னும் இரண்டு பிரபந்தங்களையும் தெலுங்குப் புலவர்கள் பலர் தெலுங்காக்கம் செய்துள்ளனர். இவற்றுள் திருப்பாவை பலரால் தெலுங்காக்கம் செய்யப்பட்டுள்ளது. திருமலை, சிம்மாச்சலம், நெல்லூர், ஸ்ரீகூர்மம் ஆகிய இடங்களில் உள்ள கோயில்களிலும் வீடுகளிலும் திருப்பாவையை ஓதும் வழக்கம் 12-ஆம் நூற்றாண்டின் தொடக்கத்திலேயே ஏற்பட்டதாகக் கூறுவர். திருப்பாவைக்கு இதுவரை 40 மொழிபெயர்ப்புகள் தெலுங்கில் எழுந்துள்ளதாகக் கூறுவர். மாடபூசி கோபாலாச்சாரியர் என்பவர் நாச்சியார் திருமொழியைச் சிறப்பாக மொழிபெயர்த்துள்ளார்.

**2.3.3.1 ஆழ்வார்கள் பிறரின் அருளிச் செயல்கள்**

சுதர்சனாழ்வாரய்ய என்பவர்

திருப்பல்லாண்டுத்விபதலு என்னும் பெயரில் பெரியாழ்வாரின் திருப்பல்லாண்டைத் துவிபதயாப்பில் தெலுங்காக்கம் செய்துள்ளார். இது 1861-இல் வெளிவந்துள்ளது. மாடபூஷி கோபாலாச்சாரியர் என்பவர் பாகவதசாரமு என்னும் பெயரில் பெரியாழ்வாரின் திருமொழியைப் பாடல் வடிவில் தெலுங்கில் தந்துள்ளார். அவை பத்து தசகங்களாக வெளிவந்தள்ளன.[110]

பெரியாழ்வாரின் திருப்பல்லாண்டு, நீராட்டப்பதிகம் என்னும் இரண்டிற்கும் பாலவன்ச திருமலகுடிமெல்ல வெங்கடலக்ஷ்மி நரசிம்மாச்சாரியர் தெளிவுரை தந்துள்ளார். இந்நூலில் தொண்டரடிப்பொடியாழ்வாரின் திருப்பள்ளியெழுச்சிக்கும் தெளிவுரை தரப்பட்டுள்ளது.

மாடபூசி கோபாலச்சாரியர் என்பவர் குலசேகராழ்வாரின் பெருமாள் திருமொழியைக் "குலுசேகர ஸூக்திமால" என்னும் பெயரில் தெலுங்காக்கம் செய்துள்ளார். இவரே திருமங்கையாழ்வாரின் பெரியதிருமடல் சிறியதிருமடல் என்னும் பிரபந்தங்களை முறையே "மஹாந்வேஷணமு", "ப்ரியாந்வேஷணமு" என்னும் பெயர்களில் தெலுங்காக்கம் செய்துள்ளார். பாடல் வடிவில் உள்ள இம்மூன்றும் முறையே 1942, 1946, 1945 என்னும் ஆண்டுகளில் திருவேங்கடவன் கீழைமொழிகளின் நிறுவனத்தில் வெளிவந்த இதழில் வெளியிடப்பட்டுள்ளன.

நம்மாழ்வாரின் சீடரான மதுரகவியாழ்வார் பாடிய "கண்ணி நுண்சிறுத்தாம்பும் தெலுங்கில் வெளிவந்துள்ளது. ஸ்ரீமாந்நல்லான் சக்ரவர்த்தி கிருஷ்ணமாச்சாரியர் அதைத் தெலுங்காக்கம் செய்துள்ளார். அழகிய மணவாளராமாநுஜ ஜீயர் என்பவர் 1909-இல் ஒரு நூலை வெளியிட்டுள்ளார். இந்நூலில் கண்ணிநுண்சிறுத்தாம்பு பதிகமும் பெரியவச்சான்பிள்ளை வியாக்கியானமும் தெலுங்கில் எழுத்துப்பெயர்ப்பாக உள்ளன. அவற்றுடன் தெலுங்கில் சொற்பொருளும் விளக்கவுரையும் உள்ளன. பாலவன்ச திருமலகுடி மெல்ல வெங்கடலக்ஷ்மி நரசிம்மாச்சாரியர் கண்ணிநுண்சிறுத்தாம்புக்குத் தெளிவுரை தந்துள்ளார்.

கராளபாடி ஆழ்வாரய்ய என்பவர் 'இயற்பா' என்னும் பெயரில் பொய்கையாழ்வாரின் முதல் திருவந்தாதியையும், பூதத்தாழ்வாரின் இரண்டாம் திருவந்தாதியையும், திருமழிசையாழ்வாரின் நான்முகன் திருவந்தாதியையும் மூன்று பிரிவாக முறையே 1900, 1900, 1902 ஆண்டுகளில் வெளியிட்டுள்ளார். இந்நூல்களில் பெரியவச்சான்பிள்ளையின் வியாக்கியானமும் ஆழ்வார்கள் பாசுரங்களும் தெலுங்கில் எழுத்துப் பெயர்ப்பு செய்யப்பட்டுள்ளன. தமிழ்ப் பாசுரங்களுக்குத் தெலுங்கில் பதப்பொருள் தரப்பட்டுள்ளது.

இவ்வாறாக ஆழ்வார்களின் பிரபந்தங்களைத் தெலுங்காக்கம் செய்திருப்பதுடன் சிலர் அவற்றுக்கு உரைகளையும் தந்திருக்கின்றனர்.

மேடேபள்ளி வேங்கடரமணாச்சாரியர் என்பவர் **"நாலாயிர பிரபந்தமு"** என்னும் பெயரில் 1940-இல் ஒரு நூலை இயற்றியுள்ளார். இந்நூலில் ஆழ்வார்கள் பாடல்கள் சில தெலுங்கில் மொழிபெயர்க்கப்பட்டுள்ளன. தனகுதூரம் வரதாச்சாரியர் என்பவரும் **"ஆள்வாருலு - திவ்ய பிரபந்தமு"** என்ற பெயரில் ஆழ்வார்கள் கதையையும் பிரபந்தங்களையும் எடுத்தியம்பும் நூலைப் படைத்துள்ளார். டி. கே. வி. என். சுதர்ஸனாச்சாரியர் என்பவர் ஆழ்வார்கள் பாடல்களைக் கொண்ட நித்தியனுசந்தானத்திற்கு உரை வகுத்துள்ளார்.

இவற்றைத் தவிரப் பலர் ஏறக்குறைய 1850-இல் இருந்து ஆழ்வார்கள் பிரபந்தங்களை எழுத்துப் பெயர்ப்பாகவும், (தெலுங்கில்) பதப்பொருளாகவும், பெரியச்சான்பிள்ளை முதலியோரின் வியாக்கியானங்களை வெளியிட்டுள்ளனர். அவற்றை நூல் பதிவுப் பட்டியல்களில் (Classified of Books Registered) காணலாம். ஸ்ரீவைஷ்ணவ கிரந்தமுத்ராபக சபையினர் ஆழ்வார்களின் அனைத்து பிரபந்தங்களையும் பெரியவச்சான்பிள்ளை முதலியோரின் வியாக்கியானங்களுடன் தெலுங்கில் எழுத்துப்

பெயர்ப்பாக வெளியிட்டுள்ளனர். இச்சேவையில் அவர்கள் தொண்டு மிகவும் குறிப்பிடத்தக்கதாகும்.

**2.4.0 திருநாமமுலு:**

ஆழ்வார்கள் ஆச்சாரியர்கள் வளர்த்த வைணவம் ஆந்திர நாட்டில் பரவியது என்றாலும் அது இன்றும் நிலைத்து மக்களின் வாழ்வோடு ஒன்றி வருகிறது என்பதற்குத் தக்க எடுத்துக்காட்டாக அமைவன இத்திருநாமங்களாகும். இவற்றைக் கொண்டே ஆந்திரமக்களிடையே ஸ்ரீவைஷ்ணவம் எந்த அளவிற்கு ஊடுருவிப் பாடல்களாக வெளிப்பட்டது என்பதை உணரலாம்.

இராமானுசர் வழிவந்த ஆச்சாரியர்கள் ஆந்திரத்திற்கு வந்து தமிழ்ப் பிரபந்தங்களில் உள்ள உணர்வுகளையும் கருத்துகளையும் பாமர மக்களுக்கு விளக்கிக் காட்டினர். அவை வாய்மொழி வழியாக மக்களிடத்தில் நிலைத்துப் பரவின. தனிப்பட்ட குழுவினர் அவற்றைப் பாடல்களாகவும் பாடினர். அப்பாடல்களே இன்று "திருநாமமுலு" (திருநாமங்கள்) என்ற பெயரில் ஆந்திர நாட்டில் பாடப்பட்டு வருகின்றன.

இவை விசிட்டாத்வைதநெறி, வைணவக் கோட்பாடுகள் ஆகியவற்றை விளக்குவனவாகவும் திருமகளுடன் கூடிய திருமாலை வணங்குவனவாகவும்

உள்ளன. ஆழ்வார்கள், ஆச்சாரியர்கள், அவர்தம் அருளிச்செயல்கள்ஆகியவற்றைப் போற்றுவனவாகவும் விளக்குவனவாகவும் உள்ளன. இவற்றைக் குறிக்கோள்களாகத் திருநாமங்கள் கொண்டிருத்தலால் இறைவன் திருநாமங்களைப் போற்றிப் பாடும் கீர்த்தனைகளிலிருந்து இவை வேறுபடுகின்றன. அதனால் இவை சங்கீர்த்தனங்கள் என்று அழைக்கப்படாமல் திருநாமங்கள் என்றே அழைக்கப்படுகின்றன.[111] ஆழ்வார்கள் ஆச்சாரியர்கள் ஆகியோரின் பிறப்பையும் அருளிச் செயல்களையும் வாழ்த்திப்பாடும் வாழிதிருநாமங்கள் இயல்பை இவை கொண்டிருத்தலைக் காணலாம். அதனாலும் இவற்றுக்குத் திருநாமங்கள் எனப் பெயர் வந்திருக்கலாம்.

இத்திருநாமங்கள் ஏட்டில் எழுதப்படாமல் வழிவழியாக நாட்டுப்புறப் பாடல்கள் போன்று பாடப்பட்டு வந்தமையால் அவற்றின் காலம் எது? எத்தனைப் பாடல்கள் பாடப்படுகின்றன? என்னும் வினாக்களுக்கு விடை காண்பது அரிதாக உள்ளது. ஆனால் அவை வைணவத்தைப் பரப்ப உதவின. ஆழ்வார்கள் ஆச்சாரியர்கள் வழங்கிய நூல்களின் சாரத்தைப் பாமர மக்களுக்கு எளிமையாக்கித் தந்தன. அவற்றை இன்னும் நிச்சியர், சாதானியர், வைசியர்,வெலமனர் முதலான பிரிவினர் கோயில் உற்சவங்களில் பாடிக் காத்து வருகின்றனர். ஆந்திர

நாட்டில் சற்றேறக்குறைய எங்கும் பரவியிருந்த திருநாமங்களுள் கிடாம்பி நரசிம்மாச்சாரியர் என்பவர் பலவற்றை வரங்கல், கரீம் நகர், மெதக், நல்லகொண்டா, விஜயவாடா, மேற்கு கோதாவரி, நெல்லூர் முதலிய மாவட்டங்களிலிருந்து தொகுத்து ஒரு நூலாக வெளியிட்டுள்ளார். இவற்றுள் சில தமிழிலும் வடமொழியிலும் உள்ளன. எல்லாவற்றுக்கும் இசைக்குறிப்புகள் இருப்பதால் இவை இசையுடன் பாடப்படுபவை எனலாம்.

இத்திருநாமங்களின் சிறப்பைக் கூறுமிடத்தில் மரிகண்டி ஸ்ரீரங்காச்சாரியர் இவை ஆழ்வார்கள் பாசுரங்கள் போன்றவை என்றும் இவற்றை ஆந்திரவேதம் என்று அழைக்கலாம் என்றும் கூறுவர்.[112]

இத்திருநாமங்கள் ஆழ்வார்கள் சிறப்பையும் அவர்களின் அருளிச் செயல்களின் சிறப்பையும் போற்றிப் பாடுகின்றன.

> **"என்ச வசமௌனா ஆள்வாருல**
> **கான்ச வசமௌனா"**[113]

என்று தொடங்கும் பாடல், "எண்ணிப்பார்க்க முடியுமா? அவர்களைக் காணத்தான் முடியுமா? உயிர்கள் செய்யும் பாவங்களையெல்லாம் போக்கி எம்மைக் காப்பாற்றினர்; ஸ்ரீராமனே பரத்துவம் என்று

எம்மைக் காத்தனர்; இவ்வுலகத் தலைவர்களாகப் பூமியில் தோன்றி எம்மைக் காத்தனர்" என்று பலவாறாகப் போற்றுகிறது.

மேலும் இவற்றுள் நம்மாழ்வாரைப் போற்றிப்பாடும் திருநாமங்களும் பெருமளவில் காணப்படுகின்றன.[114] ஆண்டாள் பற்றியனவும் சில உள்ளன.

"பண்ணுக த்ராவிடவேதமு பரமப்ரபந்நுலகு
பக்திசாரமு கணஜீவனமு" [115]

என்னும் தொடர் திருவாய்மொழியைப் போற்றுவதாகும். பரமபிரபந்நர்களுக்குப் பக்தியின் சாரமாகவும் சிறந்த வாழ்க்கையாகவும் அமைவது திருவாய்மொழியைப் பாராயணம் செய்வதாகும் என்பது அதன் பொருள்.

"அன்னி வேதமுலு வண்டிகாதம்மா
திராவிட வேதமு
என்னி வேதமுலனனை தானெதிரின்சி
நிக்ரஹின்சு" [116]

என்னும் திருநாமத்தொடர், அனைத்து வேதங்களைப் போன்றதன்று திராவிட வேதம் எத்தனை வேதங்களையானாலும் அது எதிர்த்து நின்று வீழ்த்தும் என்று நாலாயிர திவ்விய பிரபந்தத்தைப் போற்றுகிறது.

மேலும் அத்திருநாமம் "நஞ்சு கலந்த உணவு போன்று தீமை தரும் சொற்களைக் கூறாமல் பிரபத்தியே ஏற்ற நெறி, அந்த இறைவனுக்கு நீயே தக்க சேஷபூதன்" என்னும் கருத்துகளை மட்டும் கூறும்; நெறிகள் பலவற்றைக் கூறாமல் பாகவதானு சரணமே முக்திக்கு வழி என்று வரையறுக்கும்; இறைவனுக்குச் செய்யும் சேவையே சிறந்த நெறி என்று தெரிவிக்கும்; வேதங்களை ஓத அந்தணர்கள் முதலானோரே தகுதியானவர்கள். ஆனால் திராவிட வேதத்தை ஓத ஜாதி அடிப்படையிலானகட்டுப்பாடுகள் வரையறுக்கப்படவில்லை, பெண்கள் சூத்திரர்கள் முதலானோர் அனைவரும் ஓதத் தகுதியானவர்களே என்று பலவாறாகத் திவ்விய பிரபந்தத்தைப் போற்றுகிறது.

இவ்வாறாக ஸ்ரீவைஷ்ணவத்தைப் பாடி பரப்பிவந்த இத்திருநாமங்கள் இன்றும் ஆந்தி மக்களால் பாடப்பட்டு வருகின்றன. இவை இன்றும் தமிழர் வளர்த்த வைணவம் ஆந்திர நாட்டில் நிலைத்து வாழ்ந்து வருவதற்குத் தக்கச் சான்றாக உள்ளன எனலாம்.

### 2.5.0 ஆச்சாரியர்கள் கதை கூறும் நூல்கள்:

குருபரம்பரை நூல்களில் ஆழ்வார்கள் கதைகளுடன் ஆச்சாரியர்கள் கதைகளும் இடம்பெற்றிருத்தல் போன்று தெலுங்கில் உள்ள நூல்களிலும் இருசாரரின் கதைகள் இடம்பெற்றுள்ளன. ஆமுக்தமல்யதாவில்

ஆளவந்தாரின் கதை இடம் பெற்றிருக்கிறது. பின்னர்த் தோன்றிய பரமயோகிவிலாசம் முதலான நூல்களில் ஆச்சாரியர்களின் கதைகளும் இடம்பெற்றுள்ளன.

**2.5.1 இராமாநுசர்:**

ஒவ்வொரு ஆச்சாரியரின் கதையைக் கூறும் தனி நூல்களும் சில தெலுங்கில் உள்ளன. அவற்றுள் இராமாநுசரின் கதை கூறும் தெலுங்கு நூல்கள் பல வடிவங்களில் காணப்படுகினறன.

"விஷ்ணுபுராணமு" அல்லது "விஷ்ணுபக்த சரித்ரமு" என்னும் துவிபத நூலை இயற்றியவர் சக்ரபூரி ராகவாச்சாரியர் என்பவராவார். இது இராமாநுசரின் வாழ்க்கையில் நடந்த சிறப்பான நிகழ்ச்சிகளைக் கூறுகிறது.[117] 17-ஆம் நூற்றாண்டினரான லக்ஷ்மணாரயர் என்பவர் "தத்வார்த்த தர்ப்பணமு" என்னும் துவிபத நூலை இயற்றியுள்ளார். இது இராமாநுசரின் கதையையும் அவர்தம் சீடர்களுக்கு கூறிய விசிட்டாத்வைத கருத்துகளையும் கூறுகிறது.[118]

1803-க்கு முன்பு வாழ்ந்தவராகக் கருதப்பெறும் பணிஹாரம் எம்பாரய்ய என்பவர் "குறவஞ்சி என்ற பெயரில் இராமாநுசரின் கதையை யக்ஷகானமாகப் படைத்துள்ளார்.[119] காட்ரம்பாக கேசவாச்சாரியர் (1860-இல் வாழ்ந்தவர்) என்பவர் "இராமாநுசவிஜயமு" என்னும் பெயரில் ஒரு யக்ஷகாணம் இயற்றியுள்ளார்.[120]

தெலுங்கு நாட்டில் சிறப்புற்ற புர்ர கதை வடிவிலும் இராமாநுசரின் கதை பாடப்பட்டுள்ளது. குடிமெல்ல இராமாநுசாச்சாரியர்சாமி என்பவர் இதை "யதிராஜவிஜயமு" என்னும் பெயரில் வழங்கியுள்ளார்.[121] மேலும் இந்நூற்றாண்டினரான ஆர். பார்த்தசாரதி, புக்கபட்டணம் நரசிம்மாச்சாரி ஆகியோர் முறையே "ராமாநுஜாசாரிலு", "ஸ்ரீராமாநுஜபிரபாவகல்பகமு" என்ற பெயர்களில் இராமாநுசரின் கதையை வெளியிட்டுள்ளனர். "ராமாநுஜபிரதிஜ்ங" என்ற பெயரில் எமஸ்கோ பதிப்பும் ஒன்று வெளிவந்துள்ளது.

இராமாநுசரின் சீடரான கூரத்தாழ்வாரின் கதையைக் கூறும் ஒரு துவிபதநூல் உள்ளதாக டி. சுசீலா என்பவர் கூறுவர்.[122] அவ்வாறே ஆசிரியர் பெயர் தெரியாத "பெருங்கூரத்தாள்வாரு சரித்ரமு" என்னும் யக்ஷகானமும் ஒன்று உள்ளதாக எஸ். வி. ஜோகாராவு அவர்கள் கூறுவர்.[123]

### 2.6.0 ஆச்சாரியர்களின் அருளிச்செயல்கள்:

ஆச்சாரியர்கள் அருளிய நூல்களும் பல தெலுங்கில் வெளிவந்துள்ளன. அவற்றுள் சில குறிப்பிடத்தக்கன. கந்தாடை சேஷாச்சாரியர் என்பவர் இராமாநுசரின் ஸ்ரீபாஷ்யத்தை "ஆந்த்ரஸ்ரீபாஷ்யமு" என்னும் பெயரில் மொழிபெயர்த்துள்ளார். பிரதிவாதிபயங்கரம் அண்ணங்கராச்சாரியர் இராமாநுசரின் கத்யத்ரயத்தைத் தெலுங்குப் பதப்பொருளுடன் 1950-இல்

பதிப்பித்துள்ளார். மேலும் இவர் ஸ்ரீவசனபூஷணவியாக்கியானமும், முழுச்சுப்படி வியாக்கியானம், ஆச்சாரியஹ்ருதயம் முதலான நூல்களையும் தெலுங்கில் பதப்பொருளுடன் வெளியிட்டுள்ளார். வித்வான் தென்னேடி தீனதயாளு நாயுடு என்பவர் "**ஸ்ரீவசனபூஷணசாரசங்கிரஹமு**" (1951) என்னும் பெயரில் ஸ்ரீவசனபூஷணத்தின் சிறப்பம்சங்களைச் சிறு நூலாக இயற்றியுள்ளார்.

இன்றைய நூற்றாண்டில் பலர் ஆச்சாரியர்களின் நூல்களை மொழிப்பெயர்த்தும் உரை வகுத்தும் வெளியட்டுள்ளனர். நல்லம்திகழ் சக்ரவர்த்தி டம்யாலலக்ஷ்மி நரசிம்மாச்சாரியர் என்பவர் பிள்ளை லோகாச்சாரியரின் தத்வத்திரயத்தை மொழிப்பெயர்த்து "**ஆந்திரதத்வத்ரயமு**" என்னும் பெயரில் வெளியிட்டுள்ளார். வடமொழியில் உள்ள வேதாந்த தேசிகரின் நூலை மொழிபெயர்த்துத் திருமலபுரிஹெறள்ள வேங்கடகோனப்பாச்சாரியர் என்பவர் "**ஹம்சசந்தேஸமு**" என்னும் பெயரில் வழங்கியுள்ளார். கோபாலாச்ாரியர் என்பவர் "**லோகோஜ்ஜீவனமுகை ஆள்வாருலக்ருஷி**" (உலக வாழ்விற்கு ஆழ்வார்களின் முயற்சி) என்னும் நூலை இயற்றியுள்ளார். இந்நூல் அழகிய மணவாளப் பெருமாள் நாயனாரின் ஆச்சார்ய ஹ்ருதயத்தின் மொழிபெயர்ப்பு ஆகும்.

பாலவன்ச திருமல குடிமெல்ல வேங்கட

லக்ஷ்மி நரசிம்மாச்சாரியர் என்பவர், இராமாநுசநூற்றந்தாதி , ஸ்ரீவசனபூஷணம், உபதேச ரத்தினமாலை, ஞானசாரம் முதலான நூல்களுக்குப் பதவுரையும் தெளிவுரையும் தந்துள்ளார்.

தெலுங்கில் ஆச்சாரியர்களின் பல நூல்கள் வெளிவந்துள்ளன. அவற்றுடன் ஸ்ரீவைஷ்ணவ கிரந்தமுத்ராபகச் சபையினர் ஆச்சாரியர்களின் பல நூல்களைத் தெலுங்கில் எழுத்துப் பெயர்ப்பாக வெளியிட்டுள்ளனர்.

முடிபுகள்:

தெலுங்கு வைணவ இலக்கியத்தின் தந்தையான கிருஷ்ணமாச்சாரியர் ஆழ்வார்கள் அடிச்சுவட்டைப் பின்பற்றித்தம் கீர்த்தனைகளாலும் வசனங்களாலும் வைணவத்தைப் பரப்பியதை அறியலாம். அவருக்குப்பின் தாள்ளபாக்கம் கவிஞர்கள் பக்தியியக்கமாகச் செயல்பட்டுத் தம் சங்கீர்த்தனங்களாலும் நூல்களாலும் வைணவத்தை ஆந்திர நாட்டில் உயர்ந்த நிலைக்குக் கொண்டு வந்தனர். மேலும் அவர்தம் கீர்த்தனைகளில் ஆழ்வார்கள் போக்கு இருந்ததையும் காணலாம். இவற்றுடன் ஆழ்வாராச்சாரியர் பற்றிய நூல்களும் அவர்தம் அருளிச் செயல்களும் தெலுங்கில் பெருமளவில் வந்துள்ளமை புலப்படுகிறது. இன்றும் ஆந்திர நாட்டில் ஆழ்வாராச்சாரியர்கள் சிறப்பையும் வைணவத்தையும் போற்றி வரும் திருநாமங்கள் பரவலாக நிலவி வருகின்றன.

# குறிப்பெண் விளக்கம்

1. C. R. Sarma; **Tamil Elements in Telugu Literature**; P.157.
2. Ibid.; P.158.
3. ஆருத்ரா; சமக்ர ஆந்த்ர சாஹித்யம்; தொகுதி மூன்று; பப. 65-66.
4. எம். குலசேகரராவு (தொ. ஆ.); முன்னுரை; சிம்மகிரி வசனமுலு; ப.X.
5. மேற்படி; ப. VII.
6. வேடூரி ஆனந்தமூர்த்தி; தாள்ளபாக்க கவுல பதகவிதலு பாஷா பிரயோக விஷேசாலு; பாகம் இரண்டு; பப. 21-36.
7. எம். குலுசேகரராவு; முன்னுரை; சி. வ.; ப. III.
8. தாள்ளபாக்கம் திருவேங்களநாதர்; பரமயோகி விலாசமு; துவி. ப. எஎ. 48-50.
9. சி. வ. ; வச. எ. 32.
10. சி. வ.; வச. எ. 9.
11. சி. வ.; வச. எ. 17.
12. சி. வ.; வச. எ. 32.
13. சி. வ.; வச. எ. 32.
14. சி. வ.; வச. எ. 20.
15. சி. வ.; வச. எ. 58.
16. திருமழிசையாழ்வார்; நான்முகன்

திருவந்தாதி; பா. எ. 20.

17. மேற்படி; பா. எ. 2.
18. நம்மாழ்வார்; திருவாய்மொழி; பா. எ.1:9:1.
19. பெரியாழ்வார்; பெரியாழ்வார் திருமொழி; பா. எ. 4:9:1.
20. திருமங்கையாழ்வார்; பெரிய திருமொழி; பா. எ. 5:4:6.
21. சி. வ.; வச. எ. 21.
22. தொண்டரடிப்பொடியாழ்வார்; திருமாலை; பா. எ. 43.
23. மேற்படி; பா. எ. 42.
24. சி. வ.; வச. எ. 11.
25. சி. வ.; வச. எ. 3.
26. தொண்டரடிப்பொடியாழ்வார்; மு. கூ. நூ. ; பா. எ. 9.
27. திருமழிசையாழ்வார்; மு. கூ. நூ.; பா. எ. 2.
28. சி. வ.; வச. எ.16.
29. குலசேகராழ்வார்; பெருமாள் திருமொழி; பா. எ. 2:2.
30. மேற்படி; பா. எ. 2:4.
31. நம்மாழ்வார்; திருவாய்மொழி; பா. எ. 3:7:9.
32. சி. வ.; வச. எ. 47.
33. நம்மாழ்வார்; மு. கூ. நூ.; பா. எ. 7:5:3.
34. சி. வ.; வச. எ. 3.
35. வேடூரி ஆனந்த மூர்த்தி; மு. கூ. நூ.; ப. 33.
36. பொய்கையாழ்வார்; முதல் திருவந்தாதி; பா. எ. 11.
37. சி. வ.;வச. எ. 32.

38. எம். குலசேகரராவு; முன்னுரை; சி. வ.; ப. XXIII.
39. தூ. சேதுபாண்டியன்; எஸ். ஜெயப்பிரகாஷ்; **தெலுங்கு இலக்கியம் ஓர் அறிமுகம்**; ப. 51.
40. பொன். சௌரிராசன்; க. சர்வோத்தமன்; **அன்னமய்யா ஓர் அறிமுகம்**; ப.5.
41. வேடூரி ஆனந்தமூர்த்தி; மு. கூ. நூ.; பப. 202-203.
42. மேற்படி; ப. 277.
43. மேற்படி; ப. 278.
44. மேற்படி; பப. 68-73.
45. மேற்படி; ப. 74.
46. பின்னிணைப்பில் காண்க; பி. எ. 1.
47. ஆருத்ர; சமக்ராந்திர சாஹித்யமு; தொகுதி ஆறு; ப. 160.
48. ஸ்ரீ பிரபாகர சாஸ்திரி; முன்னுரை; **அன்னமாச்சாரிய சரித்ர**; பப. 121-122.
49. சேனை முதலி அம்சமாகப் பிறந்ததாக குருபரம்பரைகள் கூறும்.
50. ஜே. முனிரத்தினம்; **அன்னமய்யா - ஆள்வாருலு – துலநாத்மக பரிசீலன**; பப. 53-54.
51. **தாள்ளபாக்கவாரி அத்யாத்மக சங்கீர்த்தனமுலு**; தொகு. 11; கீ. எ. 2:55.
52. முதலாழ்வார்கள் மூவர்; திருமழிசையாழ்வார், திரப்பாணாழ்வார், குலசேகராழ்வார், பெரியாழ்வார், ஆண்டாள், திருமங்கையாழ்வார், நம்மாழ்வார் ஆகியோர்.
53. நம்மாழ்வார்; மு. கூ. நூ. ; ப. எ. 3:3:8.

54. பொய்கையாழ்வார்; மு. கூ. நூ.; பா. எ. 26.
55. திருமழிசையாழ்வார்; மு. கூ. நூ.; பா. எ. 45.
56. தாள்ளபாக்கவாரி அத்யாத்மக சங்கீர்த்தனமுலு; தொகு.9; கீ. எ. 182.
57. குலசேகராழ்வார்; மு. கூ. நூ.; பா. எ. 9.
58. திருமங்கையாழ்வார்; பெரிய திருமொழி; பா. எ. 1 :1:5.
59. மேற்படி; பா. எ. 1:1:9.
60. மேற்படி: பா. எ. 1:10:9.
61. நம்மாழ்வார்; திருவாய்மொழி; பா. எ. 3:3:5.
62. தாள்ளபாக்கவாரி அத்யாத்மக சங்கீர்த்தனமுலு; தொகு. 5; பா. எ. 247.
63. மேற்படி; தொகு. 2; கீ. எ. 148.
64. மேற்படி; தொகு.11; கீ. எ. 1.
65. மேற்படி; தொகு.2; கீ. எ. 377.
66. மேற்படி; தொகு.7; கீ. எ. 235.
67. நம்மாழ்வார்; திருவாய்மொழி; பா. எ. 3:9:1.
68. மேற்படி; பா. எ. 3:9:9.
69. திருமழிசையாழ்வார்; மு. கூ. நூ.; பா. எ. 75.
70. மேற்படி; பா. எ. 74.
71. தாள்ளபாக்கவாரி அத்யாத்மக சங்கீர்த்தனமுலு; தொகு.2; கீ. எ. 234.
72. மேற்படி; தொகு. 8; கீ. எ. 67.
73. பொன். சௌரிராஜன்; க. சர்வோத்தமன்; மு. கூ. நூ.; பப. 10-11.
74. தாள்ளபாக்கவாரி அதயாத்மக சங்கீர்த்தனமுலு;

தொகு. 11; பாகம் மூன்று; கீ. எ. 117.

75. நம்மாழ்வார்; திருவாய்மொழி; பா. எ. 3:7:9.
76. தொண்டரடிப்பொடியாழ்வார்; திருமாலை; பா. எ. 43.
77. குலசேகராழ்வார்; மு. கூ. நூ.; பா. எ. 2:6.
78. நம்மாழ்வார்; திருவாய்மொழி; பா. எ. 2:6.
79. மேற்படி; பா. எ. 3:7:8.
80. தாள்ளபாக்கவாரி அத்யாத்மக சங்கீர்த்தனமுலு; தொகு. 7; கீ. எ. 249.
81. மேற்படி; தொகு.2; பா. எ. 352.
82. குலசேகராழ்வார்; மு. கூ. நூ., பா. எ. 2:2.
83. தாள்ளபாக்கவாரி அத்யாத்மக சங்கீர்த்தனமுலு; தொகு.7; கீ. எ. 1.
84. நம்மாழ்வார்; திருவாய்மொழி; பா. எ. 1:10:6.
85. திருமங்கையாழ்வார்; பெரிய திருமொழி; பா. எ. 1:1:6.
86. தாள்ளபாக்கவாரி அத்யாத்மக சங்கீர்த்தனமுலு; தொகு. 2; கீ. எ. 148.
87. தாள்ளபாக்கவாரி சிருங்கார சங்கீர்த்தனமுலு; தொகு. 4; கீ. எ. 25.
88. தொண்டரடிப்பொடியாழ்வார்; திருப்பள்ளியெழுச்சி; பா. எ. 1.
89. மேற்படி; பா. எ. 9.
90. தாள்ளபாக்கவாரி சிருங்கார சங்கீர்த்தனமுலு; தொகு. 3; கீ. எ. 256.
91. ஆ. சுதாகர்; ஆழ்வார்கள் - அன்னமாச்சாரியர்

**பாடல்களில் கண்ணன் - பிள்ளைத் திருவிளையாடல்கள்**; பா. 77-78.

92. வேடூரி ஆனந்தமூர்த்தி; மு. கூ. நூ.; பா. 218.
93. மேற்படி; ப.6.
94. வேடூரி ஆனந்தமூர்த்தி; **வைஷ்ணவாந்ர வாங்மயமு**; பா. 209.
95. கிருஷ்ணதேவராயர்; **ஆமுக்தமால்யத**; செ. எ. 1:84.
96. மேற்படி; செ. எஎ. 1:54.
97. மேற்படி; செ. எஎ. 6:7, 2:97, 4:43, 4:10.
98. திருவேங்களநாதர்; **பரமயோகி விலாசமு**; துவி. ப. எஎ. 68-70.
99. மேற்படி; துவி. ப. எஎ. 877-880, 881-886, 891-910.
100. மேற்படி; துவி. ப. எஎ. 8590-8656.
101. சி. ஆர். சர்மா; **தமிள விந்து**; ப. 35.
102. பின்னிணைப்பில் காண்க; பி. எ. 2.
103. பின்னிணைப்பில் காண்க; பி. எ. 3.
104. The Hindu, Sunday March 31-1991; P.3.
105. ஈ. பாலகிருஷ்ணா ரெட்டி; **விஷ்ணுபக்தி தூத்பருடு-விப்ர நாராயண பரிசீலமுலு**; ப. 93.
106. N. Venkata Rao; **Kuloasekara in Telugu Literature**; Madras University Journal; Vol.XXIII.
107. எஸ். வி. ஜோகாராவு; **ஆந்த்ர யக்ஷகான வாங்மய சரித்ர**; பகுதி இரண்டு; ப. 132.
108. C. R. Sarma; **Tamil Elements in Telugu Literature**; P. 191.
109. டி. சுசீலா; **ஆந்த்ர துவிபத சாஹித்ய சரித்ர**; பப.

275-276.

110. **Journal of Sri Venkateswara Oriental Institute**; Vol. XV; 1954; PP. 1-29.

111. கிடாம்பி நரசிம்மாச்சாரியர்; திருநாமமுலு - சமக்ர பரிசீலனமு; ப. 23.

112. மரிகண்டி ஸ்ரீ ரங்காச்சாரியர்; முன்னுரை; திருநாமமுலு; கிடாம்பி நரசிம்மாச்சாரிய (தொ. ஆ.); ப. XI

113. கிடாம்பி நரசிம்மாச்சாரியர் (தொ. ஆ.); திருநாமமுலு; ப.39.

114. மேற்படி; பப. 40-59; 27 பாடல்கள்.

115. மேற்படி; ப. 44.

116. மேற்படி; ப. 322.

117. டி. சுசீலா; மு. கூ. நூ.; பப. 260-261.

118. மேற்படி; ப. 321.

119. எஸ். வி. ஜோகாராவு; மு. கூ. நூ.; பாகம் இரண்டு; பா. 72.

120. மேற்படி; ப. 137.

121. மேற்படி; ப. 477.

122. டி. சுசீலா; மு. கூ. நூ.; ப. 263.

123. எஸ். வி. ஜோகாராவு; மு. கூ. நூ. ; பகுதி இரண்டு; ப. 449.

பின்னிணைப்பு எண்: 1

## தாள்ளபாக்கக் கவிஞர்கள் – படைப்புகள்

| வ. எண் | பெயர் | எ. | படைப்புகள் |
|---|---|---|---|
| 1. | அன்னமாச்சாரியர் | 1. | அத்யாத்மக – சங்கீர்த்தனமுலு |
| | | 2. | சிருங்கார சங்கீர்த்தனமுலு |
| | | 3. | சிருங்கார – மஞ்சரி |
| | | | சிருங்கார – லக்ஷன |
| | | | [வடமொழி கிடைக்கவில்லை] |
| 2. | பெத்த திருமலாச்சாரியர் | 1. | சிருங்கார – சங்கீர்த்தனமுலு |
| | | 2. | வைராக்கிய வசன – கீதலு |
| | | 3. | சிருங்கார – தண்டகமு |
| | | 4. | சக்ரவால – மஞ்சரி |
| | | 5. | சிருங்காரவிருத்த – சதகமு |
| | | 6. | உதாஹரணமுலு |
| | | 7. | நீதிஸீச – சதகமு |
| | | 8. | சுதர்சன – ரகள |
| | | 9. | ரேப – ரகாரமுலு |
| | | 10. | ஆந்திர – வேதாந்த [அ] பகவத்கீதா |
| 3. | சின்னதிருமலாச்சாரியர் | 1. | அத்யாத்மக – சங்கீர்த்தனமுலு |
| | | 2. | சிருங்கார – சங்கீர்த்தனமுலு |
| | | 3. | அஷ்டபாஷா – தண்டக [வடமொழி] |
| | | 4. | சங்கீர்த்தன – லக்ஷன |
| 4. | சின்னன்ன [அ] திருவேங்களநாதர் | 1. | பரமயோகி விலாசமு |
| | | 2. | அஷ்ட – மஹிஷி – கல்யாணமு |
| | | 3. | உஷாப |

பின்னிணைப்பு எண்: 2

## ஆழ்வார்கள் அனைவரின் கதை கூறும் நூல்கள்

| வ.எண் | நூல் பெயர் | நூலாசிரியர் | ஆண்டு | வெளியீடு, இடம் |
|---|---|---|---|---|
| 1. | ஆள்வாருல சரித்ரமு 1 & 2 | சாமினேனி பார்த்தசாரதி | 1894 | சென்னை |
| 2. | ஆள்வாராச்சாரியுல வைபவமு | வி. பாலகிருஷ்ண முதலியார் | 1909 | சென்னை |
| 3. | திவ்யசூரிப்ர பாவமு | பிர. ப. அண்ணங்காராச்சாரியர் | ... | ... |
| 4. | ஆள்வாருள வைபவமு | பிர. ப. அண்ணங்காராச்சாரியர் | ... | ... |
| 5. | மஹா பக்த விஜயமு | மேடேபள்ளிவேங்கட ரமணாச்சாரியர் | ... | ... |
| 6. | துவாதசசூரி சரித்ர | கே. டி. எல். நரசிம்மாச்சாரி | 1973 | ஸ்ரீ கோதா கிரந்த மால; முசுனூரு |
| 7. | பக்துல கதலு | வி. வெங்கடரத்னம்ம | 1982 | சாத்விமீராபாய்; பிடுகுராலு |
| 8. | திவ்யசூரி ஹ்ருதயமு | முவ்வா ஸ்ரீநிவாசப்பெருமாள் | 1982 | ஸ்ரீவேணுகோபால சேவா சிரமாதிபதி; பூடிவாட |
| 9. | குருபரம்பராப்ரபாவமு | சோமந்தூரி அனந்தாச்சாரியர் | ... | ... |
| 10. | ஆள்வாராச்சார்யுல சரித்ர | டி. என். லக்ஷ்மணாச்சாரியர் | ... | ... |
| 11. | பரமபாகவத சரித்ரமு | கணபதிவரபு வேங்கடகவி | ... | ... |
| 12. | பரமபாகவத சரித்ர | கட்டா வரதராஜு | ... | ... |
| 13. | ஆள்வாருள திவ்ய வைபவமு | டி. ராகவய்ய | ... | ... |
| 14. | திவ்யசூரி சரித்ரமு | எஸ். டி. வி. ராகவாச்சாரியர் | ... | ... |
| 15. | ஆச்சார்ய வைபவமு | ஹொஸதுர்கமு வேதாச்சாரியர் | ... | ... |

பின்னிணைப்பு எண்: 3

## ஆழ்வார்கள் – ஒவ்வொருவரின் கதை கூறும் நூல்கள்
## தொண்டரடிப்பொடியாழ்வார்

| வ. எண் | நூல் பெயர் | நூலாசிரியர் | இலக்கிய வடிவம் | ஆண்டு | வெளியீடு, இடம் |
|---|---|---|---|---|---|
| 1. | விப்ரநாராயண சரித்ரமு | சதுலவாடமல்லன | காப்பியம் | 1915 | ஆந்திர சாஹித்ய பரிசத். காகிநாடா |
| 2. | வைஜயந்தி விலாசமு | சாரங்குதம்மய்யா | காப்பியம் | 1909 | வா வில்லராமசாமி சாஸ்திரி அண்டு சன்ஸ், சென்னை |
| 3. | தொண்டரடிப்பொடி ஆள்வாருல சரித்ரமு | பி. ஸ்ரீராமசாஸ்திரி | ... | 1896 | சென்னை |
| 4. | விப்ரநாராயண – நாடகம் | பாலுகண்டி லக்ஷ்மண நரசிம்மராவு | நாடகம் | 1922 | ... |
| 5. | வைஜயந்தி வைபவமு | கோமாந்தூரி கிருஷ்ணமாச்சாரியர் | காப்பியம் | 1962 | ... |
| 6. | விப்ரநாராயண சரித்ர | சக்ரபுரிராகவாச்சாரியர் (16 நூ) | யக்ஷகானம் | ... | ... |
| 7. | விப்ரநாராயண சரித்ர | தஞ்சாவூர் விஜயராகவ நாயக்கர் (கி. பி. 1633 – 1973) | யக்ஷகானம் | 1950 | தஞ்சாவூர் சரஸ்வதிமகால் |
| 8. | பக்தாங்க்ரேனு சரித்ரமு | உத்தரரங்ககவி (18 நூஸ்ரீ | யக்ஷகானம் | ... | ... |
| 9. | விப்ரநாராயண சரித்ரமு | வேதாந்த வெங்கட சுப்ரமணிய பாகவதர் | ஹரிகதை | 1902 | சென்னை |

பின்னிணைப்பு எண்: 4

## ஆண்டாள் கதை கூறும் தெலுங்கு நூல்கள்

| வ.எண் | நூல் பெயர் | நூலாசிரியர் | ஆசிரியர் காலம் | நூல் வெளி வந்த ஆண்டு | வெளியீட்டாளர்/ வெளியிட்ட நிறுவனம்/இடம் |
|---|---|---|---|---|---|
| 1. | ஆமுக்தமல்யத | ஸ்ரீகிருஷ்ணதேவராயர் | 16 நூ. | 1930 | வாவில்ல ராமஸ்வாமி சாஸ்திரி அன்டு சன்ஸ், சென்னை |
| 2. | பரமயோகி விலாசமு | திருவேங்களநாதர் | 16 நூ. | 1928 | சூர்யராவு பகதூர், காகிநாடா |
| | | | | 1938 | திருமலை திருப்பதி தேவஸ்தானம், திருப்பதி |
| 3. | பரமயோகி விலாசமு | சித்திராஜு, திம்மராஜு | 16 நூ. | 1910 | போதப்ரகட பிரம்மானந்தராவு, காகிநாடா |
| 4. | ஆசார்ய சூக்தி முக்தாவளி | நம்பூரி கேசவாச்சாரியர் | 18 நூ. | 1878 | ஸ்ரீநிகேதன் அச்சகக்கூடம், சென்னை |
| | | | | 1922 | ஆர்.வெங்கடேஸ்வர் |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| | | | | | அன் கம்பெனி, சென்னை |
| 5. | ஆண்டாள் சரித்ரமு | கொத்தூரு ரங்க நாயகம்மா | 20 நூ. | 1907 | ஸ்ரீ குருமூர்த்தி ஸ்ரீநிவாச அச்சுக்கூடம், சென்னை |
| | | | | 1927 | ஸ்ரீராமாநுசவிலாச அச்சுக் கூடம், சென்னை |
| 6. | ஸ்ரீ ஆண்டாள்ரு | தேவுலபள்ளிகிருஷ்ண சாஸ்திரி | 20 நூ. | 1975 | தேவுலபள்ளி கிருஷ்ணசாஸ்திரி சன்மான சங்கம், சென்னை |
| 7. | கோதாவைபவமு | எக்கிரால கிருஷ்ணமாச்சாரியர் | 20 நூ. | 1971 | உலக ஆசிரியர் அறக்கட்டளை, விசாகப்பட்டினம் |
| 8. | ஸ்ரீ கோதா கல்யாணமு | பீசபாடி ரங்காச்சாரியர் | 20 நூ. | 1980 | ... |
| 9. | கோதா தேவி | தீவிரங்காச்சாரியர் | 20 நூ. | 1981 | ஸ்ரீவல்லபராய கிரந்தமால |
| 10. | ஆமுக்தமால்யத நாடகமு | வாரணாசிபாலகிருஷ்ண அனந்தபத்மநாபசாஸ்திரி | 20 நூ. | 1986 | வாரணாசி கிரந்தமாலா; சித்தூர் |
| 11. | கோதாதேவி | ஆடூரி மரிங்கண்டி புருஷோத்தமாச்சாரியர் | 20 நூ. | 1991 | ... |
| 12. | கோதாதேவி சரிதம் பிரபாதகீதம் | துக்கிசெட்டி வெங்கட ரமணய்யா | 20 நூ. | 1991 | நெல்லூர் |

## பயன்பட்ட நூல்கள்


1. அருணாச்சலக் கவுண்டர், கு. — **தமிழ்ப் பண்பாட்டில் வைணவம்;** கோவை; சமுதாயம் பிரசுராலயம்; 1982

2. அருணாசலம், மு. — **தமிழ் இலக்கிய வரலாறு;** பதினைந்தாம் நூற்றாண்டு; மாயூரம்; காந்தி வித்தியாலயம்; 1969; மு. ப.

3. அருணாசலம், மு. — **தமிழ் இலக்கிய வரலாறு;** பன்னிரெண்டாம் நூற்றாண்டு; இரண்டாம் பாகம்; மாயூரம்; காந்தி வித்தியாலயம்; 1973.

4. இராகவையங்கார், மு. — **ஆழ்வார்கள் காலநிலை;** முதல் பாகம்; திருச்சிராப்பள்ளி; பழனியப்பா பிரதர்ஸ்; பிற குறிப்புகள் இல்லை.

5. இராகவையங்கார், மு. — ஆராய்ச்சித் தொகுதி; தஞ்சாவூர்; தமிழ்ப் பல்கலைக் கழகம்; 1984; நிழற்படப் பதிப்பு.

6. இராசமாணிக்கம்பிள்ளை, மா. — பல்லவர் வரலாறு; சென்னை; கழக வெளியீடு; 1968; ம. ப.

7. இராசமாணிக்கம் பிள்ளை, மா. — சோழர் வரலாறு; மூன்று பாகங்கள்; சென்னை; எடுகேஷனல் பப்ளிஷிங் கம்பெனி; 1947; மு. ப.

8. இராமசந்திர தீக்ஷிதர் — மூன்றாம் குலோத்துங்க சோழன்; 1947; வெளியீடு பற்றிய குறிப்பு இல்லை.

9. இராமஸ்வாமிராமநுஜதாஸர், ஆர். — ஸ்ரீ வைஷ்ணவம்; சென்னை; ஆழ்வார்கள் அமுத நிலையம்; 1986; இ. ப.

10. கிருஷ்ணசாமி, அ. — விஜயநகரப் பேரரசின் வரலாறு; தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்; 1977; மு. ப.

11. கிருஷ்ணமாச்சாரியர் ஸ்வாமிகள் — அனந்தான் பிள்ளை, திருமலை; **திருமலையும் வைஷ்ணவ ஸம்ப்ரதாய நெறியும்; திருப்பதி;** திருமலை - திருப்பதி தேவஸ்தானம்; 1991.

12. கிருஷ்ணன், ப. — தமிழ் நூல்களில் தமிழ்மொழி, தமிழ் இனம், தமிழ்நாடு; சென்னை; இளந்தமிழர்; 1984; மு. ப.

13. கிருஷ்ணசாமி அய்யங்கார், எஸ். — வேங்கடேச தேவஸ்தான வரலாறு (திருப்பதியின் வரலாறு); இரண்டு பாகங்கள்; டி. வி. எஸ். ராகவன் (மொ. பெ. ஆ.); 1984; மு. ப.

14. சர்மா, சி. ஆர். — தெலுங்கு இலக்கிய பலகணி; சென்னை; புதுமைப் பதிப்பகம்; 1979.

15. சர்மா, சி. ஆர். — தெலுங்கு இலக்கியம் ஒரு கண்ணோட்டம்; வி. கிருஷ்ணமூர்த்தி (மொ. பெ. ஆ.); சென்னை; பாரி நிலையம்; 1987; மு. ப.

16. சுதாகர், ஆர். — ஆழ்வார்கள் அன்னமாச்சாரியார் பாடல்களில் கண்ணன் பிள்ளைத்திருவிளையாடல்கள் - ஓர் ஒப்பாய்வு; சித்தூர்; அறுமுனிப் பதிப்பகம்; 1984; மு. ப.

17. சுப்பிரமணியன், ச. வே. — திராவிட மொழி இலக்கியங்கள் - அறிமுகம்; சென்னை; உலக தமிழாராய்ச்சி நிறுவனம்; 1983; மு. ப.

18. சுவாமிநாதன், ஏ. — தமிழக வரலாறும் பண்பாடும்; சென்னை; தீபா பதிப்பகம்; 1987.

19. சேதுராமன், என். — பாண்டியர் வரலாறு; கும்பகோணம்; 1989; மு. ப.

20. சேகஷாத்திரி, தி. — ஹிந்து மதம் ஓர் அறிமுகம்; மதுரை; அத்வய பிரசுரம்; 1975, திருத்திய பதிப்பு.

21. சௌரிராஜன், பொன். — சர்வோத்தமன், க.; அன்னமய்யா ஓர் அறிமுகம்; திருப்பதி; திருமலை - திருப்பதி தேவஸ்தானம்; 1980; மலிவுப் பதிப்பு

22. ஞானசம்பந்தன், அ. ச. — தமிழும் சமயமும்; உலகத் தமிழ் மாநாடு விழா மலர்; மா. முத்துசாமி (மலர்க்குழு தலைவர்); சென்னை ; 1968.

23. தட்சிணாமூர்த்தி, அ. — தமிழர் நாகரிகமும் பண்பாடும்; சென்னை; ஐந்திணைப் பதிப்பகம்;

1987; மு. ப.

24. பரந்தாமனார், அ. கி. — மதுரை நாயக்கர் வரலாறு; சென்னை; பாரி நிலையம்;1960; மு. ப.

25. பிள்ளை, கே. கே. — தமிழக வரலாறு - மக்களும் பண்பாடும்; தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்; 1977; ம. ப.

26. பொன்னுசாமி பிள்ளை, வ. — குலோத்துங்கர் மூவர்; சென்னை; கழக வெளியீடு; 1954; மு. ப.

27. ராதாகிருஷ்ண பிள்ளை — பிற்கால வைணவம்; சென்னை; அல்லயன்ஸ் கம்பெனி; 1987; ம. ப.

28. வரதராசன், மு. — தமிழ் இலக்கிய வரலாறு; சென்னை; சாஹித்ய அக்காதெமி; 1972.

29. வரதராஜ ஐயர், ஈ. எஸ். — தமிழ் இலக்கிய வரலாறு (கி. பி. 1 முதல் 1100);அண்ணாமலை நகர்; அண்ணாமலைப் பல்கலைக்கழகம்; 1979; இ. ப.

30. விமலானந்தம், மது. ச. — தமிழ் இலக்கிய வரலாற்றுக் களஞ்சியம்; முதல் தொகுதி, சென்னை; ஐந்திணைப் பதிப்பகம்; 1987; மு. ப.

31. வேங்கடராமையா, கே. எம். — தஞ்சை மராட்டியர் கால அரசியலும் சமுதாய வாழ்க்கையும்; தஞ்சாவூர்; தமிழ் பல்கலைக் கழகம்; 1984; மு. ப.

32. வேலுப்பிள்ளை, ஆ. — தமிழ் இலக்கியத்தில் காலமும் கருத்தும்; சென்னை; தமிழ்ப் புத்தகாலயம்; 1969; மு. ப.


## தெலுங்கு நூல்கள்


1. அனந்தகிருஷ்ண சர்மா, — ஸ்ரீநிவாசாசாரியர், ஏ. வி. (ப. ஆ.); தாள்ளபாக்கவாரி அத்யாத்மக சங்கீர்த்தனமுலு; தொகுதி ஏழு; திருப்பதி;திருமலை - திருப்பதி தேவஸ்தானம்; 1951.

2. அனந்த கிருஷ்ண சர்மா — தாள்ளபாக்கவாரி அத்யாத்மக சங்கீர்த்தனமுலு; தொகுதி எட்டு; திருப்பதி; திருமலை - திருப்பதி தேவஸ்தானம்; 1952.

| | | |
|---|---|---|
| 3. | அனந்த கிருஷ்ண சர்மா | தாள்ளபாக்கவாரி அத்யாத்மக சங்கீர்த்தனமுலு; தொகுதி ஒன்பது; திருப்பதி; திருமலை - திருப்பதி தேவஸ்தானம்; 1952. |
| 4. | அனந்த கிருஷ்ண சர்மா | தாள்ளபாக்கவாரி அத்யாத்மக சங்கீர்த்தனமுலு; தொகுதி பதினொன்று இரண்டு பாகங்கள்; திருப்பதி; திருமலை - திருப்பதி தேவஸ்தானம்; 1955. |
| 5. | ஆருத்ர | சமக்ர ஆந்த்ர சாஹித்யம்; தொகுதி மூன்று; சென்னை எம். சேஷாசலம் அன்டு கம்பெனி; 1965; மு. ப. |
| 6. | ஆருத்ர | சமக்ர ஆந்த்ர சாஹித்யம்; தொகுதி ஒன்பது; சென்னை எம். சேஷாசலம் அன்டு கம்பெனி; 1966; மு. ப. |
| 7. | ஆனந்தமூர்த்தி | வேடூரி; தாள்ளபாக்க கவுல கிருதுல விவித சாஹிதிப்ரக்ரியலு; வி. சந்திரகலா, வி. பிரபாகர் (வெளி.) ஐத்திராபாத்து; 1974; மு. ப. |
| 8. | ஆனந்தமூர்த்தி | தாள்ளபாக்க கவுல பதகவிதலு பாஷாப்ரயோக விசேஷாலு; இரண்டாம் பாகம்; வி. சந்திரகலா, வி. பிரபாகர் (வெளி.); 1976; மு. ப. |
| 9. | கலாவதி | வங்கிரெட்டி; தெலுகுலோ வைஷ்ணவ க்ஷேத்ர மஹாத்ம்யகாவ்யமுல அனுஸ்லனமு; திருப்பதி; திருவேங்கடவன் பல்கலைக்கழகம்; 1986; நூலாக வெளிவராத பி. எச். டி. ஆய்வேடு. |
| 10. | கிருஷ்ணமாச்சாரியர் | சிம்மகிரி வசனமுலு; எம். குலசேகர ராவு (தொ. ஆ.); 1968; மு. ப. |
| 11. | சத்தியநாராயண | கம்பம்பாடி; ஆந்த்ருல சம்ஸ்க்ருதி சரித்ர; பாகம் இரண்டு; மஹீதர ராமமோஹன ராவு (மொ. பெ. ஆ); ஐத்திராபாத்து; ஐத்திராபாத்து புக் ட்ரெஸ்ட்; 1982; மு. ப. |
| 12. | நரசிம்மாச்சாரியர் | கிடாம்பி (தொ. ஆ.); திருநாமமுலு; |

ஐத்திராபாத்து;1983; மு.ப.

13. நரசிம்மாச்சாரியர் — திருநாமமுலு - சமக்ர பரிசீலனமு; 1984; மு. ப.

14. நாகய்யா, ஜி. — தெலுகு சாஹித்ய சமிக்ஷ; திருப்பதி; நவ்யபரிசோதக பிரசுரணலு; 1983.

15. நாராயண ரெட்டி, சி. — ஆதுனிகாந்த்ர கவித்வமு - சம்பிரதாயமுலு பிரயோகமுலு; சிகந்திராபாத்து; சிவாஜி பிரஸ்; 1967.

16. சுசிலா, டி. — ஆந்த்ர திவிபத சாஹித்ய சரித்ர; 1979; மு. ப.

17. பிரபாகர சாஸ்திரி — வேடூரி (ப. ஆ.); தாள்ளபாக்க வாரி சிருங்கார சங்கீர்த்தனமுலு; தொகுதி நான்கு; திருப்பதி; திருமலை - திருப்பதி தேவஸ்தானம்; 1947.

18. பிரபாகர சாஸ்திரி — அன்னமாசாரிய சரித்ரமு (அன்னமாசாரிய சரித்ர பீடிகா); திருப்பதி; திருமலை - திருப்பதி தேவஸ்தானம்; 1949; மு. ப.

19. பிரபாகர சாஸ்திரி — தாள்ளபாக்கவாரி அத்யாத்மக சங்கீர்த்தனமுலு; தொகுதி ஐந்து; திருப்பதி; திருமலை - திருப்பதி தேவஸ்தானம்; 1950.

20. முனிரத்னம், ஜெ. — அன்னமய்ய ஆள்வாருலு - துலனாத்மக பரிசிலன; திருப்பதி; திருவேங்கடவன் பல்கலைக் கழகம்; 1986; நூலாக வெளி வராத பி. எச். டி ஆய்வேடு.

21. ரமணய்யா, சி. — தாள்ளபாக்க சின்னன்ன க்ருதுலு - சவிமர்சக பரிசிலனமு; மதனபள்ளி; பத்மபால பப்ளிகேஷன்; 1984; மு. ப.

22. வரதாச்சாரியர் (ப. ஆ.) — ஸ்ரீ ராமாநுஜ கீர்த்தி கௌமுதி; தொகுதி மூன்று; குண்டூர்; ஸ்ரீ ராமாநுஜ கீர்த்தி கௌமுதி க்ரந்த மால; 1982; மு. ப.

23. விஜயராகவாச்சாரி — ஆதிநாராயண நாயுடு, ஜி (ப. ஆ.); தாள்ளபாக்கவாரி அத்யாத்மக சங்கீர்த்தனமுலு; தொகுதி இரண்டு; திருப்பதி; திருமலை - திருப்பதி தேவஸ்தானம்; 1936

24. விஜயராகவாச்சாரி — தாள்ளபாக்கவாரி சிருங்கார சங்கீர்த்தனமுலு; தொகுதி மூன்று; திருப்பதி; திருமலை - திருப்பதி தேவஸ்தானம்; 1937.

25. வீரபத்ர ராவு — சிறுகூரி; ஆந்த்ருல சரித்ரமு; தொகுதி ஐந்து;ராஜமகேந்திரவரம்; 1936; புதிய பதிப்பு.

## ஆங்கில நூல்கள்

1. Balendu Sekharam, K. — **The Andhras through the ages**; First and second parts; Hyderabad; Sri Saraswathi Book Depot; 1973; F. Ed.

2. Bhandarkar, R. G. — **Vaisnavism, Saivism and Minor Religious Systems;** New Delhi; Asian Education Services; 1983; Reprint.

3. Copra, P. N. — Ravindran, T. K., Subramanian, N.; **History of South India**; Vol. I; Ancient Period; New Delhi; S. Chand & Co. Ltd., 1979; F. Ed.

4. Goyal, S. R. — **A Relifious History of Ancient India**; Vol. II; Meerut; Kusuman jats Prakasam (Pub.); 1986.

5. Hanumantha Rao, B. S. L. — **Religion in Andhra**; Guntur; Tripura Sundari; 1973; F. Ed.

6. Minakshi, G. **Adminsitration and SocialLife under the Pallavas**; K. K. Pillay (Ed.); Madras; University of Madras; 1977; Revised Edition.

7. Mohanarangaswamy, D. **Contact, Relationship and mutual contributions of Tamils and Telugus through the ages upto 1530 A. D.**; Tirupati; Sri Venkateswara University; 1983; Unpublished thesis.

8. Neelakanta Sastri, K. A. **The Culture and History of the Tamils; Calcutta**; Firma K. L. Mukhopadhyay (Pub.); 1963; F. Ed.

9. Neelakanta Sastri, K. A. **The Cholas;** Madras; University of Madras; 1975.

10. Neelakanta Sastri, K. A. **A History of South India (From Prehistoric times to the Fall of Vijayanagar)**; Delhi; Oxford University Press; 1976; Fourth Ed.

11. Om Prakash **Religion and Society in Ancient India;** Delhi; Bharathiya Vidya Prakashan (Pub.); 1985; F. Ed.

12. Rajagopal Rao, T. **A historical sketch of Telugu literature**; New Delhi; Asian Education

Services; 1984.

13. Sarangapani, R. — **A critical study of Paripadal;** Madurai; Madurai Kamaraj University; 1984; F. Ed.

14. Sarma, C. R. — **Tamil elements in Telugu literature;** Madras; University of Madras; 1964; Unpublished Dissertation

15. Seetapathi, G. V. — **History of Telugu Literature;** New Delhi; Sahitya Academy; 1968.

16. Venkatmuni, T. — **The Satavahanas - A Socio Religious Study;** Tirupati; Sri Venkateswara University; 1986; Unpublished M. Phil. thesis.

17. Venkata Rao, N. — **"Kulasekara in Telugu Literature";** Madras University Journal; Vol. XXIII; No.1 and 2.

18. Vidyarthi, P. B. — **Early Indian Religious Thought;** New Delhi; Oriental Publishers & Distributors; 1976; F. Ed.

# நூலாசிரியரைப்பற்றி ....



முனைவர் சாந்தாடி சதாசிவன் ஆந்திர மாநிலத்தில் உள்ள ஏகாம்பாகுப்பம் என்னும் சிற்றூரில் தோன்றியவர். வணிகவியலில் இளங்கலைப் பட்டம் பெற்ற இவர் தமிழ் இலக்கியங்கள் மீது கொண்ட பற்றால் திருவேங்கடவன் பல்கலைக் கழகத்தில் படித்து தமிழில் முதுகலைப் பட்டம் பெற்றார். தொடர்ந்து அப்பல்கலைக் கழகத்திலேயே ஆய்வு மாணவராகச் சேர்ந்து **ஆந்திர நாட்டு அகநானூறு - ஓர் ஆய்வு** என்னும் தலைப்பில் ஆய்வு செய்து நிறைஞர் (M.Phil.) பட்டத்தைப் பெற்றார். தமிழிலும் தெலுங்கிலும் தோன்றிய ஆண்டாள் கதைகளைத் **தமிழ் தெலுங்கு இலக்கியங்களில் ஆண்டாள்** என்னும் தலைப்பில் ஆய்வு செய்து முனைவர் (Ph.D.) பட்டத்தையும் பெற்றார்.

இப்பொழுது காரைக்கால் ஜவகர் நவோதய வித்தியாலயாவில் தமிழாசிரியராகப் பணியாற்றிவரும் இவர் திறமையோடு கல்வித் தொண்டினையும் சமுகத்தொண்டினையும் செய்து வருகிறார். தாம் கற்பிக்கும் தமிழ்ப்பாடத்தில் பத்து மற்றும் பன்னிரண்டாம் வகுப்பு மாணவர்கள் முதல்நிலை பெறும் அளவிற்கு அவர்களை உருவாக்கி வருகிறார் என்பது பாராட்டுதற்குரியது. அந்தமான் நிக்கோபார் தீவுகளில் பணியாற்றும் பொழுது அங்கு வாழும் தமிழ் அறியா நிக்கோபாரியர் என்னும் பழங்குடியினருக்கு ஒன்பது ஆண்டுகள் தமிழ் பயிற்றுவித்த பெருமை இவருக்கு உண்டு.

கதை, கவிதை, கட்டுரை ஆகியவற்றை எழுதுவதில் இவர் பெரிதும் ஈடுபாடு கொண்டவர்.

தமிழகத்திலும், ஆந்திராவிலும் நிலவிய வைணவத்தின் வளர்ச்சியை ஒப்பாய்வு செய்யும் இந்நூல் ஆசிரியரின் முதல் முயற்சியாகும். அவர்தம் முயற்சி வெற்றியடைய மனமார

**ந. இராமலிங்கம்**<br>
முதல்வர்<br>
ஜவகர் நவோதய வித்தியாலயா<br>
காரைக்கால்.

---

Printed at:
**Kumaran Offset Press,** 124/3, Kamaraj Salai,
Karaikal Phone: 22618